# உணர்வரிய மெய்ஞ்ஞானம் ஓங்கு பெரும் பீடம்

## சிருங்கேரி வியாக்யான பீடத்தின் குரு பரம்பரை வரலாறு



( ஸ்ரீவித்யா சங்கரர் ஆலயம், சிருங்கேரி )



K. ஷண்முகநாதன், B. A., B. L.
திண்டுக்கல்.

உ

# உணர்வரிய மெய்ஞ்ஞானம் ஓங்கு பெரும் பீடம்



சிருங்கேரி வியாக்யான பீடத்தின்
குரு பரம்பரை வரலாறு
(A. D. 788 முதல் 1964 முடிய)

தமிழாக்கம்
திண்டுக்கல் வக்கீல்
பெ. கா. ஷண்முகநாதன், B. A., B. L.

Being a Translation of
THE THRONE OF TRANSCENDENTAL WISDOM
*by*
K. R. VENKATARAMAN

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ், ஸ்ரீரங்கம்.

1966

27-4



ஸ்ரீ சாரதாம்பாள், சிருங்கேரி.



ஸ்ரீ சங்கரபகவத்பாதர், சிருங்கேரி.

27-4

॥ श्रीः ॥

# சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குருவின் ஆசி.

श्री श्री शृंगेरी जगद्गुरु महासंस्थानम्, शृंगेरी मठ शारदापीठम्
पो. शृंगेरी-कडूर्, (मैसूर् स्टेट्)

**Sri Sri Sringeri Jagadguru Mahasamsthanam,
Sringeri Math Sharada Peetham**
P. O. SRINGERI-KADUR (Mysore State)

S. Sankaranarayana Rao, B. A., B. L.,
*Private Secretary.*

Office of the
Private Secretary to His Holiness
The Jagadguru Sri Shankaracharya of
Sri Sringeri Mutt
SRINGERI-KADUR

*Ref. No.* BL 5158/65-66

*Camp*: UJJAIN
*Date*: 4th Sept. 1966

To
Sri P. K. Shanmuganathan, B. A., B, L.,
Advocate,
Dindigul.

விஞ்ஞாபனம்.

குருபக்தரத்னம் ஸ்ரீ K. R. வெங்கடராமனுல் ஆங்கில பாஷையில் எழுதிப் பிரசுரிக்கப்பட்டிருக்கும் சிருங்கேரி மடத்தின் வரலாறு (The Throne of Transcendental Wisdom) திண்டுக்கல் அட்வோகேட் ஸ்ரீ P. K. ஷண்முகநாதனுல் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு பிரசுரமாகிறதென்று அறிய ஸ்ரீமஹாசந்நிதானம் மிகவும் மகிழ்ச்சி

அடைந்திருக்கிறார்கள். ஸ்ரீ ஷண்முகநாதனின் ஆழ்ந்த பக்தி, தீவிர உபாஸனை, சமயநூல்களில் நுட்பமான ஆராய்ச்சி, இவைகளைப்பற்றி ஸ்ரீ மகாசந்நிதானம் நன்ருக அறிந்ததே. ஸ்ரீசாரதாசந்திரமௌளீஸ்வரர் கிருபையால் ஸ்ரீ ஷண்முகநாதனுக்கு சகல சிரேயஸும் மேலும் மேலும் ஏற்பட வேண்டுமென்று ஸ்ரீ மகாசந்நிதானம் ஆசீர்வதிக்கிருர்கள்.

(Sd.) *S. Sankaranarayanan,*
**Private Secretary**
**to His Holiness the Jagadguru**
**Maha Swamigalavaru of**
**Sri Sringeri Mutt.**

27-4

ஓம்
ப்ரம்ஹைவ ஸத்யம்

# முகவுரை

நோயுற்று மூத்து நான் நுந்துகன்றாய் இங்கிருந்து
நாயுற்ற செல்வம் நயந்தறியா வண்ணமெல்லாம்
தாயுற்று வந்தென்னை யாண்டுகொண்ட தன் கருணைத்
தேயுற்ற செல்வற்கே சென்றூதாய் கோத்தும்பீ.

திருவாசகம்.

பிரபஞ்ச காரணமாக ஒரு வஸ்து இருந்தே தீரவேண்டும் என்ற உண்மையை சகல வைதிக சமயங்களும் ஏகமனதாய் ஒப்புக் கொள்ளுகின்றன. அதற்கு சொரூபம், தடஸ்தம் என இரண்டு நிலைகள் இருக்கின்றன என்பது சாஸ்த்ர பிரசித்தம். சொரூப லக்ஷணத்தில் அது நாம ரூப ரஹிதமாய், அருவமாய், மனவாக்கு களுக்கு எட்டாததாய் இரண்டற்றதாய், தனியாய், நிருபாதிக ஸம்வித் ரூபமாய் இருப்பதாக, வேதோபநிஷதங்கள் கூறுகின்றன. அந்த பரவஸ்துவே மக்கள்மீது கொண்ட பரம கருணையால், சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹார, திரோபவ, அனுக்ரஹம் என்ற பஞ்சக்ருத்யங்களைச் செய் வதற்கு ஐந்து நாமங்களும், ஐந்து உருவங்களும் தன்னிச்சையாலே தானே உண்டாக்கிக்கொண்டது. இந்த நிலைதான் தடஸ்த லக்ஷணம் என்பது. அத்விதீயமான ஏகவஸ்து பிரபஞ்சத்தோடு ஒன்றாயிருந்து இயக்கியும், உடனாய் இருந்து உதவியும் வேறாயிருந்து கண் காணித்தும் வருகிறது. இவ்வாறு பிரபஞ்சமாய் விரிந்து செயல்படும் வஸ்து அதோடு அபின்னமாய் அக்னியில் சூடுபோல இருக்கும் தனது அளவற்ற ஆற்றலாலேயே தொழில் படுகின்றது. இந்த எல்லையில்லா ஆற்றலையே சக்தி என்கின்றோம். அதனுடைய லீலா விநோதங்களை மக்களால் அளந்தறிய முடியாது. அதன் கருணைக்கும் எல்லையில்லை. இந்த வரம்பற்ற கருணையே அடியேனை இப்பணியில் ஈடுபடுத்தியது.

இது ஒரு முதல் நூல் அல்ல: மொழி பெயர்ப்பே. அடியேனது உடல் நலம் குன்றியிருந்த சமயம் ஸ்ரீ சங்கர ஸேவா ஸமிதியின் உபதலைவர்களில் ஒருவரான எனதாருயிர் நண்பர் இலஞ்சி வள்ளல் உயர்திரு **I. A.** சிதம்பரம் பிள்ளையவர்கள் **M. A., M. L. C.** அடியேனைப் பார்க்கவந்தார். அடியேன் தனியாக இருந்து அவதிப்படுவதைக் கண்ட

பிள்ளையவர்கள் உள்ளத்தில் திருவருளால் உதயமான எண்ணத்தைத் தெரிவித்து, ஆங்கில முதல் நூலை தமிழில் மொழிபெயர்க்க இயலுமா எனக்கேட்டார். முதலில் அவர் அதை அடியேனிடம் கொடுப்பதாக நினைக்கவேயில்லை. இறைவன் திருவருளே அவரைத் தூண்டியது போலும். அடியேனும் திருவருளை முன்னிட்டு ஆவன செய்வதாகக் கூறினேன். அவரும் ஆங்கில முதல் நூலை அடியேனிடம் அளித்து அதனைத் தமிழாக்கம் செய்யப் பணித்தார். இறைவனே அவர் மூலம் இப்பணியைச் செய்ய அடியேனைப் பணித்ததாகக் கருதினேன்.

இத்தமிழாக்கம் செய்வதற்கு உறுதுணையாயிருந்தவை மூன்று அம்சங்கள் 1. "வானாகி, மண்ணாகி, வளியாகி, ஒளியாகி, ஊனாகி உயிராகி, உண்மையுமாய் இன்மையுமாய்க் கோனாகி யான் எனது என்று அவரவரைக் கூத்தாட்டுவானா"கிய இறைவனின் பேரருள். 2. ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய சிருங்கேரி சமஸ்தானம் ஜகத்குரு பூஜ்ய ஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த மஹா சந்நிதானங்களின் ஆசி. 3. எனது ஆப்த நண்பர் இலஞ்சி வள்ளல் ஸ்ரீ I. A. சிதம்பரம் பிள்ளையவர்களின் பேரன்பு. இவற்றைத் துணைகொண்டு இத்தமிழாக்கத்தை எழுதி முடித்தேன்.

இதன் முதல் நூல் ஆங்கிலத்திலுள்ளது. அதனை இயற்றியவர், ஸ்ரீ சிருங்கேரி மஹா சந்நிதானங்களின் அருளைப் பூரணமாகப் பெற்றவரும், "ஸ்ரீ சங்கர கிருபா" ஆசிரியரும், புதுக்கோட்டை சீமையில் கல்வி இலாகா மேலதிகாரியாகப் பணியாற்றி ஓய்வு பெற்றவருமான குருபக்தரத்னம் ஸ்ரீ K. R. வெங்கடராமன் என்ற பெரியார். இந்த ஆங்கில நூல் மிக அருமை வாய்ந்தது. இதற்கு முன் ஸ்ரீ சிருங்கேரி சமஸ்தானத்தின் குரு பரம்பரையை யாரும் எழுதி வெளியிட்டதாகத் தெரியவில்லை. இந்த அரும்பெரும் தொண்டைச் செய்வதற்கு இவ்வாசிரியர் எடுத்துக்கொண்டிருக்கும் பிரயாசை அளவிடமுடியாது. எத்தனையோ கல்வெட்டுக்களையும், புராதன சாஸனங்களையும், பழைய தஸ்தாவேசுகளையும், சரித்திர வரலாறுகளையும் கர்ண பரம்பரைச் செய்திகளையும் திரட்டி ஆராய்ந்து சிறிய அளவில் ஓர் பெரிய நூலைச் செய்திருக்கின்றார். அதோடு அன்னாருடைய சா ஸ் தி ர அறிவும், வேதாந்த சித்தாந்த ஞானமும், ஸம்ஸ்கிருதமொழியில் தேர்ச்சியும் ஆங்காங்கு ஒளி

விட்டு மிளிர்கின்றன. எடுத்துக்கொண்ட பொருள் மீதும், வரலாற்றில் வரும் மஹா புருஷர்கள்மீதும் அவருக்கு இருக்கும் மரியாதையும், கௌரவ புத்தியும் இந்நூலுக்கே அழகு செய்கின்றன.

ஒவ்வொரு மொழிக்கும் பிரத்தியேகமான ஓர் ஜீவகளை உண்டு. அதனை ஆங்கிலத்தில் "Genius of the Language" என்பர். ஆகவே ஒரு மொழியிலிருந்து வேறொரு மொழியில் ஒரு நூலைப் பெயர்த்து எழுதுவது அவ்வளவு எளிதல்ல. முதல் நூலில் இருக்கும் சரளமான நடையையும், அலங்கார விசேஷங்களையும் அப்படியே மொழி பெயர்ப்பது சிரமம்தான். ஆயினும் எதிலும் மேன்மையுறுத அடியேன், முன் சொன்ன மூன்று அம்சங்களையே துணையாகக் கொண்டு இயன்றவரை முயன்றுள்ளேன். இதிலிருக்கும் பிழைகள் என் அறியாமையால் உண்டானவையே யன்றி, முதல் நூலைச்சாரா. ஆஸ்திகச் செல்வர்கள் அப்பிழைகளைப் பொருத்தருளுமாறு வேண்டிக் கொள்ளுகிறேன். இதனை எழுதும்கால் கூட இருந்து உதவியும், சுத்தப் பிரதி செய்தும், உபகாரம் செய்த என் நண்பர் திண்டுக்கல் வக்கீல் ப்ரம்மஸ்ரீ S. சுந்தரமய்யர் அவர்களுக்கு நான் நன்றி செலுத்தக் கடமைப் பட்டுள்ளேன். இதனைத் தமிழாக்கம் செய்ய அனுமதியளித்த முதல் நூல் ஆசிரியர் குருபக்தரத்னம் ஸ்ரீ K. R. வேங்கடராமன் அவர்களுக்கு மிக்கப் பணிவுடன் நன்றி செலுத்திக்கொள்ளுகிறேன். இந்த வாய்ப்பை அடியேனுக்கு அளித்த என் ஆருயிர் நண்பர் உயர்திரு I. A. சிதம்பரம் பிள்ளை அவர்கட்கு எவ்விதக் கைம்மாறும் செய்ய இயலாத காரணத் தால் அன்னருக்கு நோயற்ற வாழ்வும், தீர்க்க ஆயுளும் நல்க எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கிறேன். இந்நூலை அடியேனின் அன்புக் காணிக்கையாக ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு பூஜ்ய ஸ்ரீ அபிநவ வித்யா தீர்த்த மஹா ஸ்வாமிகளின் தூய திருவடிக் கமலங்களுக்கு அர்ப்பணிக்கின்றேன்.

**லோகா: ஸமஸ்தா: ஸுகினோ பவந்து**

**பெ. கா. ஷண்முகநாதன்.**
**திண்டுக்கல்**

# மதிப்புரைகள்

## I

[இலஞ்சி உயர்திரு I. A. சிதம்பரம் பிள்ளை M. A., M. L. C., அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி உப தலைவர்]

ஸ்ரீ சந்த்ர மௌளீசுவரர் அருளாலும், ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு ஆசார்ய சுவாமிகளது ஆசியாலும், திண்டுக்கல் வக்கீல் திருவாளர் P. K. சண்முகநாதன் B. A., B. L., அவர்களது "உணர்வரிய மெய்ஞ் ஞானம்", என்ற மொழி பெயர்ப்பு நூல் வெளிவருகின்றது. பிரம்மஸ்ரீ K. R. வெங்கடராமன் அவர்களது "The Throne of Transcendental Wisdom" என்ற ஆங்கில நூலின் மொழி பெயர்ப்பே இந்நூல். இந்த நூலின் பெருமை வாசிப்போர்க்கு எளிதில் தெரிய வரும். ஸ்ரீ K. R. வெங்கடராமன் அவர்கள் இந்நூலைப்படித்து மிகவும் பாராட்டியிருக்கின்றார்கள். சிருங்கேரி சமஸ்தானத்தின் வரலாற்றை மிக அழகாகவும் கோர்வையாகவும் தெரிவிக்கின்றது இந் நூல். ஆசிரியர் ஒரு சிறந்த சாதகர், பக்தர், சக்தி உபாசகர், மும்மொழிப்புலவர், ஆழ்ந்த அறிவும் அனுபூதியும் உடைய குணசீலர், அத்துடன் பேச்சு வன்மையும் எழுத்து வன்மையும் ஒருங்கே அமையப்பெற்றவர்.

The Throne of Transcendental Wisdom நூலைத்தமிழில் மொழிபெயர்க்க, தக்கவரைத்தேடிக் கொடுக்கும்படி பிரம்மஸ்ரீ K. R. சுந்தரமய்யரவர்கள் என்னைக் கேட்டுக்கொண்டார்கள். இப் பெரும் பொறுப்பை, புலமையும் திறமும் வாய்ந்த திருவாளர் P. K. சண்முக நாதன் அவர்களைக்கண்டு ஒப்படைக்க திண்டுக்கல் சென்றேன். அங்கு அவர்கள் ஹ்ருதய நோயினால் தாக்குண்டு, பல மாதங்களாகப் படுக்கையிலிருப்பதைப் பார்த்தேன். அவர்களது நிலைமையைக் கண்ணுற்ற எனக்கு இப்பணியை அவர்களிடம் ஏற்பிக்க தயக்கம் ஏற்பட்டது. ஆனால் அவர்கள் மிக ஆவலோடும், பக்தியோடும் தான் இக் கைங்கர்யத்தில் ஈடுபட வேண்டுமென, தனது விருப்பத்தைத் தெரிவித்து ஏற்றுக்கொண்டார்கள். அவர்கள் மொழி பெயர்க்கத் தொடங்கியதிலிருந்தே, தனக்கு உடம்பில் ஒரு தெம்பு தோன்றிய தென்றும், ஒரு தனி அலாதி ஆனந்தமும் ஆற்றலும் பெற்றார்கள் என்றும் பின்னர் என்னிடம் கூறினார்கள். இன்று அவர்களது உடல் நிலை சரியாகி, சமயத்துறையில் பல நூல்கள் எழுதுவதில் ஈடு பட்டிருக்கின்றார்கள்.

கந்தரனுபூதி உரையும் (ஸ்ரீசங்கர க்ருபாவில் வெளிவருகின்றது, "ஸ்ரீ வித்யா" என்ற நூலும், "ஆதி சங்கரர் சரிதையும்" எழுதி முடித்திருக்கின்றார்கள். ஆகவே உடல் நலக்குறைவோடு இருந்த ஆசிரியர் "உணர்வரிய மெய்ஞ்ஞானம்" நூல் எழுத ஆரம்பித்த காரணமாக உடல் நலம் சிறக்கப்பெற்றார்கள் என்றால், இந்நூலின் பெருமையும், மகத்துவமும், புனிதத்தன்மையும் தான் என்னே!

இந் நூலாசிரியருக்கும், இந் நூல் வெளிவருவதற்குக் காரணஸ்தரான பிரம்மஸ்ரீ K. R. சுந்தரமய்யரவர்கட்கும், தாராளமாக பொருள் உதவி செய்த குருபக்த சூடாமணி பின்னி R. சுப்பராவ் அவர்கட்கும் சமய உலகம் மிகவும் கடமைப்பட்டிருக்கின்றது.

இவர்கள் நீடூழி வாழ்ந்து சமயத்துறையில் சிறந்த பணிகள் பல புரிய ஜகத்குரு சிருங்கேரிகுரு மகாசந்நிதானம் அவர்களை கருணை பாலிக்கப் பிரார்த்திக்கின்றேன்.

இலஞ்சி
8—9—66

ஐ. ஏ. சிதம்பரம் பிள்ளை.

# II

[ஸ்ரீ K. V. சுப்பரத்னம், அட்வொகேட் ஈரோடு,
அகில பாரத சங்கர ஸேவாஸமிதி பொதுக்காரியதரிசி]

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதியால் இப்புத்தகம் வெளியிடப் படுகிறது என்பது ஸமிதியின் முக்கிய நோக்கத்தை ஒட்டிய காரியமேயாகும்.

ஸ்ரீமத் ஆதிசங்கர பகவத் பாதாசார்யாள் பூலோகத்தில் அவதரித்து பாரதம் முழுவதும் ஸஞ்சரித்து வைதிகமான தர்மத்தை யும், உபநிஷத் ஸித்தாந்தமான அத்வைத மார்க்கத்தையும் நிலை நிறுத்தி இவைகள் சாச்வதமாக நிலைபெற்றிருப்பதற்காக நான்கு திசைகளிலும் நான்கு ஆம்நாய பீடங்களை ஸ்தாபித்து அவற்றில் தனது சிஷ்யர்கள் நால்வரையும் ஆதி பீடாதிபதிகளாக நியமித்தார் என்பதும் அவற்றுள் சிருங்கேரியில் ஸ்ரீ சாரதா தேவியை பிரதிஷ்டை செய்து பல வருஷங்கள் தாம் அங்கு தங்கி சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்ததுடன் முதன் முதலில் அங்கு தக்ஷிணாம்னாய பீடத்தை ஸ்தாபித்து ஸ்ரீ ஸுரேசுவராசார்யாளை முதல் பீடாதிபதியாக நியமித்தார் என்பதும் யாவரும் அறிந்ததே.

அப்படிப்பட்ட ஸர்வக்ஞ பீடத்தின் பெருமையையும், அதில் அவிச்சின்ன பரம்பரையாக வந்துள்ள பீடாதிபதிகளின் திவ்ய மஹிமைகளையும் நாம் அறிந்துகொள்ளவேண்டியது அவசியம். இது தக்ஷிணாம்னாய பீடமாகையால் தக்ஷிண தேசத்தில் உள்ளவர் களுக்கு இது ஆசார்ய பீடம் என்ற முறையில் இந்த வரலாறுகளை நன்கு தெரிந்துகொள்வது மிகவும் அவசியம்.

இதை உத்தேசித்து ஸ்ரீமான் K. R. வெங்கடராமன் அவர்கள் மிகவும் சிரமப்பட்டு சரித்திர ஆதாரங்களை சேகரித்து, உயர்ந்த முறையில் பலரும் படித்து உபயோகம் அடையும் வழியில் இவ்விஷய மாக ஆங்கிலத்தில் ஓர் நூல் எழுதி சில வருஷங்களுக்கு முன் அச்சிட்டுள்ளார். ஆங்கிலம் தெரியாதவர்களின் உபயோகத்துக்காக இதன் தமிழ் பிரதி தேவை என்று பலர் அபிப்பிராயம் தெரிவித் தார்கள்.

தமிழ் மொழி பெயர்ப்பை சீரிய முறையில் செய்து தரும்படி ஸமிதியாரால் திண்டுக்கல் ஸ்ரீமான் P. K. ஷண்முகநாதன் (வக்கீல்) அவர்கள் கேட்டுக் கொள்ளப்பட்டார். மிகவும் சந்தோஷத்துடன்

தன்னுடைய சரீர அசௌகரியத்தையும் பாராட்டாமல் தீவிரமாக இதில் ஈடுபட்டு உயர்ந்த ரீதியில் இப்புத்தகத்தை நமக்கு கொடுத்திருப்பதற்கு அவருக்கு நம் ஸமிதியின் நன்றி உரித்தாகுக. ஸ்ரீமான் ஷண்முகநாதனின் குரு பக்தியும் ஸம்ஸ்கிருத பாஷா ஞானமும் தமிழ் பாஷையில் உள்ள பயிர்ச்சியும் ஆர்வமும் எல்லாவற்றிற்கும் மேலாக ஸ்ரீ சிருங்கேரி பீடாதிபதிகளிடம் அளவுகடந்த பக்தியும் இப்புத்தகம் படிப்பவர்களுக்கு நன்கு தெரியவரும். இதுபோல் இன்னும் பல கைங்கரியங்களை அவர் ஸமிதியின் சார்பில் ஏற்றுக் கொண்டிருப்பது எங்கள் பாக்கியமே.

இப்புத்தகம் அச்சிடுவதற்குக் காரணமாக இருந்து வேண்டிய பொருள் உதவியவர் கோவை குருபக்த சூடாமணி ஸ்ரீமான் பின்னி R. சுப்பராவ் அவர்கள். பல தர்மங்களுக்கு முன் வந்து பண உதவி செய்யும் இப்புண்யவான் மிகுந்த சந்தோஷத்துடன் இப் புத்தகத்துக்கும் உதவியதற்கு ஸமிதியின் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்புத்தகம் வெளிவருவதில் பல வழிகளில் உபகாரம் செய்த ஸமிதியின் உபதலைவர் ஸ்ரீமான் இலஞ்சி சிதம்பரம்பிள்ளை அவர்களுக்கும் தர்மத்தைச் செய்து அதை பிரகடனம் செய்யக்கூடாது என்ற கருத்துக்கொண்ட சென்னையில் உள்ள பல நண்பர்களுக்கும் ஸமிதியின் சார்பாக நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன்.

இதை அழகாக சீக்கிரம் அச்சிட்டுக்கொடுத்த ஸ்ரீரங்கம் ஸ்ரீ வாணீ விலாஸ் அச்சகத்தாருக்கும் அச்சாகும் காலத்தில் பிழை வராமல் நன்கு கவனித்து அவசியமான திருத்தங்களும் செய்து கொடுத்துதவிய சங்கர கிருபா உதவி ஆசிரியர் வித்வான் ஸ்ரீ K. S. வெங்கடராம சாஸ்திரிகள் அவர்களுக்கும் ஸமிதியின் நன்றி உரித்தாகுக.

ஈரோடு
3—9—66

K. V. சுப்பரத்னம்.

## III

['குருபக்தரத்னம்' ஸ்ரீ K. R. வெங்கடராமன் முன்னாள் புதுக்கோட்டை ஸம்ஸ்தானம் கல்வி அதிகாரி, ஸ்ரீ சங்கர க்ருபா ஆசிரியர்]

ஆங்கிலத்தில் நான் எழுதிப்பிரசுரித்த 'The Throne of Transcendental Wisdom' என்ற நூலை என் ஆப்த நண்பர் ஸ்ரீ P. K. ஷண்முகநாதன் தமிழாக்கி என்னை கௌரவித்திருக்கிறார். இது நான் பெருமையுடன் மதிக்கும் பாக்கியமாகும். தெள்ளிய நடையில் இனிமை பொங்கும் வசனங்களைக் கொண்டிருக்கிறது இந்த சிறப்பு வாய்ந்த நூல். சில சந்தர்பங்களில் சர்ச்சைக் குரிய அபிப்ராயங்களைக்கையாளும் போது தன் முடிவை உறுதியாகவும், பிறர் மனம் நோகாமலும் சொல்லி யிருப்பது ஒரு விசேஷமாகும். படிக்கப்படிக்க நம் மனத்தில் பக்தி ஊற்றுப்பெருகி வருகிறது. அருள் வாக்காகவே நூல் பெரும்பாலும் அமைந்திருக்கிறது. சிருங்கேரி சாரதா பீடத்தை அலங்கரித்த தபஸ்விகளான குருக்களின் திவ்ய ஸந்நிதானங்களில் நம்மை அழைத்துச் சென்று, அவர்களின் அருள் வெள்ளம் நம் அகத்தில் பாயும்படி நமக்கு உதவியிருக்கிறார்.

மாதவீயத்தைத் தழுவி ஸ்ரீ சங்கரபகவத் பாதரின் திவ்ய சரித்திரத்தை ஸ்ரீ ஷண்முகநாதன் எழுதி முடித் திருக்கிறார். அது விரைவில் அச்சாகி வெளிவருமென்று எதிர்பார்க்கிறேன். பக்தியையும் அறிவையும் புகட்டும் பல நூல்களை எழுதி நமக்கு உதவும்படி அவருக்கு நீண்ட ஆயுளையும், தேக வலிமையையும் அன்னை ஸ்ரீ சாரதாதேவி யும், நம் குருநாதரும் அளித்து அனுக்கிரஹிக்கும்படி பிரார்த்திக்கிறேன்.

*1—9—1966* கூ. ரா. வெங்கடராமன்.

# IV

[வியாகரண சிரோமணி, வேதாந்த வித்வான் ஸ்ரீ K. S. வெங்கட ராம சாஸ்திரி, ஸ்ரீ சங்கர க்ருபா உதவி ஆசிரியர்]

சிஷ்யர்களின் கடமைகளில் குரு பரம்பரையைத் தெரிந்து கொள்வது முக்யமானது. இதற்காகவே உபநிஷத்தில் வம்ச ப்ராஹ்மணம் காணப்படுகிறது இந்த ரீதியில் ஸ்ரீ சங்கரபகவத்பாதர் முதல் சிருங்கேரி ஸ்ரீ சாரதா பீடத்தில் விளங்கும் இப்போதைய மஹா ஸந்நிதானம் வரை ஒவ்வொரு ஆசார்யருடைய திவ்ய சரித்திரத்தையும் மஹிமைகளையும் நாம் எல்லோரும் அறிந்துகொள்ள வேண்டியது அவசியம். நமது பாக்யவசத்தால் ஸ்ரீ சிருங்கேரி மடம் ஆஸ்தான வித்வான்களில் ஒருவரால் பல வருஷங்களுக்கு முன் எழுதப்பட்ட குருவம்ச காவ்யம் ஆசார்யர்களின் சரித்திரத்தை வர்ணிக்கிறது. இதில் 7 ஸர்க்கங்கள் மட்டும் முன்னால் ஸ்ரீரங்கம் ஸ்ரீ வாணீ விலாஸ் ப்ரஸ்ஸில் அச்சிடப்பட்டிருந்தது. இப்பொழுது முழுவதும் அச்சிடப்பட்டிருக்கிறது. இது ஸம்ஸ்கிருத பாஷையில் இருப்பதாலும் சுருக்கமாக இருப்பதாலும் ஸச்சிதானந்த பாரதீ ஸ்வாமிகளுடன் நூல் முடிவு பெறுவதாலும் பூர்ணமாக குருபரம்பரா சரித்ரத்தை யாவரும் எளிதாக அறிந்துகொள்ள முடியவில்லை. அநேகரின் கோரிக்கைக்கிணங்கி சரித்திர ஆராய்ச்சியில் மிகுந்த திறமையுள்ள ஸ்ரீமான் ஸ்ரீ K. R. வெங்கடராமன் அவர்கள் தீவ்ர முயற்சி எடுத்துக்கொண்டு பல நூல்கள், சிலாசாஸனங்கள் அரசாங்க தஸ்தாவேஜுகள் எல்லாவற்றையும் நன்கு ஆராய்ந்து விரிவாக இப்போதைய மஹா ஸந்நிதானம் வரை எல்லா ஆசார்யர்களின் சரித்திரங்களையும் எழுதி அச்சிட்டார்கள். ஸ்ரீ சிருங்கேரி மடம் ஸம்ஸ்தானமாக ஆனது, அரசர்களின் ஆதரவு, அதன் நிர்வாக முறை, அங்குள்ள ஆலயங்கள், வெளியிடங்களிலுள்ள சிருங்கேரி மடத்தைச் சேர்ந்த ஆலயங்கள் மற்றும் அநேக விஷயங்கள் நாம் அவசியம் தெரிந்துகொள்ள வேண்டியவை அதில் அடங்கியுள்ளன.

இவ்வளவு பெருமையுள்ள இந்நூல் ஆங்கிலத்தில் இருப்பதால் என்னைப்போன்றோர் அதைப் படித்து தெரிந்துகொள்ளமுடியவில்லை. தமிழில் பிரசுரித்தால் தேவலையென்று ஆசிரியரிடம் பிரஸ்தாபித்ததுண்டு. எங்கள் கோரிக்கையை நிறைவேற்றிக்கொடுத்த ஸ்ரீ P. K. ஷண்முகநாதன் அவர்களுக்கு முதலாவதாக நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

ப்ரூப் திருத்துவதுமுதல் அச்சாகி வெளிவரும் வரை எடுத்துக் கொண்ட முயற்சிகள் மூலம் தமிழாக்கத்தை முழுவதும் வாசிக்கும் படியான ஸந்தர்ப்பம் கிடைத்தது. இந்நூலை முதன்முதலில் வாசிப்பவர்களுக்கு இது ஒரு தமிழாக்கம் என்பதே தெரியவராது. ஆங்கில நூலின் மொழிபெயர்ப்பு என்பதை பிறர் சொல்லித்தான் தெரிந்துகொள்ளவேண்டும். அவ்வாறு சிறப்பாகவும் ஸரளமாகவும் தெளிவாகவும் தமிழ்நடை அமைந்துள்ளது. மொழிபெயர்ப்பு செய்ப வர்களுக்கு இரு மொழிகளிலும் விசேஷ பயிற்சி இருக்கவேண்டும். இது மட்டும் போதாது. அதில் கூறப்பட்ட விஷயங்களின் அறிவும் தத்வங்களில் நம்பிக்கையும் பக்தியுமிருக்கவேண்டும். இவை இருந்தால்தான் மொழிபெயர்ப்பு சிறப்பாக அமையும். இந்த அம்சங்கள் இதில் பரிபூர்ணமாக உள்ளன. கந்தரனுபூதி உரையி லிருந்து இவருடைய சிறந்த அறிவையும் முகவுரையிலிருந்து சிருங்கேரி குருபக்தியையும் நாம் தெரிந்துகொள்ளலாம். இத்தனை சிறப்புகளும் பெற்று ஜீவ கலையுடன் விளங்குவதால்தான் இத் தமிழாக்கம் வாசிப்பவர்களின் மனதில் உணர்ச்சியைத் தூண்டி விடுகிறது. பக்திப் பெருக்குடன் மெய் மறந்து அந்தந்த நிகழ்ச்சிகள் நடக்குமிடங்களிலிருப்பதாகவே எண்ணிவிடுகின்றோம்.

இப்போதைய மஹாஸந்நிதானம் அவர்களின் விஜய யாத்திரா நிகழ்ச்சிகளும் சிருங்கேரி கும்பாபிஷேகமும் இதில் புதிதாக சேர்க்கப் பட்டுள்ளன.

உலகில் நல்லறிவும் பக்தியும் ஓங்கி வளர இம்மாதிரியான நற் காரியங்களைச் செய்வதற்கு வேண்டிய உடல் வலிமையும் நீண்ட ஆயுளும் தர பகவானை வேண்டுவதைத் தவிர வேறு என்ன கைம்மாறு செய்ய முடியும் ?

K. S. வெங்கடராம சாஸ்திரி.



ஸ்ரீ ஸச்சிதாநந்த சிவாபிநவ ந்ருஸிம்ஹபாரதீ ஸ்வாமிகள்

*( 1879 — 1912 )*

# பொருளடக்கம்

# ஸ்ரீ சிருங்கேரி குரு பரம்பரை



ஸ்ரீ சந்திரசேகரபாரதீ ஸ்வாமிகள் *IV.*

( 1912—1954 )



ஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த ஸ்வாமிகள்

## முதலாவது அத்தியாயம்

## பண்டைய கால நிலையில் கண்ணோட்டம்

இயற்கை வளம் மிகுந்த ஆரண்யங்களில் அமைக்கப் பட்ட ஆச்ரமங்களே நமது இந்திய தேசத்தின் ஆன்ம ஞானத்துக்கும், வளர்ச்சிக்கும் தாயகமாகத் திகழ்ந்தன. இந்த ஆச்ரமங்களில் வசித்த மஹநீயர்களே தமது அந்தர்முக தியானத்தில் கண்ட அநாதியான வேத தத்வங்களைத் தம் சிஷ்யர்களுக்கு உபதேசித்து வந்தனர். இவைகளே நமது உபநிஷதங்களாகும். நமது சரித் திரத்தின் மிக மிகப் பழைய காலத்தில் மேற்குத்தொடர்ச்சி மலைச்சாரலில் துங்காநதிக்கரையில் இத்தகைய ஆச்ரமம் ஒன்று இருந்தது. இந்த பிரதேசம் இப்பொழுது மைசூர் மலநாடு என்றழைக்கப்படும் பகுதியைச் சேர்ந்தது. இந்த ஆச்ரமத்தில் விபாண்டகர் என்ற ஓர் மஹரிஷி வசித்தார். அவருடைய சமாதி இன்றும் ஓர் புனித லிங்கத்தால் அலங் கரிக்கப்பட்டுத் திகழ்கின்றது. அவருடைய அருந்தவப் புதல்வரே ஸ்ரீ வால்மீகி பகவானுல் போற்றப்படும் ரிஷ்ய சிருங்கர் ஆவர். அவருடைய உலகமறியா வெள்ளை மனப்பான்மை ஸ்ரீ வால்மீகி பகவானுல் வெகு அழகாகச் சித்தரிக்கப்பட்டிருக்கின்றது. மிகச் சிறுபிராயம் முதல் தகப்பனுராலேயே வளர்க்கப்பட்டுத் தன்னந்தனியே இருந்த வராதலால் அவர் ஸ்திரீ ஜனங்களையே பார்த்ததுகூடக் கிடையாது. ரோமபாதன் என்ற அரசனின் நாட்டில் மழை இல்லாமல் பல ஆண்டுகள் பஞ்சம் தலைவிரித்தாடியது. ரிஷ்யசிருங்கரை அழைத்து வந்தால் நாட்டில் மழை வர்ஷித்து சுபிக்ஷம் உண்டாகும் என்று அவ்வரசனுக்கு அறிவுரை கூறப்பட்டது. அவன் வனப்புமிகுந்த வநிதைகளை அனுப்பி அவரை எப்படியும் தன் நாட்டுக்கு அழைத்துவரவேண்டும் என்று ஏற்பாடு செய்தான். அவ்வாறு அனுப்பப்பட்ட சுந்தரிகளும் விபாண்டகர் இல்லாத சமயம் சென்று ரிஷ்யசிருங்கரை சந்தித்தனர். அவர்களைப் பார்த்த ரிஷ்யசிருங்கர், அவர்கள் பெண்கள் என்றறியாமல் அவர்களும் வேறு பிரதேசத்தைச் சேர்ந்த

ரிஷிகள் என்றே கருதினர். அந்த யௌவனசுந்தரிகளின் உபசரணையில் மிகவும் திருப்தியடைந்தவராய் அவர் களோடு சென்று ரோமபாதனின் நாட்டையடைந்தார். அந்நாட்டில் அவர் காலடிபட்ட தத்க்ஷணமே பெரு மழை வர்ஷித்து நாடு செழிப்புற்றது. அரசனும் மகிழ்ந்து மிக்க நன்றியோடு தனது குமாரத்தி சாந்தாவை அவருக்கு மண முடித்துவைத்தான். அதன்பின் அயோத்திக்கு அவரை அனுப்பி தசரதச் சக்கிரவர்த்திக்குப் புத்ரகாமேஷ்டி யாகத்தைச் செய்ய உதவிபுரிந்தான். ரிஷ்யசிருங்கர் யாகத்தை முடித்துவிட்டுத் தன் மனைவியுடன் தமது ஆச்ரமத்துக்கே திரும்பிவந்து தமது வாழ்நாளை தபஸ்ஸிலே கழித்தார். இன்றும் சிருங்கேரிக்கு அண்மையில் உள்ள கிக்கா[1] என்ற கிராமத்தில் ஓர் அபூர்வ உருவமுடைய சிவலிங்கம் கோயில்கொண்டிருக்கின்றது. ரிஷ்யசிருங்கர் தபஸினுல் அடைந்த பூர்ணத்வத்தின் சின்னமாக அந்த லிங்கம் ஆஸ்திகர்களால் வழிபடப்பட்டு வருகின்றது. சிருங்கேரி என்ற சொல் "ரிஷ்யசிருங்ககிரி" என்பதின் திரிபு. ரிஷ்யசிருங்கரின் மலை என்பது அதன் பொருள். இந்த க்ஷேத்ரம் மலைகளால் சூழப்பட்டதாய் வராஹபர்வதத் தில் உற்பத்தியாகும் துங்காநதி தீரத்தில் அமைந்திருக் கின்றது. இந்நதி வராஹமலையிலிருந்து புறப்பட்டு வட கிழக்கு திசையாகப் பிரவஹித்து, சிருங்கேரியை அடை கின்றது. அதன்பின் அது மேற்கே திரும்பிப் பின் கிழக்கே ஓடித் தனது தோழி பத்ராநதியோடு சங்கமமாகின்றது. இரண்டு நதிகளும் சேர்ந்து துங்கபத்ரா என்று பெயர் பெற்ற காரணத்தால், நமது சாரதாபீட பரமாசார்ய புருஷாள் துங்கபத்ராதீர வாசிகள் என்றும் அழைக்கப்படு கின்றனர்.

ஆதி சங்கரபகவத்பாதாள் தமது பாதயாத்திரையின் போது இந்த இடத்தை அடைந்தார். அங்கு ஓர் அற்புத மான காட்சியைக்கண்டார். அஃதாவது வெய்யிலின்

1. கிக்கா என்பது கிழ்க்கா என்பதன் திரிபு. ஈண்டு ஓர் ஆலயமும் பட்டர்களுடைய அக்கிரகாரமும் 7-வது நூற்றாண் டிலேயே இருந்ததாகத் தெரிகின்றது.

உக்ரத்தால் வருந்திக்கொண்டிருந்த ஓர் சூல் தவளையை ஒரு சர்ப்பம் தனது படத்தை விரித்து நிழலளித்துக் காப்பாற்றிக்கொண்டிருந்தது. பகவத்பாதாள் இந்த இடத்தை இயற்கைவளம் நிறைந்த ஓர் சாந்தி நிலவும் ஸ்தலமாக உணர்ந்தார். அந்த இடத்திலேயே மிக பிரசித்தி பெற்ற தமது முதல் பீடத்தை ஸ்தாபனம் பண்ணினுர். அன்றுமுதல் இன்றுவரை பல சீரிய மஹான்களால் அலங் கரிக்கப்பட்ட ஆசார்ய பீடமாகத் திகழ்ந்து வருகின்றது.

## இரண்டாம் அத்தியாயம்

## குருபரம்பரை

[குறிப்பு:—இந்த அத்தியாயத்தில் ஆங்கில மூலத்தில் "குருபரம்பரை ஸ்தோத்திரத்" திலிருந்து பத்து சுலோ கங்கள் வடமொழியில் அச்சிடப்பட்டு அவற்றிற்கு சிறு விளக்கமும் சேர்க்கப்பட்டிருக்கின்றது. சுலோகங்களை மொழி பெயர்க்கவில்லை. அவற்றின் விளக்கம் மட்டும் சுருக்கமாகக் கொடுக்கப்படுகின்றது.]

சுத்த ஸ்படிக நிறமான திருமேனியுடையவரும் ஆத்ம ஞானத்தின் மூல புருஷரும் ஞானனந்த சொரூபியுமான சதாசிவமூர்த்திக்கு வணக்கம். அவரே ஸ்ரீமந் நாராயண ஞகத் திருவுருக்கொண்டு தமது நாபிக் கமலத்திலிருந்து சிருஷ்டிகர்த்தாவான பிரம்மதேவனைப் படைத்தார். நாராயண ரூபத்திலிருந்த பரமேச்வரனே, நான்முகனுக்கு "ப்ரம்மவித்யை" என்று சொல்லப்படுகின்ற ஆத்மஞான வித்தையை உபதேசித்தார். இம்மூன்றும் திவ்ய பரம்பரை. பிரம்மாவிற்குப் பின் ரிஷி பரம்பரை ஆரம்பமாகின்றது. பிரம்மனிடமிருந்து வஸிஷ்டரும், வஸிஷ்டரிடமிருந்து சக்தி ரிஷியும், சக்தியிடமிருந்து பராசரரும், பராசரரிட மிருந்து வியாஸரும், வியாஸரிடமிருந்து சுகரும் பிரம்ம வித்யையைக் கற்றனர். அடுத்து ஆசார்ய பரம்பரை ஆரம்பமாகின்றது.

ஆசார்ய பரம்பரையின் முதல்வர், சுகப்ரம்மத்தின் சிஷ்யரும், பிரசித்தி பெற்ற மாண்டுக்யோபநிஷத் காரிகையின் ஆசிரியருமான ஸ்ரீ கௌடபாகர். இவர் குருக்ஷேத்ரத்துக்கு அண்மையில் அவதரித்தவர் என்பர். இவர் நூறு ஆண்டுகளுக்கு மேலேயே பதரியில் தவயோக நிஷ்டையில் இருந்தவர். இவரால் முதலாக செய்யப்பட்ட நூல் ஈச்வர கிருஷ்ணருடைய சாங்க்ய காரிகைக்கு பாஷ்யம். இந்த பாஷ்யம் சீன மொழியில் "டிஆங்" (T'ang) அரச வம்சத்தினர் காலத்தில் மொழி பெயர்க்கப்பட்டது. இதிலிருந்து ஆராய்ச்சியாளர் ஸ்ரீ கௌடபாதரின் காலத்தை நிர்ணயம் செய்யக்கூடும். இவர் வேதாந்த உண்மைகளுக்கு ஓர் புத்துணர்வு அளித்தார் என்று சொல்லலாம். அதாவது விவர்த்த வாதத்தையே ஸ்திரப்படுத்தினாலும், பரிணாம வாதத்தை ஒருங்கே தள்ளிவிடாமல் இரண்டுக்கும் ஸமன்வயம் கண்டார். விவர்த்த வாதம் என்பது அத்வைதக் கொள்கை. அதாவது ப்ரம்ஹம் ஒன்றே ஸத்யம். மற்ற யாவும் மித்தை. நாம ரூபத்தோடு கூடிய பிரபஞ்ச வஸ்துக்கள் யாவும் மாயையால் ப்ரம்ஹத்தில் ஆரோபிக்கப் படுகின்றனவேயன்றி உண்மையில் அவைகள் இல்லை என்பதுதான் விவர்த்த வாதத்தின் அடிப்படைக்கொள்கை. பரிணாமவாதமாவது ப்ரம்ஹமே தன்னிச்சையால் பிரபஞ்சமாக விரிந்து. இருந்து, மறைகின்றது. மாயை என்பது ப்ரம்ஹத்தினின்றே தோன்றி பிரபஞ்சத்துக்கு முதற் காரணமாக இருந்து பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கின்றது. ப்ரம்ஹம் பிரபஞ்சத்துக்கு நிமித்த காரணம் என்பது. ஸ்ரீ கௌடபாதாசார்யார் எழுதிய சிறந்த கிரந்தம் மாண்டுக்யோபநிஷத் காரிகையேயாகும். இது தவிர அவர் உத்தரகீதை பாஷ்யம், ந்ருஸிம்ஹதாபினீ பாஷ்யம் துர்க்கா ஸப்தசதீ பாஷ்யம், ஸ்ரீவித்யாபரமான ஸ்ரீவித்யாரத்ன சூத்ரம், சுபகோதயம் என்பனவற்றையும் இயற்றியுள்ளார். இவருடைய சிஷ்யர் ஸ்ரீ கோவிந்த பகவத்பாதாள். அவதூதகீதா என்றும் அத்வைதானுபூதி யென்றும் சொல்லப்படுகிற கிரந்தத்தின் கர்த்தா இவரே. இவர்தான் ஆதிசங்கர பகவத் பாதாளின் குரு.

# மூன்றுவது அத்தியாயம்

## ஸ்ரீ சங்கரபகவத்பாதாள் — வ்யாக்யானபீடம்

பகவான் ஸ்ரீ சங்கரர் தோன்றிய காலத்தில் சமயக் கோட்பாடுகளும், சமூகபண்பாடுகளும் மிகச் சீர்கேட்டை அடைந்திருந்தன. பௌத்த சமயம், ஆதியில் புத்தரின் சீரிய கொள்கைகளினின்றும் இழிந்து நான்கு பெரும் பிரிவுகளாகப் பிளவுபட்டிருந்தது. ஹீனயான புத்த வகுப்பு இரண்டு பிரிவுகளாகவும், மஹாயான புத்த வகுப்பு இரண்டு பிரிவுகளாகவும் சிதைந்தன. அவர்களுடைய கொள்கை களின் அடிப்படையில் சில உபநிஷதக் கருத்துகள் தென் பட்டாலும், அவர்கள் வேதத்துக்கு மதிப்புக்கொடுத் தார்கள் இல்லை. க்ஷமண சமயமும் வேதத்தை ஏற்க மறுத்தது. அம்மட்டேயன்றி பிரபஞ்சத்துக்கு மூலகாரண மாக ஓர் பரம்பொருள் உண்டென்பதைப் பற்றியே அவர்கள் பிரஸ்தாபிக்கவில்லை அக்காலத்தில் நிலவி யிருந்த ஏனைய சமயங்களும் வேதத்தின் அதிகாரத்வத்தை மறுத்ததுமன்றி நிரீச்வர வாதிகளாகவும் இருந்தன. வேதத்தை ஒப்புக்கொள்ளும் மதங்களில் கூட பல அநா சாரப் பழக்க வழக்கங்களும், இழிவுற்ற கொள்கைகளும் புகுந்துவிட்டன. சைவ சமயத்தில் "மஹா விரதர்" என்றவர்களும், சாக்தத்தில் வாமாசாரர்களும் காண பத்யத்தியர்களில் ஓர் சிலரும், ஸௌரேயர்களில் சிலரும் வைணவ பாகவதர்களும் இத்தகைய அநாசாரங்களை மேற்கொண்டனர். எல்லா சமயக் கோட்பாடுகளையும், சீர்திருத்தி, ஒன்று சேர்த்து, ஐம்புல வசப்பட்டு விஷயாகார விருத்திகளில் உழலும் மக்களை லௌகிக இன்பங்களில் ஆழ்ந்திருப்பதிலிருந்து தடுத்து ஈடேறச் செய்வது அக் காலத்தின் நிலையில் மிக்க அவசியமாக இருந்தது. இத் தகைய அரிய சாதனையை நிறைவேற்ற ஞான ஐச்வர்ய மான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியே உலகில் ஸ்ரீ சங்கரராக அவதாரம் செய்தார்.

ஸ்ரீ சங்கரரின் கால நிர்ணயம்:— இது ஆராய்ச்சி யாளர்க்குப் பெரும் திகைப்பை உண்டுபண்ணியிருக்

கின்றது. கி. மு. 509-ம் ஆண்டிலிருந்து கி. பி. எட்டு அல்லது ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதிவரை பலவிதமாக அவருடைய காலம் நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றது. ஸ்ரீ சங்கரர் மஹாயான பௌத்த சமயத்தை எதிர்த்து வெற்றி கண்டார் என்று பத்மபாதர் கூறியிருக்கின்றார். ஸ்ரீ சங்கரர் தமது கிரந்தங்களில் பாசுபதக்கொள்கைகளைக் கண்டனம் பண்ணியிருக்கின்றார். மேலும் அவற்றில் நான்காம் நூற்றாண்டுக்குப் பின் தோன்றிய புராணக்கூற்றுகள் எடுத்தாளப்படுகின்றன. பௌராணிக கிரந்தங்களில் மிகப் பிற்காலத்தில் சேர்க்கப்பட்ட "ஸூதஸம்ஹிதை"யை ஸ்ரீசங்கரர் பலமுறை படித்தார் என்று அவருடைய சரித்திர வரலாறுகள் கூறுகின்றன. இவ்விஷயங்களை உன்னிப் பார்த்தால் R. G. பண்டர்க்கார் சொல்லும் கி. பி. நான்காம் நூற்றாண்டு அபிப்பிராயம் தகர்ந்துவிடுகின்றது. தெலாங் (Telang) கூறும் கி. பி. ஆரும் நூற்றாண்டின் பிற்பகுதி என்ற முடிபும் ஏற்கத்தக்கதாக இல்லை. பகவத்பாதாள் தமது நூல் ஒன்றில் தர்மகீர்த்தி என்பவரின் சுலோகம் ஒன்றை மேற்கோளாகக் காட்டியிருப்பதாய் ஸ்ரீ சுரேச்வரர் என்பார் எழுதுகிறார். இந்த தர்மகீர்த்தி என்ற பௌத்த ஆசிரியர் ஏழாம் நூற்றாண்டில் இருந்தவர். மேலும் சாந்த ரக்ஷிதர் என்பவர் எழுதிய "தத்துவஸங்க்ரஹம்" என்ற கிரந்தத்துக்கு கமலசீலர் என்பவர் ஓர் பாஷ்யம் செய்திருக்கிறார். இந்த பாஷ்யத்திலிருந்து ஓர் வாக்கியத்தை எடுத்து அதனை தமது ப்ரம்மசூத்ர பாஷ்யத்தில் கண்டனமும் செய்திருக்கிறார் (யத் அந்தர்ஞேயரூபம் தத் பஹிர்வத வபாஸதே II-2-28) அதுபோன்றே விக்ஞான வாதிகளான தின்னாகர்போன்றவர்களின் கொள்கைகளையும், ஸௌத் ராந்திகர்களின் கொள்கைகளையும் சூன்யவாதிகளின் கொள்கைகளையும் தமது பிரம்ம சூத்ர பாஷ்யத்தில் கண்டனம் செய்திருக்கின்றார். இட்ஸிங் (I-T' Sing) என்ற சீன ஆசிரியர் குறிப்பிடும் பர்த்ருஹரி என்பவருக்கு ஸ்ரீ சங்கரர் பிற்பட்டவர் என்பது யாவராலும் ஒப்புக் கொள்ளப்படுகின்றது. பர்த்ருஹரி கி. பி. ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர்.

ஸ்ரீ சங்கரர் அருளிய "ஸௌந்தர்ய லஹரி" யில் வரும் "த்ரவிட சிசு" (சுலோகம் 75) என்பது திருஞான சம்பந்தரைக் குறிப்பிடும். இந்தக் கருத்தை முதன் முதல் எடுத்துக்காட்டியவர் பதிமூன்ரும் நூற்ருண்டில் இருந்த லக்ஷ்மீதரர் என்பவர். மேலும் ஸ்ரீ சங்கரரின் சிவ புஜங்க ஸ்தோத்திரத்தில் வரும் "ஸூதத்ரோஹிண:" (13 வது சுலோகம்) என்ற பதம் பல்லவ ஸைங்யாதிபதியாயிருந்து பிற்காலத்தில் சிறுத்தொண்டர் என்ற சிறப்புப் பெயர் பெற்றவரான பரஞ்ஜோதி என்பவரைக் குறிக்கும் என்று சிலர் அபிப்பிராயப்படுகின்றனர். ஸ்ரீ சங்கரரின் ப்ரம்ம சூத்ர பாஷ்யத்தில் பிரஸ்தாபிக்கப்படும், பூர்ணவர்மன், ராஜவர்மன், பலவர்மன் என்பவர்கள் சரித்திர புருஷர்களாக இருந்தால், இந்த பாஷ்யம் எட்டாம் நூற்ருண்டுக்கு முன் எழுதப்பட்டது என்று கருத இடம் தரவில்லை. ஸ்ரீ T. R. சிந்தாமணி என்பவர் கொடுக்கும் கி. பி. 655 முதல் 689 வரை என்ற முடிபு மேலே காட்டிய ஹேஷ்யங்களுக்கு முரணுக உள்ளது.

குருவம்ச காவ்யம் என்ற நூலில் ஒரு கேரள குருநில மன்னன் ராஜசேகரன் என்பான் குறிப்பிடப்படுகிருன். அவன் மூன்று நாடக காவியங்கள் எழுதினதாயும், அவற்றை ஸ்ரீ சங்கரருக்குப் படித்துக் காட்டியதாயும் குருவம்ச காவ்யத்தில் கூறப்பட்டிருக்கின்றது. ராஜசேகரன் என்பவன் எட்டாம் நூற்ருண்டிலிருந்த சக்திபத்ரனுவான். மேலும் கேரள நாட்டில் ஒரு கர்ணபரம்பரைச் செய்தி உலவி வருகின்றது. அதாவது கொல்லம் ஆண்டு ஆரம்பித்தது கி. பி. 825ல். அந்த ஆண்டு ஸ்ரீ சங்கர பகவத் பாதாளின் ஜீவிய சரித்திரத்தில் ஓர் முக்கியமான சம்பவத்தைக் குறிப்பிடுகிறதாயும், அந்த ஆண்டில்தான் ஸ்ரீ சங்கரர் தமது பூத உடலை நீத்தது என்றும், அந்த சம்பவத்தின் காரணமாகவே கொல்லம் ஆண்டு ஆரம்பமாயிற்று என்றும் கூறுகிறது.

மைசூர் கெஜட் எழுதிய ரைஸ் என்பார் சங்கரர் காலம் கி. பி. 745-769 என்று குறிப்பிடுகின்ருர். ஃப்ளீட், லோகன்,

பண்டர்க்கார், மாக்ஸ்மல்லர், மாக்டொனுல்ட், பூலர், பார்த் என்பவர்கள் யாவரும் கி. பி. 788-820, என்றே முடிவு செய்கின்றனர். சில சுலோகங்கள் கொண்ட இரண்டு கால சங்கியங்களை (Chronograms) ஆதாரவாகக்கொண்டு பதக் என்பார் ஸ்ரீ சங்கரர் காலம் கி. பி. 788–820 என்று நிர்ணயம் செய்திருக்கின்ருர். இதுவே இப்பொழுது சாதாரணமாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கின்றது. குருவம்ச காவ்யத்திலும், மாதவீய சங்கர திக் விஜயத்திலும் ஸ்ரீ சங்கரரின் ஜனன ஜாதகம் கொடுக்கப்பட்டிருக்கின்றது. அது வருமாறு–மேஷத்தில் சூரியன், ரிஷபத்தில் ராஹு, மிதுனத்தில் சந்திரன், கடகத்தில் லக்னமும் குருவும், துலாத்தில் சனி, விருச்சிகத்தில் கேது, மகரத்தில் செவ்வாய், மீனத்தில் சுக்கிரனும் புதனும். வைசாகமாஸம், சுக்ல பஞ்சமி, ஆர்த்ரா (திருவாதிரை) நக்ஷத்திரம் என்று கண்டிருக்கின்றது சில சங்கர விஜயங்களில் சந்திரனை குருவோடு சேர்த்து லக்ன ஸ்தானமான கடகத்திலேயே போட்டிருக்கிருர்கள். ஜாதகத்தில் காணப்படும் கிரஹசேர்க்கை கி. பி. 805ல் என்பது சிலரின் கொள்கை. ஆதலால் ஸ்ரீ சங்கரரின் காலம், கி. பி. 788-820 அல்லது கி. பி. 805-837 (8) ஆகத்தான் இருக்க முடியும். அதிலும் 788-820 என்பதே சரியாக இருக்கலாம். காம்போஜத்திலுள்ள ஜயவர்மன் (கி. பி. 878-887) காலத்திய கல்வெட்டு ஒன்றில் அப்பொழுது ராஜகுருவாக இருந்த சிவசோமர் என்பவர் பகவான் ஸ்ரீ சங்கரரிடம் சகல சாஸ்திரங்களையும் கற்ருர் என்று கண்டிருக்கிறது.

## வாழ்க்கையும் செயலும் :

சங்கர விஜயங்கள் பல உள. அவற்றில் சில கட்சிச் சார்பில் எழுதப்பட்டவையாக இருப்பதால் அவற்றை முழுதும் நம்புவதற்கில்லை. மாதவீய சங்கர விஜயம் ஒன்றே அதிகப் பழக்கத்தில் இருந்து வருகின்றது. ஸ்ரீ சங்கர பகவத் பாதாளின் வாழ்க்கை வரலாற்றை முழுதும் எழுத இட வசதியின்மையால் அவரது வாழ்க்கையில் முக்கியமான சிலவற்றை மட்டும் ஈண்டு கூறுவாம்.

அவர் வடதிருவாங்கூர் சீமையிலுள்ள காலடி என்ற கிராமத்தில் சிவகுரு என்ற பிராம்மணேத்தமருக்கும் அன்னரின் தர்ம பத்தினி ஆரியாம்பாளுக்கும் பிறந்தவர். சிவகுரு என்பவர் கைப்பள்ளி இல்லத்தைச் சேர்ந்த நம்பூத்ரி பிராம்மணர். ஆரியாம்பாள் அம்மையார் மேலப்பாழூர் இல்லத்தைச் சேர்ந்தவர். சங்கரருடைய மூன்ருவது வயதில் தகப்பனர் காலமாகிவிட்டார். ஐந்தாவது வயதில் உபநயனமாயிற்று. சில ஆண்டுகளுக்குள்ளேயே சகல வேத சாஸ்திரங்களையும் கற்றுத் தேர்ந்துவிட்டார். அரும் பாடுபட்டுத் தன் தாயாரைத் தனக்கு சந்யாஸ ஆச்ரமம் வழங்கும்படி சம்மதிக்கவைத்துத் துறவியாக வெளியேறி விட்டார். நர்மதை நதிக்கரையை அடைந்து, ஆங்கு ஸ்ரீ கோவிந்த பகவத் பாதாளின் சிஷ்யரானர். அவரிட மிருந்து வேதங்களின் மஹா வாக்யங்களில் புதைந்து கிடக்கும் அரிய பெரிய தத்துவங்களை உபதேசிக்கக் கேட்டு உணர்ந்தார். அங்கிருந்து வாராணசி சென்ருர். அங்கு பிரஸ்தானத்ரயம் என்று புகழப்பட்ட பிரம்ம சூத்திரம், உபநிஷதம், பகவத்கீதை இவைகளுக்கு பாஷ்யம் செய்து முடித்தார். அப்பொழுது வியாஸர் அவருக்கு தரிசனம் அளித்து அவர் செய்திருந்த பாஷ்யங்களின் கருத்துக் களைத் தாம் முழுதும் ஒப்புக்கொள்வதாகக் கூறினர். வாராணசியில் ஸநந்தனர் என்பவரைத் தமது சிஷ்யராக வரித்துக்கொண்டார். இவரே பிற்காலத்தில் பத்மபாதர் என்ற சிறப்புப் பெயர் பெற்றவர்.

அதன்பின் ஸ்ரீ சங்கரர் குமரில பட்டரைப் போய்ப் பார்த்தார். ஆனல் அவரோடு சமயவாதம் செய்ய முடிய வில்லை. ஏனெனில் அப்பொழுது குமரிலபட்டர் துஷாநலத்தில் (உமியினல் வளர்க்கப்பட்ட நெருப்பு) பிரவேசித்திருந்தார். குமரிலபட்டரை ஸ்ரீ சங்கரர் ஆசீர் வாதம் செய்து விட்டு, அவருடைய வேண்டுகோளின்படி மண்டனமிச்ர விச்வரூபரைக் காணச்சென்ருர். அவரோடு தர்க்கவாதம் செய்து வெற்றி கண்டார். தமது அத்வைதக் கொள்கையை மண்டனர் ஒப்புக்கொள்ளும்படி செய்த துடன் அவரைத் தமது சிஷ்யராகவும் ஆக்கி சந்நியாஸமும்

கொடுத்துவிட்டார். மண்டனமிச்ரரின் தீக்ஷா நாமம் ஸ்ரீ சுரேச்வராசாரியர் என்பது. அவரே ஸ்ரீ சங்கரரின் முக்ய சிஷ்யருமாவர். மண்டனமிச்ரரைத் திருத்தியது ஓர் மஹத்தான காரியம். அது கர்ம மீமாம்ஸாக்கொள்கை மீது சங்கரர் அடைந்த வெற்றியின் சின்னமாக விளங்குகிறது. அதன் பின் பல சிஷ்யர்கள் சங்கரரை வந்தடைந்தனர். அவர்களில் முக்கியமானவர்கள் ஹஸ்தாமலகரும், தோடகா சாரியருமாவர்.

ஸ்ரீ சங்கரர் தமது சிஷ்யர்களோடு பாரத தேசம் முழுவதும் பாத யாத்திரை செய்தார். ஆங்காங்கு பல் வேறு சமயவாதிகளோடு சர்ச்சை செய்து தமது அத்வைதக் கொள்கையை ஸ்தாபித்தது மட்டுமன்றி, சமயத்தின் பேரால் செய்யப்பட்ட பல இழிவான அநாசார பழக்கங்களை அகற்றிச் சீர் திருத்தங்கள் செய்தார். அவர் நான்கு மடங்கள் ஸ்தாபனம் செய்தார். தெற்கே சிருங்கேரி மடமும், வடக்கே பதரி மடமும், மேற்கே துவாரகா மடமும், கிழக்கே புரி ஜகந்நாத மடமும் அவரால் ஸ்தாபிக்கப் பட்டவை. அவர் இந்த இடங்களைத் தேர்ந்தெடுத்த மைக்குக் காரணம், அவைகள் இயற்கை வளம் நிரம்பிய பனிமலைச்சாரலிலும், வனாந்தரங்களிலும், ஆற்றங்கரை ஓரங் களிலும், சமுத்திர தீரத்திலும் அமைந்து விண்ணும் மண்ணும் சேர்ந்து மனிதனின் மனத்தைப் பண்பு படுத்தி இறையன்பில் ஈடுபடுத்தவல்ல சூழ்நிலைகள் இயற்கை யாகவே அமைந்திருந்ததேயாகும். தமது சிஷ்யர்களில் ஸ்ரீ சுரேச்வராசாரியரை சிருங்கேரி பீடத் தலைவராகவும், ஸ்ரீ பத்மபாதரை துவாரகை மடத்துத் தலைவரா்கவும், ஸ்ரீதோடகாசாரியரை பதரி மடத் தலைவராகவும் ஸ்ரீ ஹஸ்தாமலகரை புரி மடத்துத் தலைவராகவும் நிறுவினர். ஸ்ரீ சங்கரருடைய சீரிய உள்ளக் கிடக்கை கருதற்பாலது. இந்திய தேசம் முழுவதும் ஆன்ம ஞானத் திலும், இயற்கை அமைப்பிலும் ஒரே நாடு என்ற ஒற்றுமை யைக் கண்டார். மேலும் அக்காலத்தில் தேசம் முழுவ திலும் பொது பாஷையாய் யாவராலும் பேசப்பட்ட ஸம்ஸ்க்ருத மொழியிலேயே தமது கிரந்தங்களை எழுதியதே

இந்த ஒற்றுமை உணர்ச்சியை வலுப்படுத்தியது எனலாம். இம்மொழி நாடெங்கும் பேசப்பட்டு வந்தது.

வெகுநாட்கள் சிருங்கேரியில் தங்கியிருந்துவிட்டு தமது தாயாரின் அந்திம காலம் நெருங்கியதை உணர்ந்தவராய் அங்கிருந்து தமது ஜனன க்ஷேத்ரமாகிய காலடிக்கு விரைந்து சென்றூர். ஆங்கு அவருடைய அன்னையின் ஆன்மாவை, பரமசிவன், மஹாவிஷ்ணு இவர்கள் மீது கவனம் பண்ணிய திவ்ய ஸ்தோத்திரங்களை இசையோடு கேட்டுக்கொண்டே ஸ்வயம்பிரகாச ஜோதியில் கலந்து பிறப்பிறப்பற்ற பதவியை அடையச் செய்தார். அவருடைய உற்ருரும் உறவினரும் மிக பிற்போக்கான மனப் பான்மையுடையவர்களாய் இருந்தமையால் அவர்களை மீறி தமது அருமைத் தாயாரின் சடலத்தை தமது இல்லத்தின் பின் பகுத்திலேயே பூர்ணு நதிக்கரையில் தகனம் செய்தார். அந்த இடம் இப்பொழுது ஓர் புனிதமான யாத்ரா ஸ்தலமாகத் திகழ்கின்றது.

முற்காலத்தில் நம்நாட்டில் ஆலயங்களே வித்யாபீடங் களாகவும், கலைக்கூடங்களாகவும் அமைந்திருந்தன. ஸ்ரீ சங்கரர் அக்காலத்தில் இருந்த எல்லா க்ஷேத்திரங்களையும் தரிசித்து, ஆங்காங்கு பூஜாவிதானங்களில் தக்க சீர்திருத் தங்கள் செய்து, பல ஆலயங்களில் ஸ்ரீ சக்ரப்பிரதிஷ்டையும் செய்தார். பழுதடைந்த ஆலயங்களை ஜீர்ணோத்தாரணம் செய்தார். காஞ்சி காமாக்ஷி ஆலயத்தில் ஸ்ரீசக்ரப்ரதிஷ்டை, பதரி ஆலயத்தில் நாராயண பிரதிஷ்டை, நேபாளத்தில் குஹ்யேச்வரிப்ரதிஷ்டை ஆகியவை குறிப்பிடத்தக்கவை.

"பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யர்" என்ற சொற்ரெ டருக்கு பாதயாத்திரை செய்து அறிவு பரப்பிய குரு என்பது பொருள். அவ்வாறே இவரும் பாத யாத்திரை யாகவே பல இடங்களுக்குச் சென்று சர்வசமயக் கோட் பாடுகளின் மீதும் வெற்றிகண்டு தமது அத்வைதக் கொள்கையைப் பரப்பி திக்விஜயம் செய்தார். ஒப்பாரும், மிக்காரும் இல்லாத ஸகல சாஸ்திர விற்பன்னர் என்பதற்கு

அடையாளமாகக் காஷ்மீரில் அங்கிருந்த ஸகல வித்வான்களையும் வாதத்தில் வென்று "ஸர்வக்ஞ பீடமும்" ஏறினர்.

நேபாளத்துக்கு அவர் கடைசியாகச் சென்ற சமயம் அவருக்கு ஸ்ரீ தத்தாத்ரேயரின் தரிசனமும் கிடைத்தது. அங்கிருந்து நேராகக் கேதார நாதம் சென்று தமது 32வது வயதில் பூதவுடலை நீத்து தமக்குரிய சொந்த ஸ்தானத்தை அடைந்தார். கேதார நாதரின் ஆலயத்துக்குச் சமீபத்தில் ஓர் இடம் ஸ்ரீ சங்கரர் மறைந்த இடமாக இப்பொழுதும் காண்பிக்கப்படுகின்றது. அங்கு அவர் திவ்ய மூர்த்தியும் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது.

அவர் தமது பிரஸ்தானத்ரய பாஷ்யங்களில் விளக்கி இருக்கும் அரியபெரிய கருத்துக்களைத் தாமே நூறு பாடல்களாலும், பத்துப்பாடல்களாலும், ஒரே சுலோகத்தாலும், ஏன்! அரை சுலோகத்தாலும் கூட விளக்கியிருக்கிறார். அவரே வேதங்களில் உள்ள பேதசுருதி, அபேதசுருதி, என்பனவற்றின் ஒற்றுமைப் பாட்டைக் கண்டறிந்து விளக்கி ஸமன்வயப்படுத்தியிருக்கிறார். இந்த ஸமன்வயக்கொள்கையில் அவர் உபதேசித்திருப்பது :— என்றும் அழியாததாயும், அருவமாயும், சின்மாத்ரமாயும் இருக்கும் பரம்பொருள் ஒன்றே. அதுவே பிரம்ஹம் எனப்படுவது, இரண்டற்றது. ஏகமானது முக்குண விகாரமற்றது. அந்த ப்ரம்ஹத்தின் அநிர்வசனீயமான ஆற்றலே மாயை என்றும் அவித்யை என்றும் கூறப்படுவது. இந்த ஆற்றலாலேயே தன்னிச்சையில், தோன்றி நின்று அழிவதும், காலம், இடம், நியதிகளுக்குக் கட்டுப்பட்டதுமான பிரபஞ்சமாக விரிந்தது. ஜீவான்மா என்பதும் பரமான்மா என்பதும் வேறல்ல, இரண்டும் ப்ரம்ஹமே! உபாதியாலே இரண்டாகத்தோன்றுகின்றன. உபாதியோ சிற்றறிவைக்கொடுத்து, அழியும் தன்மையது. அது உண்மையில் இல்பொருளே. அவித்யை நீங்கினல் அதனுல் தோன்றும் உபாதிகளும் தானே விலகிவிடும். அப்பொழுது உபநிஷத மஹா வாக்கியங்களில் கூறியிருப்பதுபோல

ஜீவன் ப்ரம்ஹமாகவே மிளிர்கின்றது. இந்த நிலையே ஆன்மாவின் உண்மை நிலை. இந்த ஜீவ ப்ரம்ஹ ஐக்கியமே மோக்ஷம், அல்லது விடுதலை எனப்படுவது. இந்த ஏகத்வத்தை உணர்ந்து அனுபவிப்பதுவே ஞானத்தின் உச்சநிலை. கர்மமும் பக்தியும் இந்த சீரிய மெய்ஞ்ஞானத்தை அடைய சாதனங்களேயன்றி அவையே நேராக மோக்ஷ சாதனமாகா. ஆனால் கர்மாவையும், பக்தியையும் தள்ளி விடக்கூடாது. ப்ரம்ஹம் ஒன்றே பாரமார்த்திக உண்மை. பிரபஞ்சம் வியாவஹாரிக உண்மை. அது ப்ரம்ஹ சாக்ஷாத் காரம் அடைந்த மஹான்களால் துச்சமாகக் கருதப்படுவது. வியாவஹாரிக உண்மை தனித்துநின்று செயல்படாது.

ஆயினும் ஜீவர்கள் யாவருமே இந்த நிலையையடைந்து அருவமான ஒன்றை மனதில் அனுஸந்தானம் செய்ய இயலாது. அத்தகைய சாமானியர்களுக்கு ஸ்ரீ சங்கரர் கூறும் உபதேசமாவது:—இறைவன் அருவமுமாகுவன். உருவமுமாகுவன். இவற்றை முறையே சொரூப தடஸ்த லக்ஷணம் என்பர். சொரூப நிலையில் அவனுக்கு உருவம் இல்லை. பொறி புலன்களுக்கு எட்டாதவர். மன வாக்கு களுக்கும் எட்டாதவர். இது அவருடைய தனிச் சிறப்பு நிலை. ஆனால் வியாவஹாரிக தசையில் அவர் உலகத்தைப் படைத்துக்காத்து அழிப்பவர். சிறப்பு நிலையில் அருவமாக இருந்த அவர், தன்னிச்சையாலே, தனது ஆற்றலாகிய மாயையால் சகளமாகி ஈச்வரன் என்றழைக்கப்படுகின்றார். தமது அடியார்களைக் காத்து ஈடேற்றும்பொருட்டு, சாதகனின் பக்குவ நிலைக்கு ஏற்ப பல்வேறு ரூபங்களைத் தாங்கியும் பல்வேறு நாமங்களை ஏற்றுக்கொண்டும் இருக் கிறார். ஸ்ரீ சங்கர பகவத்பாதாள், சிவன், தேவீ, விஷ்ணு, சூரியன், கணபதி, முருகன் இவர்களின் பூஜா விதானங் களில் சில சீர்திருத்தங்களும் செய்தார். இந்த ஆறு மூர்த்திகளைப் போற்றிப் புகழ்ந்து தத்துவ பரமாகவும், மந்த்ர பரமாகவும் அநேக ஸ்தோத்திரக் காவியங்கள் செய் துள்ளார். இவ்வறுவரும் வெவ்வேறு கடவுள்களல்லர். அவர்கள் யாவரும் அத்விதீயமான ப்ரம்ஹத்தின் பரிணாமங் களே. ஒருவருக்கொருவர் ஏற்றத்தாழ்வு, நிறைவு குறைவு

என்ற வித்தியாசமில்லாதவர்கள். அவர்களில் எவரை மன மொழி மெய்களால், அந்தரங்க பக்தியோடு உபாஸனே செய்தாலும், எல்லாம்வல்ல பரம்பொருளின் இன்னருளுக்குப் பாத்திரமாகி முடிவில் மெய்ஞானத்தையடைந்து முக்தியை சாதகன் அடைகின்ருன். ஸ்ரீ சங்கரர் ஆகம சாஸ்திரங்களே மறுக்கவில்லே. ஆனல் வேத பாஹ்யமானவற்றையும், ஆசார ஹீனமான வழிபாடுகளேயும் அறவே வெறுத்தார். வேத சம்மதமான தூய வழிபாட்டை ஒப்புக்கொண்டார். மேலே சொல்லப்பட்ட ஆறு விதமான மூர்த்தங்களேயும் ஒப்புக்கொண்டு அவர்களின் வழிபாட்டிலும் இயைபு உடையவராய் இருந்ததாலே அவருக்கு "ஷண்மத ஸ்தாபகர்" என்ற சிறப்புப் பெயர் கிடைத்தது.

ஸ்ரீவித்யா சம்பிரதாயமாகிய தேவீ வழிபாட்டில் கர்மம், பக்தி, யோகம், ஞானம் என்ற நான்கு உபாயங்களும் விரவியிருப்பதால், தேவீ உபாஸனேயே செயல் முறையில் அத்வைத சாதனேயாகின்றது. ஸ்ரீவித்யை என்பது ப்ரம்ஹ வித்யை என்பதின் மறுபெயரே. ஸ்ரீவித்யையின் அதி சிரேஷ்டத்வத்தை உணர்ந்தே தாம் ஸ்தாபித்த மடங்களில் பாஹ்ய வழிபாட்டுக்கு ஸ்ரீ சக்கரத்தை பிரதிஷ்டை செய்த தோடு ஆந்தர பூஜையாக ஸோஹம்பாவனுதியான நிஷ்டை யையும் நிறுவினர். கர்மா அல்லது செயல் என்பது தனியே மோக்ஷ சாதனமாகாது. அது நிஷ்காம்யமாகப் பலனேக் கோராமல் ஈச்வர பரமாகச் செய்யப்பட வேண்டும்.

ஸ்ரீ சங்கரருக்குப் பிற்காலத்தில் வந்த ஏனைய எல்லா சமயங்களும் அவருடைய அரும்பெரும் கொள்கைகளே ஒரு வாறு சார்ந்தவைகளே. அவருடைய வாழ்க்கையிலும் உபதேசங்களிலும் கர்மம், பக்தி, யோகம், ஞானம் என்ற நான்கு நெறிகளின் அதியற்புதமான ஒற்றுமையைக் காணமுடிகின்றது. அவர் ஓர் தலேசிறந்தமேதை. ஒப்புயர் வற்ற ஞானி. ஆழ்ந்த பக்தர். பெரிய யோகி. மிகச் சிறந்த கவிஞர். இவை எல்லாவற்றையும்விட அவரைப் போல் மக்கள் உள்ளங்களே ஈர்த்து, ஒன்று சேர்த்து செயல் படவைக்கும் ஆற்றல் உடையவர் வேறெவரையும் எங்கும்

காணமுடியாது. அவருடைய உபதேசங்களில்தான் பல்வேறு பாகுபாடுகள் உடைய மக்கள் அவரவர்கள் நிலையிலிருந்தே ஞானத்தை அடைந்து ப்ரஹ்மத்தோடு ஐக்கியமாக முடியும் என்ற பேருண்மையை உணர முடிகின்றது. இதன் காரணமாகத்தான் அவரால் போதிக்கப்பட்ட வேதாந்தம் உலகத்திலேயே மிகச் சிறந்ததாக இருப்பதுடன், வரும்காலத்திலும் எங்கும் யாவராலும் ஏற்றுக் கொள்ளக்கூடியதாகவும் இருக்கும் என்பது திண்ணம்.

அவர் யாத்த கிரந்தங்களில் முக்கியமானவை த்வாதசோபநிஷத் பாஷ்யங்களும், கீதா பாஷ்யமும், வ்யாஸப்ரம்ம சூத்ர பாஷ்யமுமாகும். இவைகளேயன்றி ஹஸ்தாமலகீயம், ஸனத்ஸுஜாதீயம், விஷ்ணு ஸஹஸ்ரநாமம், லலிதாத்ரிசதி என்பனவற்றிற்கும் உரைகள் செய்திருக்கின்றார். அவரால் செய்யப்பட்ட சிறு நூல்கள், வேதாந்தபரமான சுலோகங்களும், பல்வேறு கடவுள் மூர்த்தங்களுக்குச் செய்த ஸ்தோத்திரங்களுமாகும். பிரபஞ்சஸாரம் என்ற மந்த்ர சாஸ்திரமும் அவரால் இயற்றப்பட்டது. ஸ்ரீரங்கம் ஸ்ரீ வாணீ விலாஸ அச்சுக்கூடத்தாரால் பிரசுரிக்கப்பட்டிருக்கும் சங்கரருடைய நூற்றொகுதிகள் யாவும் அதிகார பூர்வமாக ஜகத்குரு ஸ்ரீ சச்சிதானந்த சிவாபிநவ ந்ருஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகளால் அங்கீகரிக்கப்பட்டிருப்பதால் அவை யாவும் சங்கரரால் இயற்றப்பட்டவையே என்று கொள்ளலாம். காவ்ய நடைக்கும், சொல் அலங்காரத்துக்கும், அமைதிக்கும், ஆழ்ந்த கருத்துகளுக்கும், எதிரிக்கு இடங்கொடாத தர்க்க ரீதிக்கும், தெளிவுக்கும், செவிக்கினிய அமைப்புக்கும், சரளமான வாக்கு வன்மைக்கும் சங்கரரின் கிரந்தங்கள் ஒப்புயர்வற்று விளங்குகின்றன. இத்தனை லக்ஷணங்களும் ஒருங்கே அமைந்த நூல்களை வேறெங்கும் காணமுடியாது.

அவர் முதலாவதாக பீடத்தை ஸ்தாபித்த ஸ்ரீ சிருங்கேரியில் துங்காநதியின் இடது கரையில் கற்பாறையில் செதுக்கப்பட்ட ஸ்ரீசக்கரத்தில் ப்ரம்ஹவித்யா ஸ்வரூபிணியான ஸ்ரீசாரதா தேவியை பிரதிஷ்டை செய்தார். சிருங்கேரி

மடத்துக்குத் தலைவராய் நியமிக்கப்பட்ட ஸ்ரீ ஸுரேச்வரா சாரியாருக்கு ஓர் ஸ்படிகத்தாலாய சந்திரமௌளீசுவர லிங்கத்தையும், ஸ்படிகத்திலாக்கிய மத்தியில் சிவப்புக் கல்லையுடைய கணபதியின் திருவுருவத்தையும் அளித்தார். இந்த கணபதி விக்கிரகத்துக்கு ரத்னகர்ப கணபதி என்று பெயர். கீழே கொடுக்கப்பட்டிருக்கும் பட்டியல் ஸ்ரீசங்கரரால் ஸ்தாபிதம் பண்ணப்பட்ட நான்கு மடங்களைப்பற்றிய விவரங்களை ஓரளவு காட்டும்.



## நான்கு ஆம்நாய மடங்கள்

| | மேற்கு துவாரகை [1]காளிகாமடம் | வடக்கு பதரிகாச்ரமம் ஜ்யோதிர்மடம் | கிழக்கு ஜகந்நாதம் கோவர்த்தன மடம் | தெற்கு சிருங்கேரி சாரதா மடம் |
|---|---|---|---|---|
| தேவதைகள் | சித்தேச்வரர், சக்தி பத்ரகாளி | நாராயணர் சக்தி பூர்ணகிரி | ஜகந்நாதர் சக்தி வ்ருஷளா | மலஹாநிகர லிங்கம் [2]சக்தி சாரதா |
| தீர்த்தங்கள் | கோமதி நதி | அலகநந்தா நதி | மஹோததி (கடல்) | துங்கபத்ரா நதி |
| ஆசார்யாள் | ஸ்ரீ பத்மபாதர் | ஸ்ரீ தோடகர் | ஸ்ரீ ஹஸ்தாமலகர் | ஸ்ரீ ஸுரேச்வர ஆசாரியாள் |
| வேதம் | ஸாமவேதம் | அதர்வண வேதம் | ரிக்வேதம் | யஜுர் வேதம் |
| சம்பிரதாயம் | கீடவால சம்பிரதாயம் | நந்தவால சம்பிரதாயம் | போகவால சம்பிரதாயம் | பூரிவால சம்பிரதாயம் |
| மஹாவாக்யம் | தத்வமஸி | அயமாத்மாபிரஹ்ம | ப்ரக்ஞானம பிரஹ்ம | அஹம் பிரஹ்மாஸ்மி |
| பிருதுகள் | தீர்த்த ஆச்ரம | கிரி, பர்வத, சாகர | ஆரண்ய, வன | எல்லா பிருதுகளும் |

1. சில ஆம்நாய பாடபேதங்களில் சாரதாமடம் என்றும் அழைக்கப்படுகின்றது.
2. ஆம்நாய உபநிஷத்தில் சிருங்கேரி பீட சக்தி காமாக்ஷி என்று கண்டிருக்கின்றது.

## நான்காம் அத்தியாயம்

### வியாக்யானபீட ஆரம்பகாலத்தில் சில நூற்றுண்டுகள்

ஒன்பதாம் நூற்றுண்டு முதல் பதிமூன்றும் நூற்றுண்டு வரை சற்றேறக்குறைய ஐந்நூறு ஆண்டுகள் இந்த அத்தியாயத்தில் பரிசீலிக்கப்படுகின்றன. கடற்கரை சமீபமாக இருந்த சிற்சில இடங்களில் தவிர மற்ற பிரதேசங்களில் பௌத்தசமயம் வலிமைகுன்றி வந்தது. ஆனால் க்ஷமணமோ பல அரசர்களின் ஆதரவால் பற்பல மடங்களை கேந்திரங்களாக வைத்துக்கொண்டு ஏனைய வைதிக சமயங்களைத் தாக்கி வந்தது. பதினேரும் நூற்றுண்டில் ஸ்ரீ ராமானுஜர், மேலக்கோட்டையிலும் காஞ்சீபுரத்திலும், ஸ்ரீரங்கத்திலும் வைஷ்ணவகேந்திர ஸ்தானங்களை ஏற்படுத்தினர். பதிமூன்றும் நூற்றுண்டில் கன்னடதேசத்தில், ஸ்ரீ சங்கரரின் அத்வைதக் கொள்கைகளுக்கு விரோதமாக த்வைத சித்தாந்தத்தை வைஷ்ணவ சமயத்தின் ஓர் கிளையாக ஸ்ரீ ஆனந்த தீர்த்தர் என்ற மத்வாச்சாரியார் பிரகடனம் செய்தார். தமிழ் நாட்டில் அத்வைதத்துக்கு நேர் விரோதமுமல்லாமல், பூரண சாதகமும் அல்லாமல் ஆகம சாஸ்திர அடிப்படையில் மெய்கண்டதேவர் சைவ சித்தாந்தத்தைப் பரப்பிவந்தார். அவருக்குப்பின் சைவம் பல கிளைகளாகப் பிரிந்துவிட்டது. பதிமூன்றும் நூற்றுண்டில் ஸ்ரீ ஏகாந்தத ராமய்யா, ஸ்ரீ பசவர் என்ற இருவர் லிங்காயதம் அல்லது வீரசைவம் என்ற த்வைத சித்தாந்தத்தை பிரசாரம் செய்ததோடல்லாமல் வேதத்தின் அதிகாரித்வத்தையே வலுவாக எதிர்த்தனர். ஆந்திர தேசத்தில் ஆராத்திய சைவர்கள் என்ற ஓர் கோஷ்டியினர் வேதத்தை ஒப்புக்கொண்டும் ஸ்மார்த்த சம்பிரதாயங்களை மேற்கொண்டும் இருந்தபோதிலும் லிங்காயத்தவர்களை அனுசரித்தனர். இவர்களின் தலைவர் மல்லிகார்ஜுன பண்டிதாராத்யர் என்பவர். பக்திமார்க்கத்தை அவலம்பிப்பதில் ஸ்ரீ சங்கரருடைய கொள்கைகளுக்கு முறண்பாடு ஒன்றும் இல்லை. ஆயினும் ஏனைய சமயவாதிகள் ஸ்ரீ சங்கரரின் அத்வைதத்தை "மாயாவாதம்" என்று

பெயரிட்டு இழிவு படுத்தினர். அதன் காரணமாக, அக் காலத்தில் ஸ்ரீ சாரதா பீடத்தை அலங்கரித்த ஆசார் யர்களுக்குத் தமது தீவிர தபஸ்ஸோடு ஏனைய சமயக் கொள்கைகளையும் ஆராய்ந்தறிந்து சமயவாதத்திலும் தேர்ச்சி பெறவேண்டிய அவசியம் ஏற்பட்டது. அதோடு ஏனைய சமயங்களில் ஆராதிக்கப்படும் திவ்ய மூர்த் தங்கள் யாவும் ப்ரம்ஹத்தினின்று வேறானவையல்ல, அதன் பல்வேறு பெயர்களே என்றும், சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் பேதமில்லையென்றும் யாவரும் உணரும் வண்ணம் பிரசாரம் செய்தனர்

நம் நாட்டில் ஆறும் நூற்றாண்டு தொடங்கி ஸம்ஸ்க்ருதக் கல்வி போதனையும், வேதங்களையும் அவற்றின் ஆறு அங்கங்களையும் பரப்பும் வேலையும் துரிதமாக நடந்தேறின. காலப்போக்கில் வேதம், அங்கம் இவற்றோடு புராணங்களையும் தர்ம சாஸ்திரங்களையும் போதிக்க ஆரம்பித்தனர். மேலும் பிரபாகரர், பட்டர் என்பவர்களின் கொள்கையை அனுசரித்து தர்க்கம், நியாயம், வியாகரணம், மீமாம்ஸை எனபனவும், போதிக்கப் பட்டன. அக்காலத்துக் கல்வெட்டுகள் இத்தகைய கல்வி ஸ்தாபனங்கள் பலவற்றை குறிப்பிடுகின்றன. இந்த கல்வி நிலயங்களில் முக்கியமான சிலவற்றைக் கூறுவாம். பெல்காமியைச் சேர்ந்த பிரம்மபுரி ஸலட்கி என்ற இடத்தி லிருந்த வித்யார்த்தி சங்கம், காஞ்சி, பாஹூர் முதலிய இடங்களிலிருந்த கடிகைகள், கேரள தேசத்திலிருந்த பாட சாலைகள் என்பன இத்தகைய ஸ்தாபனங்களில் சில. சிருங் கேரியிலும் அதை அடுத்த கிராமங்களிலும் வேதத்தில் பயிற்சி அளிக்கவல்ல சிறந்த மேதைகள் இருந்தனர். இது ஒரு கல்வெட்டிலிருந்து தெரிகின்றது. அவநீதன் என்ற கங்காதிபனான கொங்கணிவர்மன் என்பான் தனது ஆட்சி யில் இரண்டாவது ஆண்டில் யஜுர்வேத சாகையைச் சேர்ந்த தைத்திரீயத்தில் தேர்ச்சிபெற்று அதை பிரவசனம் செய்யும் சாமர்த்தியம் உள்ளவர்களாயும் திகழ்ந்த இரண்டு காச்யப கோத்திர பிராம்மணோத்தமர்களுக்கு மருகரி விஷய (பிரதேசத்)தில் இரண்டு இறையிலி கிராமங்களை தானம்

செய்தான் என்று இந்தக்கல்வெட்டு அறிவிக்கின்றது. கங்க மன்னன் ராசமல்லன் சாஸனம் ஒன்று பாரத்வாஜ கோத்திரம் நாகதேவபட்டர் ரிக்வேத பாரங்கதருக்கு பூதானத்தைக் குறிக்கிறது.

## 2. ஸ்ரீ சுரேச்வராசாரியாள்

ஸ்ரீ சங்கரர் சிருங்கேரி மடத்துக்கு ஸ்ரீ சுரேச்வரா சாரியாளைத் தலைவராகத்தேர்ந்தெடுத்தது ஓர் முக்கியத்வம் வாய்ந்த விஷயம். தமது பூர்வாச்ரமத்தில் பூர்வ மீமாம்ஸை யில் மிகத்தேர்ச்சி பெற்றிருந்த இவர் ஸ்ரீ சங்கரரின் சிஷ்யரானபின் சங்கரபாஷ்யங்களிலும் மிகத்தேர்ச்சிபெற்று விளங்கினார். நியாயம் பூர்வமீமாம்ஸைகளுக்கு மேலாக தமது ப்ரம்ஹமீமாம்ஸையை ஸ்தாபித்து அதனை பலப் படுத்துவதற்கு வேண்டிய ஆற்றல் உடையவர் என்பதை அறிந்தே ஸ்ரீ சங்கரர் இவரை சிருங்கேரி மடத்தலைவராக நியமித்தார். சுரேச்வரர் என்ற சொல் தேவகுருவான பிருகஸ்பதியையே குறிக்கும். பூர்வாச்ரமத்தில் விச்வரூபர் என்ற பெயரை உடையவராய் இருந்தவருக்கு ஸ்ரீ சங்கரர் சுரேச்வராசாரியர் என்ற தீக்ஷாநாமம் கொடுத்தது மிகப் பொருத்தமன்றோ!

ஸ்ரீ சுரேச்வராசாரியாள் செய்த கிரந்தங்களில் "நைஷ் கர்ம்ய ஸித்தி" என்பதொன்று. அதில் ஸ்ரீ சங்கரரின் அடிப்படைக் கொள்கைகளைத் தெளிவாகவும் சுருக்க மாகவும் எழுதியுள்ளார். ஸ்ரீ சங்கரர் செய்த பாஷ்யங்களில் பிருஹதாரண்ய உபநிஷத், தைத்திரீய உபநிஷத் பாஷ்யங் களுக்கு வார்த்திக உரை எழுதியிருக்கிறார். இதனால் அவருக்கு 'வார்த்திககாரர்' என்ற பட்டப்பெயரும் உண்டு. ஸ்ரீ சங்கரரின் தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரத்துக்கும் மானஸோல்லாஸம் என்ற வியாக்யான உரை கண்டுள்ளார். பஞ்சீகரணம் என்ற நூலுக்கும் உரை செய்திருக்கின்றார்.

ஓர் சர்ச்சை :—ஸ்ரீ சுரேச்வராசாரியாள் தமது பூர்வாச்ர மத்தில் மண்டனமிச்ரர் என்பவரா அல்லது விச்வரூபர் என்பவரா? மண்டனமிச்ரரும் விச்வரூபரும் இருவரா

ஒருவரா? குருவம்ச காவ்யத்தில் பிரம்மஸித்தி எழுதிய் மண்டனரும் சுரேச்வரரான விச்வரூபரும் வேறு என்று கூறப்பட்டிருக்கிறது. குருவம்சகாவ்யத்தின்படி ஸ்ரீசங்கரர் குமரிலபட்டரைச் சந்தித்தபின், அவரால் ஏவப்பட்டு மகத தேசத்திலிருந்த விச்வரூபரைச் சந்திக்கப்போனதாயும், வழியில் ஜைமினி பாஷ்யத்தைக் கற்றுணர்ந்த மண்டன மிச்ரர் என்பவர் சங்கரரோடு தர்க்கவாதம்செய்து தோற்றுத் தனக்கு மோக்ஷோபாயம் உபதேசிக்கும்படி ஸ்ரீ சங்கரரைக் கேட்டதாயும், அவ்வாறே அவருக்கு உபதேசம் பண்ணி விட்டு விச்வரூபரைக் காணச்சென்றதாயும் சொல்லப்பட்டு இருக்கிறது. விச்வரூபரைச் சந்தித்து அவரையும் அவருடைய தர்மபத்தினியான உபயபாரதியையும் வாதில் வென்று விச்வரூபரை சிஷ்யராக ஏற்றுக்கொண்டார் என்றும் கூறப்பட்டிருக்கின்றது. குருவம்சகாவ்யத்தில் இருக்கும் வரலாற்றை ஹிரியண்ணு, குப்புஸ்வாமி சாஸ்திரிகள், தினேஷ் சந்திரபட்டாச்சார்யர் போன்ற தற்காலமேதைகள் ஒப்புக்கொள்ளுகின்றனர்.

குப்புஸ்வாமி சாஸ்திரிகள் பதிப்பித்த ‘பிரம்ம ஸித்தி’ என்னும் நூலுக்கு முகவுரை எழுதிய P. P. S. சாஸ்திரி என்பார், “சாதாரணமாக பழக்கத்தில் இருந்து வருகின்ற மண்டனமிச்ரரே ஸ்ரீ சுரேச்வராசாரியாள்” என்ற கருத்தை ஆமோதிக்கின்ருர். அவருடைய அபிப்பிராயம் என்ன வென்ருல் பிரம்ம ஸித்தியில் பிரஸ்தாபிக்கப்படும் கொள்கைகள், ஸ்ரீ சங்கரர் காலத்துக்கு முன்னிருந்த அத்வைதக் கருத்துக்களையும், மீமாம்ஸைக் கருத்துக் களையும் ஸமன்வயப்படுத்தின கொள்கைகள் என்பது. ஸ்ரீ சங்கரருடைய உபதேசத்தைக் கேட்டுத் தெளிந்த பின் அக்கருத்துக்களில் சில மாறுபாடுகள் ஏற்பட்டிருக்கலாம் என்றும் கூறுகிருர். ஆனுல் குப்புஸ்வாமி சாஸ்திரிகளின் முடிபு ஓர் தீர்மானமான முடிபாகவே உள்ளது. அதாவது—

ஓர் ஆசிரியர் தாம் செய்த நூலின் இறுதியில் தன்னைக் குறிப்பிட்டுக்கொள்வது வழக்கம். இதற்கு ஆங்கிலத்தில் Colophon (கொலோஃபோன்) என்று

பெயர். பிரம்ம ஸித்தியின் இறுதியில் மண்டனமிச்ரர் தன்னை ஸ்ரீ சங்கரரின் சிஷ்யர் என்றோ, வார்த்திககாரர் என்று சிறப்புப்பெயர் பெற்ற ஸ்ரீ சுரேச்வராச்சாரியாள் என்பதுதான் தான் என்றோ கூறிக்கொள்ளவில்லை. மண்டனமிச்ரரைக் குறிப்பிடும் ஏனைய கிரந்தங்களிலும் இவ்வாறு கூறப்படவில்லை. ஸ்ரீ வித்யாரண்ய சுவாமிகளிலிருந்து மதுசூதன சரஸ்வதி ஈருக உள்ள பல பண்டிதர்களும் மண்டனமிச்ரரையும் ஸ்ரீ சுரேச்வராசாரியாளையும் வெவ்வேறவராகவே கூறிப் போந்தனர். அத்வைதத்தைக் கண்டனம் பண்ணும் ஸ்ரீ மாத்வர்கள்கூட தமது மணிமஞ்சரி என்ற நூலில் இவர்கள் இருவரையும் வெவ்வேருகவே வைத்து எழுதியிருக்கிருர்கள். மண்டனமிச்ரர் தமது பிரம்ம ஸித்தியை ஸ்ரீசங்கரரின் பிரம்ம சூத்ர பாஷ்யத்தைப் படித்தபின்பே எழுதியிருக்கவேண்டும். ஸ்ரீசுரேச்வராசாரியாள் ஸ்ரீசங்கரருடைய கொள்கைகளுக்கும் பிரம்மஸித்தியில் உள்ள கொள்கைகளுக்கும் இருக்கும் முரண் பாட்டைக் கண்டு, அவற்றைக்கண்டனம் செய்யவே நைஷ்கர்ம்ய ஸித்தியை எழுதியிருக்கவேண்டும்.

P. P. S. சாஸ்திரி தனது முகவுரையில் கீழ்க்கண்டுள்ள ரஸமான ஒரு செய்தியைக் குறிப்பிட்டிருக்கின்ருர். அதாவது ஒரு சமயம் ஸ்ரீ சச்சிதானந்த சிவ அபிநவ ந்ருஸிம்ஹ பாரதீ சுவாமிகளை இதுபற்றிக் கேட்டபோது, அவர்கள் தமது இயல்பான அன்பு ததும்பும் மொழியில் கூறியதாவது: “மண்டனர்” என்ற சொல் ஆதியில் ஓர் பட்டம் அல்லது பிருதுவைக் குறிக்கும். இந்தச்சொல் இருவருக்கும் பட்டப்பெயராக அமைந்திருந்தது. ஒரு மண்டனர் கிருஹஸ்தர். அவர் ஸ்ரீ சங்கரருடைய உபதேசம் கேட்ட பின்பும் கொள்கைகளில் திருந்திஞரேயன்றி கிருஹஸ்தராகவே வாழ்ந்து மறைந்தார். இன்னொரு மண்டனரோ கிருஹஸ்தராக இருந்து ஸ்ரீ சங்கரரின் உபதேசம் கேட்டு சந்நியாஸ ஆச்ரமத்தை மேற்கொண்டு ஸ்ரீ சுரேச்வராச்சாரியார் என்ற தீக்ஷா நாமத்தைப்பெற்றுர்” சர்ச்சைக்கு இதுவே மறுக்க முடியாத முடிவு. ஆகவே வார்த்திககாரர் என்றழைக்கப்படுகின்றவர் மண்டனமிச்ரர்

என்ற கிருஹஸ்தரல்ல. மண்டன விச்வரூபர் என்ற ஸ்ரீசுரேச்வராசாரியாளேயாகும்.

### 3. நித்யபோதகன ஆசார்யாள்

இவர் ஸ்ரீ சுரேச்வராசாரியாளுக்குப் பின் சிருங்கேரி பீடத்தில் அமர்ந்தார்.

இவரை "ஸம்க்ஷேப சாரீரகம்" என்ற கிரந்தத்தை இயற்றிய 'ஸர்வக்ஞாத்மன்' என்பவராகச் சிலர் கருது கின்றனர். இது தவறு. ஸர்வக்ஞாத்மன் என்பவரின் குருவின் பெயர் தேவேச்வரர் என்பது. இப்பெயர் அதன் பொருள் வளத்தால் ஸ்ரீ சுரேச்வராசாரியாளைக் குறிக்கும் என்ற குழப்பத்தால் வந்த தவறு. ஸம்க்ஷேப சாரீரகம் சோழ மன்னனுன மனுகுல ஆதித்யன் காலத்தில் எழுதப் பட்டிருக்கலாம் என்று மற்றெரு குழப்பத்தை உண்டு பண்ணிக்கொண்டார்கள். இந்த மன்னன் மனுகுல ஆதித்யன் வேறு, ஆதித்ய சோழன் என்பவன் வேறு, ஆதித்ய சோழன் கி. பி. 870-901ல் ஆண்டவன். மனுகுல ஆதித்தியன் என்பான் பத்தாம் நூற்றுண்டின் முடிவில் தெற்குத் திருவாங்கூர் சீமையில் அரசாண்டவன். ஸ்ரீ சுரேச்வராசாரியாள் என்று தவறுதலாகக் கருதப்பட்ட தேவேச்வரர் இவன் காலத்தவர். இவருடைய குரு தேவா நந்தர் என்பவர். பரமகுரு சிரேஷ்டானந்தர்.

ஸ்ரீ நித்யபோதகன ஆசார்யாளின் சிஷ்யரும் அவர் களுக்குப்பின் பட்டத்துக்கு வந்தவருமான ஸ்ரீ ஞானகன ஆசார்யாள் தமது 'தத்துவசுத்தி' என்ற நூலில் ஆசார்ய வணக்கம் கூறும் சுலோகம் ஒன்றில் தமது குருவைப்பற்றி இவ்வாறு புகழ்கின்ருர். "ஆன்மசாக்ஷாத்காரமென்ற உயர்ந்த மலைமீது நீருண்ட மேகம்போல் அமர்ந்து, தமது தார்க்கிக வித்வத் சாமர்த்தியத்தால், ஸிம்ஹ கர்ஜனை கேட்ட யானைக் கூட்டங்கள் ஓடி மறைவதுபோல், ஏனைய சமய வாதங்களை இடிபோல் தகர்த்து, வானம் பார்த்த பயிர்களுக்குப் புத்துயிரளிக்கும் மழையே போல தமது

சிஷ்யர்களின் மனதுக்குப் புத்துயிர் அளித்தும் புனிதப் படுத்தும் தண்ணளி சுரக்கும் கருணை வள்ளல்'' ஸ்ரீ நித்ய போதகன ஆசார்யாள் ஸ்ரீ சாரதா தேவிக்கும், ஸ்ரீ சந்திர மௌளிச்வரருக்கும் நித்யபடி பூஜை வழிபாடுகள் நடத்தி யும், தம்மைச் சார்ந்தாருக்குச் சிறந்த வழிகாட்டியாகத் திகழ்ந்தும் அவர்களை தார்மீக வாழ்க்கையில் ஈடுபடுத்தினர்.

## 4. ஞானகன ஆசார்யாள்

இவர்கள்தான் முன்பு சொன்ன தத்துவசுத்தி என்ற கிரந்தத்தின் ஆசிரியர். ஆராய்ச்சி பண்டிதர்கள் இவர்களை ஒன்பதாம் நூற்றுண்டு இறுதி பத்தாம் நூற்றுண்டின் துவக்கம் என்கின்றனர். ஸ்ரீ சங்கரரின் வேதாந்தத்தில் இரண்டு பிரிவுகள் உண்டாயின. ஒன்று ஸ்ரீ சங்கரரின் சூத்ர பாஷ்யத்துக்கு வியாக்யானமான "பாமதி" என்ற நூலைச்செய்த வாசஸ்பதி மிச்ரரைத் தலைமையாகக் கொண்டது. மற்றென்று "பஞ்சபாதிகா விவரணம்" என்ற நூலை இயற்றிய பிரகாசாத்மன் என்பவரைத் தலைமையாக உடையது. இவ்விருவரும் பிரம்ம சூத்ர பாஷ்யத்தை வியாக்யானம் செய்வதில் சில கருத்து வேற்றுமையுடையவர்கள். நான்காவது பட்டம் ஸ்ரீ ஞான கன ஆசார்யாள் தமது தத்துவ சுத்தியில் பிரகாசாத் மரின் பஞ்சபாதிகா விவரணக் கருத்துக்களை பல இடங் களில் ஏற்றுக்கொண்டிருக்கின்றூர்கள். வாசஸ்பதி மிச்ரர் ஒன்பதாம் நூற்றுண்டினர். பிரகாசாத்மரும் அதே நூற் றுண்டின் பிற்பகுதியில் இருந்தவர் என்னலாம். பிரகாசாத் மரின் பஞ்ச பாதிகா விவரணத்தை எடுத்தாண்டிருப்பதால் இந்த ஆசார்யாள் பத்தாம் நூற்றுண்டில் இருந்தவர் என்று கூறுவதில் குற்றமொன்றுமில்லை. ஸ்ரீ அப்பய தீக்ஷிதர் அவர்கள் ஸ்ரீ ஞானகன ஆசார்யாளுடைய தத்துவ சுத்திக்குப் பெரும் மதிப்புக் கொடுத்திருக்கின்றூர். இந்த நூல் தமது சிஷ்யர்களுக்கு ஆசார்யாள் செய்த வியாக்யான பிரவசனமாக இருக்கலாம்.




## 5. ஸ்ரீ ஞானோத்தம சிவ ஆசாரியாள்

இவர்கள் ஸ்ரீஞானகன ஆசாரியாளுக்குப்பின் 5-வது பட்டமாகப் பதவி வஹித்தவர். தமது வித்யாஸ்ரீ என்ற கிரந்தத்தின் இறுதியில் தம்மை ஞானகன ஆசார்யாளின் சிஷ்யர் என்று கூறிக்கொள்கின்றார். 'சித்சுகி' என்ற நூலின் மூன்றாவது பரிச்சேதத்தின் கடைசியில் இவர் "ஸ்ரீகௌடேச்வராசார்ய பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய ஞானோத்தம பூஜ்யபாதர்" என்று அழைக்கப்படுகின்றார். ஆகவே இவர்கள் கௌட பிராம்மணர் என்பது தெளிவு. ஏறக்குறைய பத்தாம் நூற்றாண்டில் கௌட தேசத்திலிருந்தும், மத்திய பிரதேசத்திலிருந்தும், காஷ்மீரிலிருந்தும், மேற்குக் கடற்கரை பிரதேசங்களிலிருந்தும் அநேக பிராம்மணக் குடும்பங்கள் தெற்கே வந்து குடியேறினர். முதலாவது ராஜ ராஜசோழனும், முதலாவது ராஜேந்திர சோழனும் அவர்களுக்கு பூமிதானம் வழங்கியிருக்கிறார்கள். அவ்வாறு குடியேறியவர்களில் சிலர் சைவாசாரியர்கள். உபநிஷதக் கொள்கைகளைக் கடைப்பிடித்தவர்கள். அவர்கள் 'ஸ்வாமி தேவர்' அதாவது ராஜகுரு என்றழைக்கப்பட்டு சோழ பாண்டிய அரசர்களால் நன்கு மதிக்கப்பட்டிருந்தார்கள். ஸ்ரீஞானோத்தம சிவாசார்யாளின் சிஷ்யர்களில் ஒருவர் ஆசார்யாளை 'ஜகத்குரு' அல்லது 'திரிபுவன குரு' என்று கூறியிருக்கின்றார். ஆசார்யாள் செய்த கிரந்தம் 'வித்யாஸ்ரீ' என்பது. அது பிரம்மசூத்ர பாஷ்யத்துக்கு அவர் செய்த வியாக்கியானமே.

சிஷ்யர்கள்: ஸ்ரீ ஞானோத்தம ஆசார்யாளின் சிஷ்யர்களில் ஒருவர் விக்ஞானாத்மன் அல்லது விக்ஞானாச்ரமர் என்று அழைக்கப்படுகிறவர். அவர் 'தாத்பர்யத்யோதினி' என்ற கிரந்தத்தையும், நாராயணோபநிஷத்துக்கு ஓர் விருத்தி உரையும் செய்திருக்கிறார். பல கிரந்தங்களை இயற்றிய சித்சுகர் என்பவர் மற்றொரு சிஷ்யர். இவர் ஸிம்ஹாசலத்திலிருந்து வந்தவர். அத்வைத தத்துவங்களை விளக்கும் 'தத்துவபிரதீபிகை' அல்லது 'சித்சுகீ' என்று கூறப்படும் அரிய நூலைச்செய்தவர். இவர் ஏனைய சமயக்

கொள்கைகளை ஆராய்ந்து அவைகளைக்கண்டனம் செய்யும் தோரணையில் இந்நூலை எழுதி தமது கொள்கையை தர்க்க ரீதியாக ஸ்தாபிக்கின்றார். நையாயிகம், வைசேஷிகம் என்ற மதக்கொள்கைகள் வெகுவாகக் கண்டிக்கப்படுகின்றன. 'பாவத்யோதனிகா' அல்லது 'விவரணதாத்பர்ய தீபிகை' என்று கூறப்படும் இவருடைய கிரந்தம் பிரகாசாத்மருடைய பஞ்சபாதிகா விவரணத்துக்கு வியாக்யானம் ஆகும். இவர் 'அதிகரண மஞ்ஜரீ' என்ற நூலில் ப்ரஹ்ம சூத்ரத்தின் அதிகரணங்களுக்கு அட்டவணை எழுதியுள்ளார். 'அதிகரண ஸங்கதி' என்ற நூலில் மேல்கண்ட அதிகரணங்களின் ஒன்றுக்கொன்றுள்ள இயைபை விளக்குகிறார். மண்டனரின் பிரம்மஸித்திக்கும், ஸ்ரீ சுரேச்வராசாரியாளின் நைஷ்கர்ம்ய ஸித்திக்கும் உரை கண்டிருக்கிறார். 'ப்ரமாணமாலாடிகா' என்பதும் 'வேதாந்த சித்தாந்த காரிகா மஞ்ஜரீ' என்பதுமான இரண்டு கிரந்தங்களையும் இயற்றியிருக்கிறார்.

சித்சுகருடைய சிஷ்யரான சுகபிரகாசர் என்பவர் மேலே சொல்லப்பட்ட அதிகரணமஞ்ஜரிக்கு 'அதிகரண ரத்னமாலா' என்ற செய்யுள் வடிவான பாஷ்யம் எழுதியிருக்கிறார். அமலாநந்தர் என்பவர் சுகப்பிரகாசரைத் தமது வித்யாகுரு என்று கூறுகின்றார். இந்த அமலாநந்தர் திரியம்பக (நாஸிக்) க்ஷேத்ரத்தவர். யாதவ அரசர்களான கிருஷ்ணர், மஹாதேவர் (1246–71) என்பவர்களின் காலத்தவர். அவருடைய சிறந்த நூல், பாமதி என்ற கிரந்தத்துக்கு வியாக்கியானமான 'கல்பதரு' என்பதாகும். அவர் எழுதிய 'சாஸ்திரதர்ப்பணம்' என்ற நூலில் ஸ்ரீ சங்கர பாஷ்யத்தில் கண்ட வரிசையில் அதிகரண விளக்கம் கொடுத்திருக்கின்றார்.

சித்சுகர் ஞானோத்தம ஆசார்யாளை தக்ஷிணாமூர்த்தி, வியாஸர், சங்கரர் இம்மூவரின் ஜோதி சொரூபம் என்று புகழ்கின்றார். இதைவிட வேறு பெருமை ஸ்ரீ ஞானோத்தமாசாரியாளுக்குக் கூறமுடியாது. ஸ்ரீ ஞானோத்தம ஆசார்யாளுக்கும் ஸ்ரீ வித்யாசங்கர தீர்த்தருக்கும் இடையே

சிருங்கேரி பீடத்தை பின்வரும் நான்கு அதிபர்கள் ஒருவர் பின் ஒருவராய் அலங்கரித்தனர்.

6. ஸ்ரீ ஞானகிரி ஆசார்யாள்.
7. ஸ்ரீ ஸிம்ஹகிரி ஆசார்யாள்.
8. ஸ்ரீ ஈச்வரதீர்த்த ஆசார்யாள்.
9. ஸ்ரீ ந்ருஸிம்ஹதீர்த்த ஆசார்யாள்.
(ந்ருஸிம்ஹமுனி)

ஸ்ரீ ஞானேத்தம ஆசார்யாளுக்குப் பின் ஸ்ரீ ஞானகிரி ஆசார்யாளும், அவர்களுக்குப் பின் ஸ்ரீ ஸிம்ஹகிரி ஆசார்யாளும், பட்டத்துக்கு வந்தனர். ஸ்ரீ ஸிம்ஹகிரி ஆசார்யாள் பெயரால் ஓர் அக்கிரகாரம் சிருங்கேரியின் அண்மையில் அமைக்கப்பட்டது. அவர்களுக்குப் பின் ஸ்ரீ ஈச்வர தீர்த்த ஆசார்யாளும் அவர்களுக்குப் பின் ஸ்ரீ ந்ருஸிம்ஹ தீர்த்த ஆசார்யாளும் சிருங்கேரி பீடத்தை அலங்கரித்தனர். இந்நால்வரும் தர்க்க ரீதியாக வாதப்பிரதிவாதங்களில் வல்லவர்களாய் விளங்கினுர்கள்.

**வேதாந்த அறிவு பரவுகின்றது:** இதுவரை நாம் பரிசிலனை செய்த ஐந்நூறு ஆண்டுகளில் ஸ்ரீ சங்கர பாஷ்யங்களுக்கும், ஸ்ரீ சுரேச்வராசாரியாளின் வார்த்திக உரைகளுக்கும், அநேக வியாக்யான நூல்களும் மற்றும் பல அத்வைத சாஸ்திர கிரந்தங்களும், எழுதப்பட்டன. இவைகள் வேதாந்தத்தின் பிரிவுகளான 1. பாமதி 2. விவரணம் என்ற இருவகைகளைத் தழுவியவைகளாக அமைந்தன. தர்க்கரீதியாகத் தமது வேதாந்தக் கொள்கைகளை ஸ்திரப்படுத்துவதற்கு, ஏனைய சமயக் கொள்கைகளை ஆராய்ந்து கண்டனம் பண்ணியும் ஏராளமான நூல்கள் எழுந்தன. இவ்வகையைச் சேர்ந்த சில நூல்கள் 'ஸித்தி' என்ற பெயரில் பலரால் எழுதப்பட்டு வெளிவந்தன.

இந்த ஐந்நூறு ஆண்டுகளில் தோன்றிய அத்வைத சாஸ்திர கிரந்தங்களே பிற்காலத்து ஆசிரியர்களுக்கு வழி காட்டிகளாக இருந்தன. ஸ்ரீ சாரதா பீடமே இவற்றிற்

கெல்லாம் மத்திய கேந்திர ஸ்தானமாகவும் திகழ்ந்தது. அதைச் சுற்றி அநேக மேதைகளும், மகான்களும், இந்தியா வின் பல பாகங்களிலிருந்தும் தோன்றி தமது கருத்துக்களை நூல்களாக வடித்தனர். கர்நாடகம், சோழதேசம், ஆந்திர தேசம், மஹாராஷ்ட்ரம், கௌட தேசம் முதலிய பல்வேறு பகுதிகளிலிருந்தும் தலைசிறந்த விற்பன்னர்கள் வந்து வேதாந்த விசாரணை செய்தனர். இதன் விளைவாக "வித்யா ஸ்தானங்கள்" என்று கூறப்பட்ட கல்விக் கூடங்களிலும் வேதாந்த சாஸ்திரம் பாடமாகக் கற்பிக்கப்பட ஆரம்பித்தது.

கர்னாடக தேசத்தில் பெல்காமியைச் சேர்ந்த சைவ மடங்களோடு ஓர் அத்வைத மடமும் நிறுவப்பட்டு பிரபல மடைந்தது. இது பதினேரும் நூற்ருண்டில். சோழ நாட்டில் எண்ணுயிரம் என்றும் ராஜராஜ சதுர்வேதிமங்கலம் என்றும் அழைக்கப்பட்ட இடத்தில் இருந்த ஸம்ஸ்க்ருதக் கல்லூரியிலும், திரிபுவனத்தில் இருந்த கல்லூரியிலும் வேதாந்த பாடம் கற்பிக்கப்பட்டது. சோழநாட்டில் திரு விடைக்சழி என்ற ஊரில் கேரள தேசத்திலிருந்து வந்து வேதாந்தம் பயிலும் வித்தியார்த்திகளுக்கு இலவச உணவு அளிக்க மானியம் விடப்பட்டிருக்கின்றது. ஒவ்வொரு மடத் தோடும் ஓர் சம்ஸ்க்ருத கல்லூரியும் ஓர் ஆலயமும் இணைக்கப்பட்டிருந்தன. இக்கல்லூரிகளில் வெளியூர் வித்யார்த்திகளுக்குத் தங்குவதற்கு இடமும், உணவும் உடையும் அளிப்பதற்கு வசதிகள் செய்யப்பட்டிருந்தன. இந்தக் கல்வி நிலையங்களில் வேதாந்த சாஸ்திரமும் ஏனைய பாடங்களோடு கற்பிக்கப்பட்டது. கேரள தேசத்தில் மட்டும் திருச்சூர் உள்பட இத்தகைய மடங்கள் பதினெட்டு இருந்ததாகத் தெரிகின்றது.

---

## ஐந்தாம் அத்தியாயம்

## மூன்று மாபெரும் தீர்க்கதரிசிகள்

### மடம் ஸம்ஸ்தானமாக உருவாகின்றது.

### 10. ஸ்ரீ வித்யாசங்கர தீர்த்த ஆசார்யாள்

(துறவு 1228. விதேக முக்தி 1333.)

"உண்மையில் ஸ்ரீ வித்யா தீர்த்தர் துறவிகளுக்குள் முதன்மை ஸ்தானம் வகிக்கின்றார். அவரை யதிராஜர் என்னலாம். அவர் சூரியனைவிட மேம்பட்டவர். சூரியன் பகலில் புற இருளைத்தான் போக்குவான். ஆனால் வித்யா தீர்த்தரோ பகலிலும் இரவிலும் நமது புற இருளையும், அக இருளையும் ஒருங்கே போக்கவல்லவர்." இவ்வாறு விஜய நகர சாம்ராஜ்ய சக்ரவர்த்தியாக இருந்த இரண்டாவது ஹரிஹரர் என்பவர் ஸ்ரீவித்யாசங்கர ஆசார்யாளைப் பற்றிப் புகழுரை கூறியுள்ளார். பல சிஷ்யர்களால் ஆச்ரயிக்கப் பட்டு அநேக ஆண்டுகள் ஸிம்ஹகிரியிலேயே ஆன்ம சாக்ஷாத்கார ஸகஜ நிஷ்டையில் ஆழ்ந்து இருந்தார். அவருடைய அருட் பிரசாதத்தால் அவருடைய சிஷ்யர் களும், மந்திரம், தந்திரம், யோகம், தியானம் என்ற துறை களில் தேர்ச்சி பெற்றவர்களாய் விளங்கினார்கள். நாட்டின் பல பாகங்களில் யாத்திரை செய்து மக்களுக்கு உபதேசம் செய்து அருளியிருக்கிறார்கள். ஒருசமயம் திருவனந்த புரத்தில் ஸ்ரீ மத்வாசாரியாரோடு வாதம் செய்து வெற்றி கண்டதாகச் சான்றுகள் இருக்கிறன. (ஸ்ரீ மத்வர் காலம் 1198—1275)

ஒருசமயம் ஏகசிலா நகரம் என்ற வாரங்கல்லிலிருந்து ஓர் பிராம்மண இளைஞர் ஆசார்யாளிடம் வந்தார். வயதில் சிறியவராயினும் ஓர் முமுக்ஷுவுக்குத் தேவையான சகல பண்பாடுகளிலும், ஆசார சீலங்களிலும் சிறந்தவராக இருந்தார். அவருடைய பக்குவத்தையறிந்து ஆசார்யாள் அவருக்கு சந்நியாசம் கொடுத்து பாரதீ கிருஷ்ண தீர்த்தர் என்ற தீக்ஷாநாமமும் அருளினார். இது நடந்தது கி, பி,

1328ம் ஆண்டில். மூன்று ஆண்டுகள் கழித்து பாரதீ கிருஷ்ணதீர்த்தரின் மூத்த சகோதரரும் அங்கு வந்து சேர்ந்தார். அவரும் நல்ல பக்குவ மனமுள்ளவராக இருந்தமையால் அவருக்கும் சந்நியாசம் கொடுத்து 'ஸ்ரீ வித்யாரண்யர்' என்ற தீக்ஷாநாமம் நல்கினர். பாரதீ தீர்த்தர் தமது குருவிடமே தங்கிவிட்டார். ஸ்ரீ வித்யாரண்யரோ நீண்டகாலம் யாத்திரைகள் செய்து சிலகாலம் ஹம்பியில் தங்கி அங்கு ஹரிஹரர், புக்கர் என்ற இரண்டு சகோதரர்களுக்கு விஜயநகர ஸாம்ராஜ்யத்தை நிறுவ உதவி புரிந்தார். இதற்கு சில ஆண்டுகளுக்கு முன்பே ஹரிஹரரும் புக்கரும் சிருங்கேரிக்கடுத்த ஸிம்ஹகிரியில் ஸ்ரீ வித்யா தீர்த்தரைக்கண்டு அவர்களின் ஆசியைப்பெற்றிருந்தார்கள்.

ஸிம்ஹகிரியில் ஓர் விசித்திரமான உருவம் கல்லில் செதுக்கப்பட்டிருக்கின்றது. அந்தக்கல் நான்கு பக்கங்கள் உடையது ஒரு பக்கத்தில் தமது நெருங்கிய சிஷ்யர்களான பாரதீ கிருஷ்ண தீர்த்தரும், வித்யாரண்யரும் இருபுறங்களிலும் நிற்க மத்தியில் ஸ்ரீ வித்யாசங்கரர் திருவுருவம் வடிக்கப்பட்டிருக்கின்றது. மற்ற மூன்று பக்கங்களிலும் முறையே பிரம்மா, விஷ்ணு, மஹேச்வரர் என்ற மூவரின் உருவங்கள் செதுக்கப்பட்டிருக்கின்றன. ஆசார்யாளின் திருவுருவத்துக்கு மேல்புறம் லக்ஷ்மீந்ருஸிம்ஹர் உருவமும் யாவற்றிற்கும் மேல் ஓர் சிவலிங்க வடிவமும் செதுக்கப்பட்டிருக்கின்றன. இந்த அபூர்வ சிலாரூபத்தைச் செய்து முடித்தபோது ஸ்ரீ வித்யாசங்கரதீர்த்த ஆசார்யாள் அதற்கு சதுர்மூர்த்தி வித்யேச்வரர் என்று பெயரிட்டார். மேலும் பாரதீ தீர்த்தரிடம் பூமிக்கடியில் ஓர் பிலத்தில் தான் பன்னிரண்டு ஆண்டுகள் [1]போகநிலையில் இருந்து இந்த

---

1. இதன் தத்துவமென்னவெனில் குண்டலினீ யோகம் செய்கிறவர்கள் தமது நாக்கை உள்புறமாக மடக்கி இந்திர யோனியை அடைத்துவிடுவார்கள். ஸஹஸ்ராரத்தில் பெருகும் அமுதம் சுஷும்ன வழியாகக் கீழே இழிந்து சரீரத்தின் சகல நாடிகளையும் நனைப்பதால் அவர்களுடைய தேகம் வஜ்ர சரீரமாவதோடு அவர்கள் நினைத்த உருவத்தை எடுக்கும் ஆற்றலையும் அடைகிறார்கள். முடிவில்

சிலாரூபம் போன்ற உருவத்தைத்தான் அடையப்போவ தாகவும் தெரிவித்தார்.

நிற்க, ஆசார்யாளின் ஆக்ஞைப்படி துங்கா நதியின் வடகரையில் ஓர் பிலம் தோண்டி ஓர் அரை போன்று கட்டப் பட்டது அதற்குள் ஆசார்யாள் இறங்கிக்கொண்டு மேல் வாசலை மூடும்படி உத்தரவிட்டார். அவ்வாறே மூடப் பட்டது. மூன்றுண்டுகள் சென்றன. புதுப்பீடாதிபதி வெளியூர்களில் சஞ்சாரம் செய்துகொண்டிருந்த சமயம் மடத்தில் இருந்த சிலர் குருநாதரின் ஆணையையும் மீறி, உள்ளே சென்ற ஆசார்யாள் என்ன ஆனர் என்று பார்க்கும் ஆவலால் உந்தப்பட்டவர்களாய் மேல் வாசலைத் திறந்தார்கள். ஆச்சர்யம்! பிலத்தினுள்ளே ஆசார்யாளின் பூதவுடல் காணவில்லை. அதற்குப்பதிலாக ஸிம்ஹகிரியில் ஆசார்யாளால் செய்விக்கப்பட்ட சதுர்மூர்த்தி வித்யேச் வரர் உருவத்தின் மேலுள்ள லிங்க உருவம் இருக்கக் கண் டார்கள். மடத்தின் ஊழியர்கள் செய்த இந்த அதிக்கிரமச் செயலைக் கேள்வியுற்ற ஸ்ரீ பாரதீ தீர்த்தர் மிகச் சீற்றம் கொண்டார். பிலத்துவாரத்தை மூடும்படி செய்தார். கவலையில் ஆழ்ந்தார். அவருடைய கனவில் ஓர் ஆணை பிறந்தது. அதன்படி அந்த பிலத்தின்மேல் ஓர் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்தார். சில ஆண்டுகளுக்குள் ஆங்கு ஓர் மிக அழகான ஆலயம் எழுப்பப்பட்டது. அதில் நித்யப்படி பூஜைக்கும் ஏற்பாடு செய்தார். அதுபோலவே ஸிம்ஹ கிரியில் ஆசார்யாளின் ஆணையின்படி உருவாக்கப்பட்ட

---

நம் கண்ணுக்குத் தெரியாமலும் மறைந்துவிடுவார்கள். இப்படி நாக்கைக்கொண்டு தொண்டை துவாரத்தை அடைப் பதற்கு "கேசரீ முத்ரை" என்று பெயர். பால்ப்ரண்டன் என்ற ஆங்கில ஆசிரியரும் இதுபற்றி எழுதியுள்ளார். ஸ்ரீவித்யாதீர்த்த ஆசார்யாள் போன்ற சித்த புருஷர்கள் இந்த நிலையில் இருக்கும்போது தான் முன்புசங்கல்பித்த உருவத்தை எடுப்பதுடன் தன்னைச்சார்ந்தாருக்கு அவ்வுருவத்திலிருந்தே அருள் பாலிக்கவும் கூடும். அவ்வுருவமே சதுர்மூர்த்தி வித்யேச்வரர் என்ற சிலாவடிவம்.

சதுர்மூர்த்தி வித்யேச்வரரின் சிலாவுருவத்துக்கும் நித்யப் படி பூஜைகள் நடத்த ஏற்பாடு செய்தார். இன்றும் ஸ்ரீ வித்யாசங்கரருடைய தேஜஸ் அங்கு வியாபித்திருக்கிறது. பக்தி சுதாதரங்கிணி என்ற நூலில் நடு இரவு நேரங்களில் அந்த ஆலயத்தில் பூஜாகால மணியோசை போன்ற சப்தங்கள் கேட்பதாகக் கூறப்பட்டிருக்கின்றது. இப்ப வும் சிருங்கேரி சம்ஸ்தானத்தின் அதிகாரபூர்வமான முத்திரையில் "ஸ்ரீ வித்யாசங்கர" என பொறிக்கப்பட் டிருப்பதைக் காணலாம்.

## 11. ஸ்ரீ பாரதீ கிருஷ்ண தீர்த்த ஆசார்யாள்

சன்னியாசம். 1328 விதேக முக்தி. 1380

## 12. ஸ்ரீ வித்யாரண்ய ஆசார்யாள்

சன்னியாசம் 1331 விதேக முக்தி. 1386

முன்பு பிரஸ்தாபிக்கப்பட்ட வாரங்கல் சகோதரர்களைப் பற்றி 'வித்யாரண்ய காலக்ஞானம்' என்ற நூலில் கூறி யிருப்பதையே "குரு வம்ச காவ்யமும்" பின்பற்றுகிறது என்னலாம். ஸ்ரீ பாரதீ தீர்த்தர் என்ற பாரதீ கிருஷ்ண தீர்த்த ஆசார்யாள், இரு சகோதரர்களுள் வயதில் இளையவ ராளுலும், சந்நியாஸம் வாங்கிக்கொண்டதில் அவரே முந்தியவர். ஆதலால் ஸ்ரீ வித்யாசங்கர ஆசார்யாளுக்குப் பின் அவரே 11-வது பட்டமாகப் பீடம் ஏறினர். ஆனுல் அவர் பிரதான ஆசார்யாளாகவும், ஸ்ரீ வித்யாரண்யர் பட்டத்து இளவரசாகவும் அருளாட்சி புரிந்தனர்.

ஸ்ரீ வித்யாரண்யர் எப்பொழுதும் யாத்திரையிலேயே இருப்பவர். ஒருசமயம் அவர் காசிக்குச் சென்றிருந்த போது அவருக்கு வியாஸருடைய தரிசனம் கிடைத்தது. பின்பு தெற்கே வந்து ஹம்பியில் மதங்கபர்வதத்திலுள்ள விருபாக்ஷர் ஆலயத்துக்கு அண்மையில் தியான நிஷ்டை யில் அமர்ந்திருந்தார். அப்பொழுது பிரதாபருத்ரனின் மந்திரிகளான மாதவர், சாயணர் என்ற இரண்டு சகோதரர்கள் அவரை வந்து தரிசித்துத் தமக்கு புத்திர

பாக்கியம் உண்டாகவேண்டும் என்று பிரார்த்தித்தனர். ஸ்ரீ வித்யாரண்யர் அவர்களுக்குப் புத்திர பாக்கியம் கிடைக்காது என்பதைத் தெரிவித்து அவர்களுடைய பெயர்கள் எப்பொழுதும் நிலவுலகில் நிலவிவர உபாயம் ஒன்று இருப்பதாயும் சொன்னார். அவர் அதுவரை வேதங்களுக்கும் இதர சாஸ்திரங்களுக்கும் செய்து வைத்திருந்த பாஷ்யங்களை அவர்களுக்குக் கொடுத்து அவற்றை அவர்கள் பெயரால் பிரசுரிக்கும்படி அனுமதி அளித்தார். அவையே இப்பால் மாதவீய பாஷ்யம் என்றும் சாயண பாஷ்யம் என்றும் பழக்கத்தில் இருந்து வருகின்றன.

தக்ஷிணபீடபூமியிலும், தென் இந்தியப்பிரதேசங்களிலும் ஸ்ரீ வித்யாரண்யர் காலத்தில் நிலவிவந்த அரசியல் நிலைமையைப்பற்றி ஈண்டு கூறவேண்டிய அவசியம் ஏற்படுகின்றது. இந்துக்கள் முஸ்லீம் ஆட்சியை ஏற்றுக்கொள்ள இசையவில்லை பழைய இந்து அரசர்களின் வீழ்ச்சி அவர்கள் மனதை வருத்தியது. இந்துக் கோவில்களையும், மடங்களையும் முஸ்லீம்கள் இடித்து நாசம் பண்ணுவதை அவர்களால் சகித்துக்கொண்டிருக்க முடியவில்லை. அதோடு இந்துக்கள் மீது முஸ்லீம் ஆட்சி சுமத்திய வரிப்பளுவைத் தாங்கமுடியவில்லை. தன் சேனு வீரரை தக்ஷிணத்தில் வைத்துவிட்டு முகம்மது துக்லாக் டில்லி திரும்பினான். உடனே ஆந்திரக் கடற்கரைப்பகுதி 1331ல் நாயக்கர்கள் தலைமையில் சுதந்திரமடைந்தது. விடுதலை இயக்கம் மேற்கேயும் பரவியது. தெற்கே தொண்டைமண்டலம் விடுதலையடைந்தது.

இந்தக் குழப்பத்தைப்பயன்படுத்த எண்ணி ஹரிஹரன் புக்கன் என்ற இரு சகோதரர்கள் ஒரு சிறு சைன்யத்தைத் திரட்டினர். ஆனால் அவர்கள் மூன்றுவது பள்ளாளன் என்பவனால் முறியடிக்கப்பட்டனர். ஹரிஹரன், புக்கன் என்பவர்களின் ஆரம்பவரலாறை ஈண்டு கூறவேண்டிய அவசியம் இல்லை. பள்ளாளனால் முறிபடிக்கப்பட்ட சகோதரர்கள் மனம் தளர்ச்சியடைந்தனர். இருவரும் ஹம்பியில் விருபாக்ஷர் ஆலயத்துக்குச் சமீபம் வந்து

ஸ்ரீ வித்யாரண்யரை தரிசித்துத்தமது குறைகளைக்கூறினர். ஸ்வாமிகள் அவர்களை பரிபூர்ணமாக ஆசீர்வாதம் செய்து அனுப்பினர். அடுத்துவந்த யுத்தத்தில் அவர்கள் வெற்றி பெற்றனர். ஸ்வாமிகளின் ஆணையையும், ஆலோசனையையும் ஏற்றுக்கொண்டு ஓர் இராஜ்ஜியத்தை உருவாக்கினர். தொடர்ந்து பல வெற்றிகள் அடைந்தவர்களாய் இராஜ்ஜியத்தை விஸ்தரித்தனர். ஸ்வாமிகளின் உத்தரவுப்படியே துங்கபத்ரைக்கு அருகாமையில் ஆனேகுந்திக்கு எதிரே ஓர் நகரம் நிர்மாணம் செய்து அதற்கு ஸ்ரீ வித்யாரண்யர் பெயரால் ஸ்ரீ வித்யா நகரம் எனப்பெயரிட்டனர். அதுவே பிற்காலத்தில் மாறி விஜயநகரம் என அழைக்கப்பட்டது.

இந்த நகரம் நிர்மாணம் செய்யப்பட்டது சக வருஷம் 1258. அதாவது தாது வருஷம் வைசாக மாதம் சுக்ல பக்ஷம் (April 18, 1336) அந்நகரம் ஒன்பது வாயில்கள் உள்ளதாய் ஸ்ரீ சக்கரம்போல் அமைக்கப்பட்டது. காலக்கிரமத்தில் அந்நகரம் விரிவடைந்து மிகப்பெரிய நகரமாகி விட்டது. ஸ்ரீ வித்யாரண்ய சுவாமிகளே ஹரிஹரனுக்குப் பட்டாபிஷேக மஹோத்ஸவமும் நடத்திவைத்தார். அந்நாளிலிருந்து இரு சகோதரர்களுக்கும் வெற்றி மேல் வெற்றியாகக் கிடைத்தது இராஜ்ஜியம் ஸாம்ராஜ்ஜியமாயிற்று. ஸ்ரீ வித்யாரண்ய சுவாமிகளின் திருவருளாலேயே தாம் இப்பெரும்பேற்றை அடைந்தோம் என்று கருதிய ஹரிஹர சக்கிரவர்த்தி தனது ஸம்ராட் பதவியைக்காட்டும் சகல பிருதுகளையும் ஸ்ரீ வித்யாரண்யரின் காலடியில் வைத்து வணங்கினர். அக்காலத்திலிருந்து சிருங்கேரி மடாதிபதிகளுக்கு "கர்னாடக ஸிம்ஹாஸன ப்ரதிஷ்டாபனாசாரியர்" என்ற பட்டம் வருகின்றது.

ஸ்ரீ வித்யாரண்யர் மீண்டும் தமது யாத்திரையைத் துவக்கிக் காசிக்கு விஜயம் செய்தார். சிருங்கேரியில் ஸ்ரீ வித்யாசங்கரர் ஆலயம் பூர்த்தியாகி மஹா கும்பாபிஷேகம் மிகச்சிறப்பாக நடைபெற்றது. அதுசமயம் விஜயநகர அரசர் மாதவ மந்திரி மூலம் அநேகம் காணிக்கைகளை அனுப்பிக்கொடுத்தார். 1346ம் ஆண்டில் விஜயநகர

சக்கிரவர்த்தி தம் மந்திரி பிரதானி பரிவாரங்களுடன் சிருங்கேரிக்கு வந்து ஸ்ரீபாரதீ கிருஷ்ண தீர்த்த ஆசார்யாளை அடிவிழுந்து வணங்கிச் சில நிலமானியங்கள் வழங்கினர்.

புக்கர் காசியிலிருக்கும் ஸ்ரீ வித்யாரண்ய ஸ்வாமிகளுக்கு சிருங்கேரியில் நடந்த வித்யாசங்கர ஆலய மஹா கும்பாபிஷேகத்தை அறிவித்ததுடன், ஸ்ரீ பாரதீ கிருஷ்ண தீர்த்த ஆசார்யாளிடமிருந்து ஓர் ஸ்ரீமுகமும் பெற்று அவரைக் காசியிலிருந்து திரும்பி வரும்படி வெகுவாக வேண்டிக்கொண்டார். அதன்படி ஸ்ரீ வித்யாரண்ய சுவாமிகளும் ஹம்பி வந்து சேர்ந்து புக்கரையும் கூட்டிக்கொண்டு சிருங்கேரி சென்றார். இந்த சம்பவத்தின் ஞாபகார்த்தமாக இரண்டு ஆசார்யாளுக்கும் இறையிலியாக ஓர் அக்கிரகாரத்தை அரசர் தானம் செய்தார். 1380ம் ஆண்டில் சிருங்கேரி பீடத்தில் ஸ்ரீ வித்யாரண்யரை அமர்த்திவிட்டு ஸ்ரீ பாரதீ கிருஷ்ண தீர்த்த ஆசார்யாள் விதேக முக்தியடைந்தார்.

தான் விஜயநகர ஸிம்ஹாஸனம் ஏறியபோது இரண்டாம் ஹரிஹரச் சக்கிரவர்த்தி, ஸ்வாமிகளுக்கு அரச மரியாதைகள் செய்து சத்ரம், சாமரம், கொடி, விதானம், பல்லக்கு தங்க ஸிம்ஹாஸனம், கல்லிழைத்த தங்கப் பாதுகை இவற்றைத் தனது காணிக்கையாக சமர்ப்பித்தார். அவைகளை ஸ்ரீ வித்யாரண்ய ஆசார்யாள் ஆலயத்தில் மூர்த்தி கொண்ட ஸ்ரீ வித்யா சங்கரருக்கு அர்ப்பணம் செய்தார். அதன்பின் விஜயநகர ஸம்ராட் ஹரிஹரருக்கு அத்வைதாநுபூதி நிஷ்டை-யில் பயிற்சி அளித்தார். கோகர்ண க்ஷேத்திரத்திற்குச் சென்று, ஹளதி அரசன் மல்லப்பனுக்குத் தீக்ஷையளித்தார். 1386ம் ஆண்டில் ஸ்ரீ வித்யாரண்ய ஆசார்யாள் விதேக முக்தியடைந்தார். இவர் எங்கு விதேக முக்தியடைந்தார் என்பது இன்றும் மர்மமாகவேயிருக்கின்றது. பப்பாபுரி என்னும் இடத்தில் இவருடைய அதிஷ்டானம் (சமாதி) ஒன்று இருக்கின்றது. சிருங்கேரியில் இருக்கும் ஸ்ரீ வித்யாரண்யர் ஆலயம் அவருடைய ஞாபகச் சின்னமாகவே எழுப்பப்பட்டது

எனலாம். ஹரிஹரர் சிருங்கேரிக்குச் சென்று அவருடைய பெயரால் வித்யாரண்யபுரம் என்ற அக்கிரஹாரத்தை நிறுவினார். அப்பொழுது ஹரிஹரர் செய்த பூதானங்களில் ஒன்று ஸ்ரீ பாரதீ தீர்த்தர் அதிஷ்டானத்தில் எழுப்பப்பட்ட பாரதீ ராமநாதம் என்ற கோவிலுக்கும், ஸ்ரீ வித்யாரண்யரின் ஞாபகச்சின்னமாக எழுப்பப்பட்ட வித்யாவிச்வேச்வரர் ஆலயத்துக்குமாகும்.

ஓர் சர்ச்சை:—சிலர் மாதவாசாரியாரே ஸ்ரீ வித்யாரண்யர் என்று கூறுகின்றனர். அவர்கள் இருவரும் வெவ்வேறு அல்லது ஒருவர்தானா என்பதுவே சர்ச்சை. இதற்கு அக்காலத்தில் உண்டான நூல்களையும் கல்வெட்டுகளையும் ஆராயவேண்டியிருக்கின்றது.

மாதவ மந்திரி என்ற ஒருவருக்கு மதராஸ உடையார் என்ற பெயரும் இருந்ததாகத் தெரிகின்றது. அவர் ஹரிஹரர், புக்கர் என்பவர்களிடம் மந்திரியாக இருந்தார். அவர் ஆங்கிரஸ கோத்திரத்தைச் சேர்ந்த சாவுண்டர் மச்சாம்பா என்ற தம்பதிகளுக்குப் பிறந்தவர். அவர் ஒரு சிறந்த சேனாபதியும் கூட. கோவாவிலிருந்த "துருஷ்கர்" படையைத் தோற்கடித்து பாணவாசி 12,000 முதலிய மாவட்டங்களுக்கு கவர்னராகவும் இருந்தார். வேதத்தில் நல்ல பயிற்சியுடையவர். அவர் "காசி விலாஸ கிரியா சக்தி" என்ற சைவ ஆசாரியரிடம் சிஷ்யராக இருந்தார். இந்த சைவாச்சாரியர் தம்மை "திரயம்பகனை வழிபடும் வித்யா சங்கரர்" என்று சொல்லிக்கொள்கின்றார். சூத ஸம்ஹிதைக்கு 'தாத்பர்யதீபிகை' என்ற பாஷ்யம் செய்தவர் இந்த மாதவர்தான் என்பது அந்த பாஷ்யத்தின் ஈற்றில் (Colophon) கூறப்பட்டிருக்கின்றது. புக்கரால் அனுப்பப்பட்ட அநேக காணிக்கைகளையும் பரிசுகளையும் இவரே சிருங்கேரிக்கு அடிக்கடி சென்று செலுத்தி வந்திருக்கின்றார்.

இன்னொரு மாதவாசாரியரும், அவருடைய சகோதரர் சாயணரும் இன்னொரு சகோதரர் போகநாதரும் மாயணர்—ஸ்ரீமதி என்ற தம்பதிகளுக்குப் பிறந்தவர்கள். பாரத்வாஜ

கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள். போதாயன சூத்திரத்தை அனுஷ்டிப்பவர்கள். சாயணருக்கு இரண்டு குமாரர்கள் இருந்தார்கள் அவர்களில் ஒருவர் மாயணர் என்ற மாதவர். இவர்தான் 'சர்வதர்சன ஸங்க்ரஹம்' என்ற நூலை எழுதியவர். போகநாதர் என்பவர் 'உதாஹரணமாலா' முதலிய சில நூல்கள் எழுதியுள்ளார். இவர் சங்கமன் என்ற அரசனோடு தோழமை கொண்டவர்.

மாயணருடைய குமாரர் மாதவாசாரியர் என்பவர் யாத்ததாகக் கூறப்படும் கிரந்தங்கள் 1. பராசர ஸ்ம்ருதி வியாக்யானம் 2. வ்யவஹார மாதவீயம் 3. காலமாதவீயம் 4 ஜீவன் முக்தி விவேகம் 5. ஜைமினீய ந்யாயமாலா விஸ்தாரம் என்பனவாகும். இந்த கிரந்தங்களில் அவர் தமது பெற்றோர், சகோதரர்கள் தமக்கு ஆசார்யாளாக இருந்த ஸ்ரீ வித்யாதீர்த்தர், ஸ்ரீ பாரதீ தீர்த்தர் இவர்களைப் பற்றி பிரஸ்தாபித்திருக்கின்றார். அவர் தன்னைப்பற்றி 'மீமாம்ஸா சாஸ்திரத்தில் மூன்று காண்டங்களில் தேர்ச்சி பெற்றவர்' என்றும் 'ப்ரதிவஸந்த ஸோமயாஜி' அதாவது ஒவ்வொரு வருஷ வஸந்த காலத்திலும் ஸோமயாகம் செய்பவர் என்றும் கூறிக்கொள்கின்றார்.

சாயணர் எழுதிய முக்கியமான நூல்கள் 1. சுபாஷித ஸுதாநிதி, 2. ப்ராயச்சித்த ஸுதாநிதி, 3. அலங்கார ஸுதாநிதி, 4. தாதுவ்ருத்தி, 5. வேத பாஷ்யம் 6. புருஷார்த்த ஸுதாநிதி, 7. யக்ஞதந்த்ர ஸுதாநிதி என்பனவாகும். இந்த நூல்களின் காலம் முதலாவது புக்கர், இரண்டாவது ஹரிஹரர் ஆண்ட காலமாகிற பதிநான்காம் நூற்றாண்டின் பிற்பகுதியாகும். பதிநான்காம் நூற்றாண்டிலோ அதற்குப் பிற்பட்ட காலங்களிலோ உண்டான எந்த சாஸனங்களிலும் ஸ்ரீ வித்யாரண்யரும், மாதவரும் ஒருவரே என்று குறிக்கப்படவில்லை.

மாதவரே ஸ்ரீ வித்யாரண்யர் என்று கூறும் ஆராய்ச்சி யாளர் யாவரும் ஸ்ரீ பாரதீ தீர்த்தர் விதேக முக்தி அடைவ தற்கு முன்பே 1370, அல்லது 1377ல் சந்நியாஸம் வாங்கிக்

கொண்டார் என்றே கூறுகின்றனர். ஆகவே அவர் பூர்வாச்ரமத்தில் ஓர் கிருஹஸ்தராய் இருந்தார் என்று கூறுகின்றனர். ஸ்ரீ வித்யாரண்யரோ என்றால் ஹரிஹரர், புக்கர் இவர்கள் அவரை முதன் முதல் சந்தித்ததிலிருந்தே அவர் சந்நியாஸியாக இருந்தார் என்பது பிரசித்தம். அவர்களுக்குப் பின் வந்த இரண்டாவது ஹரிஹரர் காலத்திலும் ஸ்ரீ வித்யாரண்யரை சந்நியாசியாகவே அறிந்திருந்தனர். எவரும் அவர் கிருஹஸ்தராய் இருந்தார் என்பதைக் கூறவேயில்லை. விஜயநகர ஸாம்ராஜ்ய சரித்திரத்துக்கு ஆதாரமளிக்கும்படியான நூலாசிரியர்கள் நூனிஸ், ஃபெரிஷ்டா, புக்கானன் போன்றவர்களும், ஹரிஹரரும் புக்கரும் ஓர் சந்நியாஸியின் வருதிக்குக் கட்டுப்பட்டு இருந்தவர்கள் என்றே எழுதியுள்ளார்கள்.

மேலும் மாதவாசாரியாரை மந்திரியென்றும் ராஜகுருவென்றுமேதான் குறிப்பிட்டிருக்கிறார்கள். ஹரிஹரரும், புக்கரும் ஸ்ரீ வித்யாரண்யரை தமது மந்திரி என்றோ ராஜ குருவென்றோ கருதியிருக்கமுடியாது. மந்திரிப்பதவியும், ராஜகுருஸ்தானமும் அரசரிடம் ஊதியம் பெறும் உத்தியோகங்கள். அவ்விரு அரசர்களும் ஸ்ரீ வித்யாரண்யரை மூவருக்கும் முதல்வனை பரம் பொருளின் தேஜஸ்ஸின் அவதாரம் என்று கருதி வழிபட்டார்கள். தமது அரச சின்னங்களை சமர்ப்பித்து அடிபணிந்து வணங்கினார்கள். இறைவனிடத்தில் செலுத்தப்படும் மரியாதையையும், கௌரவபுத்தியையும் ஸ்ரீ வித்யாரண்யரிடம் காட்டினார்கள். அதன் காரணமாகத்தான், ஸ்ரீ வித்யாரண்யர் காசியில் இருந்த சமயம் தானே அவருக்கு நேராக எழுதுவது அபசாரம் என்று கருதி ஸ்ரீ பாரதீதீர்த்த ஆசார்யாளிடம் ஸ்ரீமுகம் வாங்கி அனுப்பிவைத்தார்கள்.

அவ்வரசர்கள் மாதவரை நடத்திய தோரணை வேறு விதமாக இருந்தது. சாயணரே தாம் எழுதிய தைத்திரீய ஸம்ஹிதையின் முகவுரையிலும், ரிக்ஸம்ஹிதையின் முகவுரையிலும் அரசன் மாதவரை பாஷ்யம் செய்யும்படி ஆக்ஞை (अन्वशात्) யிட்டதாயும், அதற்கு மாதவர் தமது

சகோதரர் சாயணரை பாஷ்யம் செய்யும்படி சொல்ல வேண்டும் என்று அரசனுக்கு யோசனை கூறியதாயும் அதன்படியே சாயணரை பாஷ்யம் செய்யும்படி ஏவின தாயும் கூறுகின்றார். இதுபோலவே சாயணர் தமது புருஷார்த்த ஸுதாநிதியிலும் வேறு கிரந்தங்களிலும் எழுதி இருக்கிறார்.

இத்தியாதி காரணங்களால் மாதவரும், ஸ்ரீ வித்யா ரண்யரும் ஒருவரே என்ற கருத்துக்கு ஆதாரமில்லாமல் போகின்றது. உண்மையில் நடந்தது என்னவெனில் மாதவருக்கும், அவர் சகோதரர் சாயணருக்கும், ஸ்ரீ வித்யா ரண்யர் தாம் எழுதி வைத்திருந்த வேத பாஷ்யத்தையும், தாதுவ்ருத்தி முதலிய கிரந்தங்களையும் அவர்கள் மீது கொண்ட பரம கருணையால் கொடுத்து உதவினார். அவர்கள் அவற்றை சில விரிவுரைகளுடன் வெளியிட்டனர். அவையே இக்காலத்தில் "மாதவீயம்" என்றும் "சாய ணீயம்" என்றும் வழங்கி வருகின்றன. இந்த விருத் தாந்தம் "குரு வம்ச காவ்யம்", "சிவதத்வ ரத்னாகரம்", "வித்யாரண்ய காலக்ஞானம்" என்ற கிரந்தங்களில் கூறப் பட்டிருக்கின்றது

அகோபல பண்டிதர் என்பவர் மாதவருடைய மருமான் அவர் தன் மாமனது கிரந்தங்களை யாரிடமிருந்து அவர் பெற்றார் என்பதை அறிந்திருக்க முடியும். அகோபல பண்டிதர் ஸ்ரீ வித்யாரண்யரை "ஜகத்குரு" என்று குறிப் பிடுகின்றார்; "குலகுரு" என்றல்ல. அவரே வேத பாஷ்யமும், தாதுவ்ருத்தியும் ஸ்ரீ வித்யாரண்யர் செய்த தாயும், ஹரிஹரருக்கு ராஜ்யம் ஸ்தாபித்துக் கொடுத்த தாயும் கூறுகின்றார். ஆனால் சாயணர் சொல்லுவதைப் பாருங்கள். தானே வேத பாஷ்யத்தையும், தாதுவ்ருத்தி யையும் எழுதினதாக ஒவ்வொரு காண்டத்தின் முடிவிலும் "இது சாயணரால் எழுதப்பட்டது" என்று கூறிக்கொள் கின்றார். ஆகவே மருமான் சொல்லுவதையும், மாமன் சொல்லுவதையும் குருவம்ச காவ்ய விருத்தாந்தத்தைக் கொண்டே சமன்வயப்படுத்த முடியும். அதாவது வித்யா

ரண்யர் தாம் எழுதியவைகளை மாதவருக்கும் சாயணருக்கும் அளிக்க, அவர்கள் சில விரிவுரைகள் எழுதித் தாமே செய்த தாகக் கூறிக்கொண்டனர் என்பது பொருத்தமான முடிபு.

---

## வேதாந்த அறிவு விரிவடைதல்

### (அ) ஸ்ரீபாரதீ தீர்த்தர், ஸ்ரீவித்யாரண்யர் இவர்களுடைய கிரந்தங்கள்

ஸ்ரீ பாரதீ தீர்த்தர் வரைந்த "அதிகரண ரத்னமாலா" வென்றும் 'வையாஸிக ரத்னமாலா' என்றும் சொல்லப் படுகின்ற கிரந்தம் பிரம்ம சூத்திரத்தின் அதிகரணங்களில் கண்டிருக்கின்ற பூர்வபக்ஷங்களையும், சித்தாந்தங்களையும் விவரிக்கும் காவ்ய நடையில் எழுதப்பட்டது. இதற்கு கிரந்த கர்த்தாவே ஓர் உரையும் எழுதிச்சேர்த்திருக்கிறார். இதை ஸ்ரீ வித்யாரண்யர் செய்ததாக சிலர் அபிப்பிராயப்படு கின்றனர். ஆனால் அப்பய தீக்ஷிதர் ஸ்ரீ பாரதீ தீர்த்தரே எழுதியதாகக் கூறியிருக்கின்றார். இன்னொரு கிரந்தம் 'பஞ்சதசி' என்பது. அதில் பதினைந்து அத்தியாயங்கள் இருப்பதால் அப்பெயர் பெற்றது. இதில் வேதாந்தக் கருத்துக்கள் தெளிவாக விளக்கப்படுகின்றன. இது ஸ்ரீ பாரதீ தீர்த்தரும் ஸ்ரீ வித்யாரண்யரும் சேர்ந்து செய் திருப்பதாகக் கருதப்படுகின்றது. 'ப்ருஹதாரண்யக வார்த்திக ஸாரம்' என்ற நூல் ஸ்ரீசுரேச்வராசாரியாளுடைய கிரந்தத்தின் சுருக்கம். ஐதரேய உபநிஷத், தைத்திரீய உபநிஷத் இரண்டுக்கும், ஸ்ரீ சங்கரருடைய 'அபரோக்ஷானு பூதிக்கும்' 'தீபிகை'கள் என்ற உரை நூல்கள் ஸ்ரீவித்யா ரண்யரால் எழுதப்பட்டதாகக் கருதப்படுகின்றன. இவை போன்றே பன்னிரண்டு உபநிஷத்துக்களின் கருத்துக்களைச் சுருக்கி செய்யுள் வடிவில் 'அனுபூதி ப்ரகாசம்' என்ற நூலையும் செய்திருக்கிறார். 'த்ருக் த்ருச்ய விவேகம்' என்ற நூல் ஸ்ரீவித்யாரண்யரால் செய்யப்பட்ட தாகச் சிலரும், அவரும் ஸ்ரீ பாரதீ தீர்த்தரும் சேர்ந்து செய்ததாகச் சிலரும் அநுமானிக்கின்றனர்.

(ஆ) ஸ்ரீசங்கரானந்தரின் கிரந்தங்கள்:— இவர் இயற்றிய நூல்கள் 1. பிரம்மசூத்திரத்துக்கு 'தீபிகை' என்ற உரையும் 2 கீதா தாத்பர்ய போதினீ என்ற பகவத் கீதா வியாக்கியானமும் 3. இருபத்தேழு உபநிஷதங்களுக்கு விருத்தி உரையும் 4. ஆத்ம புராணம் அல்லது உபநிஷதார்த்தம் என்பனவுமாகும். கடைசியில் கொடுக்கப்பட்ட "ஆத்மபுராணம்" என்ற கிரந்தம் [1] அநுஷ்டுப் விருத்தத்தில் உபநிஷத ஸாரத்தைச் செய்யுள் வடிவில் அமைக்கப்பட்டது.

இவர் ஸ்ரீ வித்யாதீர்த்தரின் சிஷ்யர். அவரிடம் [2] சாஸ்திர பாடம் பயின்றவர். அவரே இவருடைய வித்யா குரு. ஆனந்தாத்மன் என்றும் ஆனந்தாத்ம சரஸ்வதி என்றும் சொல்லப்படுகின்றவரிடம் சந்நியாஸம் பெற்றுக் கொண்டார். சங்கரானந்தர் ஸ்ரீ வித்யாரண்யருக்கு வித்யா

---

1. அனுஷ்டுப் என்பது செய்யுளின் ஒவ்வொரு அடியிலும் எட்டு அக்ஷரங்கள் உடையதாய் அமைந்த வடமொழிச் செய்யுள் வடிவங்களில் ஒன்று.

2. சாஸ்திர பாடம் கற்பிப்பவர் வித்யாகுரு எனப்படுவர். ஆனால் அவரே தமது சிஷ்யர்களுக்கு சந்நியாஸம் கொடுக்க வேண்டும் என்ற நியதியில்லை. உதாரணமாக சிருங்கேரியில் அருளாட்சி நடாத்தும் ஜகத் குருக்கள் அநேக சிஷ்யர்களுக்கு வித்யாகுருவாக விளங்குகிறார்கள். ஆனால் ஒரு சிலருக்கே ஸந்யாஸம் வழங்குகிறார்கள். அதிலும் இக்காலத்தில் தனக்குப் பின் பீடாதிபதியாக வருபவர் ஒருவருக்கே ஸந்யாஸம் கொடுக்கிறார்கள். சிஷ்யனுக்கு மந்த்ரோபதேசம் செய்பவர் தீக்ஷா குரு எனப்படுவார். ஆசார்யர், குரு என்ற சொற்கள் ஒரே பொருளை உடையனவாயினும் பழக்கத்தில் ஆசார்யர் என்பவர் தமது நடத்தையாலும சீலத்தாலும் பண்பாடுகளாலும் சிஷ்யனுக்கு வழிகாட்டியாக இருப்பவர் என்றும் குரு என்பவர் சிஷ்யனுக்கு ஞானோபதேசம் செய்கின்றவர் என்றும் சொல்லப்படுகின்றனர். "கு" என்றால் அவித்தை அல்லது அஞ்ஞான இருள் "ரு" என்றால் அதைப் போக்குகின்றவர் என்பது குரு என்ற பதத்தின் பொருள்.

குருவுமாவார். சோழ தேசத்திலுள்ள திருவிடைமருதூர் அல்லது மத்தியார்ஜுனம் என்ற க்ஷேத்ரத்தில் பிறந்தவர்.

(இ) வேறு நூலாசிரியர்கள் : முந்தின அத்தியாயத்தில் அமலானந்தர் என்பவரை பிரஸ்தாபித்தது ஞாபகம் இருக்கலாம் (4ம் அத்தியாயம் 5வது பட்டத்தின் கீழ்ப் பார்க்க) அவர் பாமதி என்ற கிரந்தத்துக்கு "கல்பதரு" என்ற வியாக்கியானமும், 'சாஸ்திர தர்ப்பணம்' என்ற நூலும் செய்திருக்கிறார். அவர் சுகப் பிரகாசரைத் தமது வித்யாகுரு என்று சொல்லுகிறார். சுகப்ரகாசர் ஸ்ரீ ஞானோத்தம ஆசார்யாளுடைய சிஷ்ய பரம்பரையைச் சேர்ந்தவர். 'சித்சுகி' என்ற கிரந்தத்துக்கு வியாக்கியானம் 'நயனப்ரஸாதனி' என்பது. அதை இயற்றியவர் பிரத்யக்ப்ரகாசர் என்பவரின் சிஷ்யரான ப்ரத்யக்ரூப பகவான் என்பவர். அவரும் ஸ்ரீ சிருங்கேரி சிஷ்ய பரம்பரையைச் சேர்ந்தவரே. அக்காலத்தில் புகழ்பெற்றிருந்த மற்ற ஆசிரியர்கள் 1. கோகர்ணத்தைச்சேர்ந்த ஆனந்த பூர்ண வித்யாசாகரர். 2. அகண்டானந்த முனி. 3. ஆனந்தகிரி என்பவர்கள். இவர்கள் சிருங்கேரி சிஷ்ய பரம்பரையைச் சேர்ந்தவர்களா என்று நிர்ணயிக்கப் போதிய ஆதாரங்கள் கிடைக்கவில்லை. கொண்ட வீடு மன்னன் பெத்த கோமடி வேமனின் அரச சபையில் பிரசித்திபெற்றிருந்த வாமனபட்டபாணர் வித்யாரண்யரின் சீடர்.

(ஈ) சைவாசாரியர்கள் :

(I) ஸ்ரீகண்டசிவாச்சாரியர் : இவர் மாதவாசாரியருக்கும், அவருடைய சகோதரர்களுக்கும், சங்கமன் என்ற அரசனுக்கும் குருவாக இருந்தவர். அவர் பரமார்த்த தீர்த்தர் என்பவரின் சிஷ்யர். இந்த பரமார்த்த தீர்த்தரைச் சிலர் வித்யாதீர்த்தரே என்பர். அது தவறு.

(II) கிரியாசக்தி : இவர் காஷ்மீர சைவ சித்தாந்தக் கொள்கையைக் கடைப்பிடித்தவர். வேதோபநிஷதங்களில் மிகத் தேர்ச்சிபெற்றவர், தமது சிஷ்யர்களில் ஒருவரான

மாதவ மக்திரி என்பவரின் வேண்டுகோளுக்கிணங்கி "சைவாகம ஸாரசங்க்ரகம்" என்ற நூலை யாத்தனர். இது வேதம், புராணம், ஸம்ஹிதைகளின் சாரங்களைத் தன்னுள் அடக்கியது புக்கர் (i) ஹரிஹரர் (ii) இவர்களுக்கு ராஜ குருவாக இருந்தவர். இரண்டாவது ஹரிஹரர் தன்னை "திரயம்பக பகவானுடையவும், கிரியா சக்தி குருவினுடையவும், வித்யாரண்யருடையவும், பாத கமலங்களில் பெருகும் தேனை நுகரும் தேனீ" என்று கூறிக் கொள்கின்ருர்.

வித்யாரண்ய காலக்ஞானம் என்ற நூலில் கிரியா சக்தி என்பவர் ஸ்ரீ வித்யாரண்யரின் சிஷ்யர் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. கிரியா சக்தி தமது பரமகுருவான வித்யா சங்கரரின் பெயரையே சூட்டிக்கொண்டார். (பரமகுரு என்ருல் தன் குருவுக்கும் குரு என்று பொருள்.) அவர் 1388ம் ஆண்டில் இறந்தார். அவர் ஞாபகார்த்தமாக முதலாவது ஹரிஹரரின் புதல்வர் இம்மடிபுக்கராயர் என்பவர் 1389ல் ஓர் கிராமத்தை வித்யாசங்கரபுரம் எனப் பெயரிட்டு அதை அன்னாரின் சமாதியில் பிரதிஷ்டை செய்யப்பட்ட லிங்கத்துக்கு தானம் செய்திருக்கிருர். ஸ்ரீ A. வேங்கிடசுப்பய்யா என்பவர் கிரியா சக்தியே வித்யாரண்யர் என்று முடிவு கட்டுகிருர். விஜயநகர சாம்ராஜ்ய சரித்திர ஆசிரியர் ஸ்ரீ S. V. வேங்கடேசன் என்பவர் வித்யாதீர்த்தர், பாரதீதீர்த்தர், ஸ்ரீ கண்டர், வித்யாசங்கரர் என்ற பெயர்கள் யாவும் ஒருவரையே குறிக்கின்றன என்று கூட எழுதியிருக்கிருர். இத்தகைய கூற்றுகளின் அபத்தத்தைக் குறித்து யாம் எதுவும் சொல்லத் தேவையில்லை. கிரியா சக்தி என்பவர் ஓர் சிறந்த சைவ ஆசாரியர். வேதோபநிஷதங்களில் ஆழ்ந்த தேர்ச்சி பெற்றவர். அவைகளில் விதிக்கப்பட்ட வழிபாட்டு முறைகளை அனுஷ்டித்தவர். வைதிக வழிபாட்டில் இவருக்கு வழிகாட்டியாக இருந்தவர் ஸ்ரீ வித்யாரண்யரே.

(உ) ஓர் சுவாரஸ்யமான ஆகம சாஸ்திரம் :—பீஹார் மாகாணத்தைச் சேர்ந்த சீதாமடி (Sitamarhi) என்ற

இடத்தில் ராஜேந்திரலால் மித்ரா என்பவர் ஓர் அபூர்வமான கையெழுத்து நூல் ஒன்றைக் கண்டுபிடித்தார். அதன் பெயர் 'கத்பவல்லரி'' என்பது. அது ஓர் ஸ்ரீ வித்யாபரமான கிரந்தம். அதில் தேவீ உபாஸனைக்கு வேண்டிய சாதனைகள், நியாஸங்கள், தியானம், ஜபம் முதலிய விபரங்கள் கூறப்பட்டிருக்கின்றன. அதோடு ஓர் குரு பரம்பரை வரிசைப் பட்டியலும் இருக்கின்றது. சிவபெருமானில் ஆரம்பித்து வரிசையாக விஷ்ணு, பிரம்மா, வஸிஷ்டர், சக்தி, பராசரர், வியாஸர், சுகர், கௌடபாதர், கோவிந்தர், சங்கரர், விச்வரூபர், போதகனர், ஞானகனர், ஞானோத்தமசிவர், ஞானகிரி, ஸிம்ஹகிரி, ஈச்வர தீர்த்தர் ந்ருஸிம்ஹ தீர்த்தர், வித்யாதீர்த்த சிவர், பாரதீ தீர்த்தர், வித்யாரண்யர் என்ற வரிசையில் குரு பரம்பரை கூறப்பட்டிருக்கின்றது. இந்த வரிசை சிருங்கேரி ஸ்ரீ சாரதாபீட கிரமத்துக்கு ஒத்து வருகின்றது.

ஸ்ரீ வித்யாரண்யருக்குப் பின் ஸ்ரீ வித்யா தீக்ஷைபெற்ற ஸ்ரீ மலயானந்த தேவ தீர்த்த சரஸ்வதி என்றொருவர் கூறப்படுகின்றார். அவருக்குப்பின்னும் சிஷ்ய பரம்பரை சொல்லி ஆனந்த சித்ப்ரதிபர் என்பவரோடு முடிவடைகின்றது. இவர் ஸ்ரீ நிஜாத்ம ப்ரகாசானந்தநாத மல்லிகார்ஜுன யோகீந்திரர் என்பவரின் குரு. இவ்வாறு சிருங்கேரி மடத்து ஸ்ரீ வித்யா சிஷ்ய பரம்பரை கூறப்பட்டிருக்கின்றது. சிருங்கேரியே யந்த்ரம், மந்த்ரம், யோகம் முதலிய சாதனங்களுக்குக் கருவூலம். ஸ்ரீ கௌடபாதராலும், ஸ்ரீ சங்கராராலும் ஸ்ரீவித்யாரண்யராலும் பிரகடனம் செய்யப்பட்ட ஸ்ரீவித்யை உபநிஷதங்களில் கூறப்படும் ப்ரஹ்மவித்யைக்கு வேறல்ல என்ற உண்மையை இத்தகைய நூல்கள் தெளிவாகக் காட்டுகின்றன.

**பண்டிதர்கள் பெற்ற மான்னியங்கள் :—** ஸ்ரீ பாரதீ தீர்த்தர் நூற்றிருபது பண்டிதர்களுக்கு விருத்திகள் என்று சொல்லப்பட்ட சிறு நிலமானியங்கள் அளித்தார். இந்த வரிசையில் 1. நாராயண வாஜபேயயாஜி 2. பண்டரி அல்லது பாண்டுரங்க தீக்ஷிதர் 3. வேத பாஷ்யத்தை

பிரகடனம் செய்த நரஹரி ஸோமயாஜி என்பவர்கள் இடம் பெறுகின்றனர். இவர்களில் முதலாமவருக்கு "மந்த்ர ஸித்தி" என்ற பட்டமும், ஏனைய இருவருக்கும் "பெத்த வித்யா வல்லபர்" என்ற பட்டமும் அளிக்கப்பட்டது. இப்பொழுதும் அவர்களுடைய வாரிசுகள் சிருங்கேரியில் சில ப்ரத்யேக மரியாதைகள் பெற்று வருகின்றனர். இரண்டாவது ஹரிஹரரால் 1386ல் வழங்கப்பட்ட ஐந்நூறு விருத்திமானியங்களில் பெரும்பான்மை பண்டிதர்களுக்குக் கொடுக்கப்பட்டதே. இந்த விருத்தி மானியங்கள் வித்யாரண்யபுரம் சாஸனத்தைச் சேர்ந்தவை. மத்திய பிரதேசத்தில் ஆபஸ்தம்ப சூத்ர கௌசிக கோத்திரத்தைச் சேர்ந்த மாதவேந்திரர் என்பவருக்கு 1397ல் இரண்டாவது ஹரிஹரரால் பானுவல்லி சாஸனம் என்று கூறப்படும் சாஸனப்படி பூதானம் வழங்கப்பட்டிருக்கின்றது. மாதவேந்திரர் என்பார் வேதாந்த சாஸ்திரங்களில் சிறந்த ஆராய்ச்சியும், பாண்டித்யமும் உடையவர். ஸ்ரீ வித்யாரண்யருடைய இரண்டு சிஷ்யர்களுக்கு பேலுரூளா என்ற கிராமத்தை தானம் செய்திருக்கிறார்,

மடங்கள் :— வேதாந்த சாஸ்திர பாடம் கற்கும் சந்நியாஸிகளுக்கு சிருங்கேரியில் சில விசேஷ வசதிகள் செய்யப்பட்டிருக்கின்றன. ஸ்ரீ வித்யாரண்யரின் தூண்டுதலின் பேரில் விஜயநகர ஸம்ராட்டுகள் ஸ்ரீ வித்யாரண்யராலும், ஸ்ரீ பாரதீ தீர்த்தராலும் ஸ்தாபிக்கப்பட்ட மடங்களுக்கு பூதானங்கள் செய்திருக்கிறார்கள். இவைகள் தென்னிந்திய பிரதேசங்களில் உள்ளவை. அவற்றில் சில மடங்கள் சிருங்கேரியின் கிளைமடங்களாக வளர்ந்தோங்கிப் பிரபலமடைந்திருக்கின்றன. இப்பொழுது 'பண்டிகாடே' என்றழைக்கப்படும் சகடபுரம் முனியூர் மடத்து சத்திய தீர்த்தருக்கு முதலாவது விருபாக்ஷன் என்ற சிக்கராயர் மானியம் விட்டிருக்கிறார். சகடபுர மடத்தின் ஆரம்பம் இதுவே.

சிருங்கேரியிலிருந்து ஆறுகல் தொலைவிலுள்ள ஹரிஹரபுரம் என்ற அக்கிரஹாரத்தில் இரண்டாவது ஹரிஹரர் ஓர்

மடம் நிறுவினர். அம்மடத்தின் முதல் ஆசாரியர் ஸ்ரீராம சந்திர சரஸ்வதி என்பவர். பதினான்காம் நூற்றுண்டில் சிருங்கேரி ஜகத்குருவின் ஆசியாலும் விஜயநகர ஸம்ராட்டு களின் முயற்சியாலும் தீர்த்தஹள்ளி தாலூகாவில் தீர்த்த முத்தூர் மடம் உருவாயிற்று.

காஞ்சீபுரம் விஷ்ணு ஆலயத்தில் இருந்த பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய வேதேந்திர சாகர ஸ்ரீ பாதர் என்பவருக்கு இலுப்பைப்புட்டு என்ற கிராமத்தை ஜாரி செய்ததாக 1378ம் ஆண்டுள்ள ஓர் தஸ்தாவேசு இருக்கிறது.

ஆலயங்கள்:—ஒரு வ்ருத்தி மானியம் ஸ்ரீ ஜனர்த்தனர் ஆலயத்துக்கு ஒதுக்கப்பட்டது. இக்காலத்தில் கட்டப்பட்ட ஆலயங்களுக்குள் மிக அழகு வாய்ந்தது ஸ்ரீ வித்யாசங்கர ஆலயம் தான். ஆதியில் ஸ்ரீ சங்கரரால் பிரதிஷ்டை செய்யப் பட்ட சாரதா தேவியின் சந்தனக்கட்டையால் ஆன திரு வுருவத்துக்குப்பதில் இப்போது இருக்கும் தங்க விக்கிரகம் ஸ்ரீ வித்யாரண்யரால் ஸ்தாபிக்கப்பட்டது. இந்தத் திரு வுருவம் அங்கிருந்த ஓர் பாறையில் வரையப்பட்ட ஸ்ரீ சக்கரத்தின் மேல் பிரதிஷ்டை செய்யப்பட்டு அங்கு ஓர் ஆலயமும் கட்டப்பட்டது. பின்னல் இந்த ஆலயம் விரிவாக்கப்பட்டது. சிருங்கேரி ஆசாரியர்களின் சமாதி களின் மேல் கட்டப்பட்ட அதிஷ்டானங்களுக்கெல்லாம் ஆலயங்கள் என்று கூறுவது சம்பிரதாயம். அவ்வாறு ஸ்ரீ பாரதீ தீர்த்த ஆசார்யாளின் சமாதி மேல் எழுப்பப் பட்டது பாரதீ ராமநாதர் ஆலயம். ஸ்ரீ வித்யாரண்ய ஸ்வாமிகளின் ஞாபகார்த்தமாகக் கட்டப்பட்டது வித்யேச் வரர் ஆலயம். துங்கா நதியின் மேற்குக் கரையில் சிருங்கேரி யிலிருந்து சில பர்லாங்கு தூரத்தில் [1] "பச்சிமவாஹினி" என்றழைக்கப்பட்ட இடத்தில் கோபிநாதனை வழிபடு வதற்காக ஏற்பட்ட ஆலயத்துக்கு ஸ்ரீ வித்யாரண்யர் சில தானங்கள் செய்திருக்கிருர். அதோடு பல இடங்களில்

1. பச்சிமவாஹினி என்ற பதத்துக்கு மேற்கு நோக்கி ஓடுகின்றது என்பது பொருள். அந்த இடத்தில் துங்காநதி உளிந்து மேற்கு நோக்கி பிரவஹிப்பதால் அப்பெயர் பெற்றது.

லிங்கங்களையும், ஸ்ரீ சக்கரங்களையும் பிரதிஷ்டை செய்திருக்கிறார்.

ஓர் சம்ஸ்தானம் உருவாகின்றது: முதன் முதலாக 1346ம் ஆண்டில் முதலாவது ஹரிஹரராலும் அவர் சகோதரர்கள் சுற்றத்தார்களாலும் கெலநாடுப்பிரதேசத்தில் ஒன்பது கிராமங்கள் மானியமாக அளிக்கப்பட்டன. இந்த சிருங்கபுரம் சிலாசாஸனத்தில், இந்த தானமானது ஸ்ரீ பாரதீகிருஷ்ண ஸ்ரீ பாதங்களுவாருவின் தபஸ்ஸுக்காகவும், அங்கு தங்கும் ஸந்யாஸிகளுடையவும், சிஷ்யர்களுடையவும், மடத்து ஊழியர்களுடையவும் ஸம்ரக்ஷணத்துக்காகவும் விடப்பட்டதாகக் கண்டிருக்கின்றது. இரண்டாவது சாஸனம் 1356ம் ஆண்டில் உண்டானது. இது கணபதி வாகீச்வரர் ஆலயத்துக்கு வடபுரம் ஓர் பாறையில் செதுக்கப்பட்டிருக்கின்றது. இந்த சிலா சாஸனத்துக்கு மேல் பக்கம் வேதங்களை வெளியிட்ட பிரம்மாவினுடையவும், அவற்றின் கருத்துக்களை சூத்திரங்களாகச்செய்த வியாஸருடையவும் திருவுருவங்கள் செதுக்கப்பட்டிருக்கின்றன. இக்கல்வெட்டு ஸ்ரீ வித்யாதீர்த்தருக்கு வணக்கம் கூறி ஆரம்பிக்கின்றது. இதுவும் ஓர் பூதானமே. இது புக்கர் சிருங்கேரி சென்று [1] ஸ்ரீ வித்யாசங்கரர் ஆலயத்தில்

1. ஸ்ரீ வித்யாசங்கர ஆசார்யாள் பாதாள அரையில் சென்று மறைந்த பின்பும் அவருடைய அருளொளி இன்றும் அங்கு வியாபகமாக இருப்பதிலிருந்தும், சிருங்கேரி மடத்து முத்திரையில் அவருடைய திருநாமம் பொறிக்கப்பட்டிருப்பதிலிருந்தும், ஸ்ரீ R. நரஸிம்மாச்சார், ஸ்ரீ M. H. கிருஷ்ண போன்ற ஆசிரியர்கள் ஓர் தவறுதலான அபிப்பிராயத்துக்கு வந்திருக்கின்றனர். அதாவது புக்கர் சிருங்கேரி சென்றபோது ஸ்ரீ வித்யாசங்கரர் ஜீவிதமாயிருந்தார் என்றும் அவரையே புக்கர் நேரில் தரிசித்தார் என்றும் எழுதியுள்ளார்கள். ஆனால் பழைய தஸ்தாவேஜுகளின்படி புக்கர் 1356ல் சிருங்கேரி சென்றபோது ஸ்ரீ வித்யாதீர்த்தரின் ஸ்ரீ பாதங்களை தரிசித்தார் என்றுதான் இருக்கிறது, அதற்கு ஸ்ரீ வித்யாசங்கர ஆலயத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கும் சிவலிங்கத்தை தரிசனம் பண்ணினர் என்றுதான் பொருள் கொள்ளவேண்டும்.

தரிசனம் செய்த ஞாபகார்த்தமாக அளிக்கப்பட்டது என்று கண்டிருக்கின்றது.

மேலே சொன்ன இரண்டு சாஸனங்களாலும் கிடைத்த நிலங்களில் அறுநூறு வராகன் வருமானம் வரும்படியான நிலங்களைப் பிரித்து அதையும் ஒவ்வொன்று ஐந்து வராகன்கள் கொடுக்கக்கூடியதாய் நூற்றி இருபது வராகன்கள் வரக்கூடிய வ்ருத்திமானியங்களாக கல்வியில் தேர்ந்த பிராம்மணர்களுக்கு ஒதுக்கிவிட்டு மீதியை ஸ்ரீ வித்யாசங்கரர் ஆலயம், இன்னும் மற்ற ஆலயங்களின் வழிபாட்டுக்காகவும், கிருஹஸ்த சந்நியாஸி சிஷ்யர்கள், சுரோத்திரியர், ஸோமயாஜிகள், மடத்து ஊழியர்கள் இவர்களின் சம்ரக்ஷணைக்காகவும் செலவிட ஸ்ரீ பாரதீதீர்த்த ஆசார்யாள் ஏற்பாடு செய்தார்கள்.

இதற்குப் பின்னுல் புக்கர் இருநூற்று இருபத்தி இரண்டரை வராகன் வருமானம் தரக்கூடிய நிலத்தை "கிதுண்டநாடு" என்ற பிரதேசத்தில் ஜாரி செய்திருக்கிறுர். அதோடு இரண்டாவது ஹரிஹரர் என்ற சிக்கராயர் கிதுண்ட நாட்டிலும் கொடநாட்டிலும் நிலங்களை தானம் செய்தார்.

1380 ஆண்டில் இரண்டாவது ஹரிஹரர் முந்தின தானங்களையெல்லாம் ஒன்று சேர்த்து ஸ்திரப்படுத்தி, வேறு தானங்களும் ஸ்ரீ வித்யாரண்யருக்கு அளித்திருக்கிறுர். ஸ்ரீ வித்யாரண்யர் விதேக முக்தி யடைந்தபின், 1387ம் ஆண்டில், இரண்டாவது ஹரிஹரர், ஐந்துவராகன் மதிப்புள்ள நூறு வ்ருத்தி மானியங்களை தானம் செய்து அவற்றில் நான்கு வ்ருத்திகள் ஆலய பரிபாலனத்துக்கும், ஏனையவை தகுந்த பண்டிதர்களுக்கும் பயன்படும்படி ஏற்பாடு செய்திருக்கிறுர். இரண்டாவது ஹரிஹரர் மறு

---

ஏனெனில் கல்வெட்டில் "வித்யாசங்கரர் ஆலய வழிபாட்டுக்காக" என்று வியக்தமாய் எழுதப்பட்டிருக்கின்றது. அவ்வாலயம் அவர் மறைந்தபின் கட்டப்பட்டது என்பது வெளிப்படை.

படியும் 1389-90ல் ஸ்ரீ சிருங்கேரிக்கு விஜயம் செய்தபோது முப்பது விருத்தி மானிபங்கள் அளித்திருக்கிருர். இவைகள் எல்லாம் சேர்ந்து மொத்தம் 3003 ஆகும். இந்த தான சாஸனங்களால் பயனடைந்த ஆலயங்கள், 1. ஸ்ரீ வித்யாசங்கரர் ஆலயம், 2. ஸ்ரீ ஜஞர்த்தனர் ஆலயம், 3 ஸ்ரீ பாரதீ ராமநாதர் ஆலயம், 4. ஸ்ரீ வித்யா விச்வேச்வரர் ஆலயம் (இவை நான்கும் சிருங்கேரியிலேயே இருப்பவை) அவற்ருேடு 5. ஸிம்ஹகிரியில் உள்ள சதுர் மூர்த்தி வித்யேச்வரர் ஆலயமும்.

1346ம் ஆண்டில் முதலாவது ஹரிஹரர் செய்த சிலா சாஸனத்துக்குக்கீழ் ஓர் கல்வெட்டு இருக்கிறது. அதில் மடத்து ஊழியர்களின் பராமரிப்புக்காக சந்தலிகே நாட்டைச்சேர்ந்த ஹொஸஹூர் என்ற கிராமத்தை "பாண்டியசக்கிரவர்த்தினி [1] ஸ்ரீ கிக்காயித்தாயி" என்பவர் தானம் செய்ததாகக்கண்டுள்ளது.

ஸ்ரீ சிருங்கேரிக்கு வெளியேயுள்ள இரண்டு கல்வெட்டு களில் ஒன்று 1375ம் ஆண்டில் முதலாவது புக்கராயர், ஸ்ரீ வித்யாதீர்த்தர், ஸ்ரீ வித்யாரண்யர் ஆலயங்களுக்கு மானியம் விட்டதைக் கூறுகிறது. மற்ருென்று 1384ம் ஆண்டில் இரண்டாம் ஹரிஹரர் ஸ்ரீ வித்யாரண்யர் ஆலயத்துக்கு மானியம் விட்டதைப்பற்றியது.

ஸ்ரீ பாரதீ கிருஷ்ணதீர்த்தர், ஸ்ரீ வித்யாரண்யர் இவ் விருவர் ஆட்சி பீடத்தில் இருந்தபோதுதான், அதற்கு முன்பு சிறு சிறு ஆச்ரமங்களாக இருந்த சிருங்கேரி ஓர் மஹத்தான சம்ஸ்தானமாயிற்று. இதுவரை வியாக்யான

---

1. இக்காயித்தாயி என்பது ஓர் பெண். அவள் துளுவ தேசத்தில் அளுபவம்சபட்டப் பெயருடன் மிகப் புகழ் பெற்றிருந்தவள். ஹோசல அரசர் மூன்ருவது பள்ளாளன் என்பவரை அரசியல் காரணத்துக்காக மணம் செய்து கொண்டாள். பின்பு இவள் முதலாம் ஹரிஹரருக்குக் கப்பம் கட்டும் சிற்றரசியாளுள். 1346ம் ஆண்டில் ஹரிஹரருடைய மஹத்தான வெற்றியைக் கொண்டாட ஸ்ரீ சிருங்கேரியில் நடந்த வெற்றிவிழாவில் கலந்துகொண்டாள்.

பீடமாகத் திகழ்ந்த சிருங்கேரிமடம், இப்பொழுது தனது நிலப்பரப்பில் வசித்து வந்த மக்களை ஆட்சி செய்யும் பொருப்பையும் ஏற்றுக்கொண்டது. ஆரம்பகாலத்தி லிருந்தே, தான சாஸனங்கள் மூலம் கிடைத்த நிலங்களை ஆசார்யர்கள் தமது சொந்த சொத்தாகக் கருதாமல் மக்களின் நன்மைக்கு வகுக்கப்பட்ட ஓர் "டிரஸ்டாகவே" கருதினர். இந்த பூதானங்களால் நன்மையடைந்தவர்கள், யதிகளும், பண்டிதர்களும், வித்தியார்த்திகளும், ஆலயங்களும், கல்விஸ்தாபனங்களுமேயாகும். விஜய நகர ஸம்ராட்டுகள் ஆசார்யர்களின் ஆசியாலும், ஆலோசனையினாலும் தங்களுக்குக் கிடைத்த மஹத்தான வெற்றிகளுக்கு பிரதி பிரயோஜனமாக அளித்ததாகக் கருத இடமில்லை. அவ்வரசர்கள் ஆசார்யர்கள்மீது கொண்டிருந்த ஆழ்ந்த பக்தி சிரத்தையைக் காட்டவே இந்த தானங்களைச் செய்தார்கள். அவைகள் அவ்வரசர்களின் பக்திக் காணிக்கை என்னலாம். இத்தகைய பூதானங்களே ஸ்ரீ சிருங்கேரி மடத்தை ஓர் பெரிய சம்ஸ்தானமாக்கியது.

ஸ்ரீ வித்யாசங்கரர், ஸ்ரீ பாரதீ கிருஷ்ண தீர்த்தர் ஸ்ரீ வித்யாரண்யர் இம் மூவர்காலத்தில் சிருங்கேரி அடைந்த மஹோந்நத தசையை வேறு எந்த மதஸ்தாபனங்களும் அடையவில்லை. பின்னால் அறுநூறு ஆண்டுகாலத்தில் சிருங்கேரி சாரதாபீடம் அடைந்தமேன்மை, அக்காலத்தில் அருளாட்சி செய்த ஆசார்யார்களுடைய பெரும் கியாதியையும், தேஜஸ்ஸையும் பரிமளிக்கச்செய்தது கீழே சுருக்கமாக மொழிபெயர்க்கப்பட்டிருக்கும் மூன்று சுலோகங்கள் அக்காலத்திய ஆசார்யர்களின் ஒப்பற்ற மகிமையைக் காட்டுகின்றன.

1. புக்கர் என்ற அன்னபக்ஷி வித்யாதீர்த்தத்தில் முளைத்த பாரதீ தீர்த்தர் என்ற தாமரையைச் சுற்றி விளையாடுகின்றது. அம்மலர் அத்வைத ஞானத்தால் உண்டாகும் ஆத்மானந்த அனுபூதி என்ற நறுமணத்தையுடையது. அது ஸ்ரீ வித்யாரண்யர் என்ற சூரியனின் கிரணங்களால் மலர்ந்தது.

2. ஸ்ரீ வித்யாரண்யருடைய கருணு கடாக்ஷம் எத்தகையது எனில் பச்சைக் கர்ப்பூர தூளி வர்ஷிப்பது போலும், வெள்ளை அல்லி மலரால் தொடுக்கப்பட்ட மாலை போன்றும், சந்திரனின் நிலவு போன்றும், சந்தனக்குழம்பு போன்றும், பாற்கடலின் அலைகள் போன்றும், தயை என்னும் அமிர்தம் வர்ஷிப்பது போன்றும் இருக்கின்றது. அந்த கருணுகடாக்ஷம் ஆனந்தத்தை அருளட்டும்.

3. அவரை பிரம்மாவென்று சொல்லலாமா? ஆனால் நான்கு முகங்கள் இல்லையே! விஷ்ணுவென்று கூறலாமா? சதுர்புஜங்கள் இல்லையே! சிவனென்று நாம் கருதலாமா? ஆனல் முக்கண் இல்லையே! ஆகையால் ஸ்ரீ வித்யாரண்யர் மூவருக்கும் முதன்மையான பரஞ்ஜோதிஸ்ஸேயாகும்.

ஓர் புது சகாப்தம்: வடக்கே முஸ்லீம் தாக்குதலால் சீர்கெட்டு சிதைந்துபோன சனாதன வைதிக தர்மத்துக்குத் தென் பிரதேசத்தில் ஓர் உறைவிடம் கிடைத்தது. அதற்கு சகல துறைகளிலும் பாதுகாப்புக் கிடைத்தது. அரசியல் துறையில் ஸ்ரீ வித்யாரண்யருடைய அருளால் ஓர் ஹிந்து சாம்ராஜ்யம் உருவானது சமூகத் துறையிலும் சமயத் துறையிலும் ஸ்ரீரங்கம், மதுரை உள்ளிட்ட பல ஆலயங்களில், முஸ்லீம் படையெடுப்பால் கைவிடப்பட்ட பூஜா வழிபாடுகள் மறுபடியும் ஆரம்பிக்கப்பட்டன. ஸ்ரீ வித்யாரண்யருடைய ஆலோசனையை ஏற்று பல கோயில்களுக்கு மானியங்கள் விடப்பட்டதாக மைசூர் கல்வெட்டுகளிலிருந்து தெரிகிறது. நூற்றுக்கணக்கான கோயில்களைப் புதுப்பித்தும், ஜீர்ணோத்தாரணம் செய்தும், விரிவுபடுத்தியும், விஜயநகர மன்னர்களும் அவர்களுடைய சிற்றரசர்களும் அரும்பணியாற்றினர். சமூக சமயப் பண்பாடுகள் மக்களுக்கு விரிவாக விளக்கப்பட்டன. அவற்றின் அவசியத்தை அத்வைத மடங்களேயன்றி, சைவம், விசிஷ்டாத்வைதம், துவைதம் போன்ற ஏனைய சமய ஸ்தாபனங்களும் மிக்க ஊக்கத்துடன் மக்களுக்கு அறிவுறுத்தின. தம்முள் தத்துவார்த்த விஷயங்களில் வேறுபட்ட கொள்கைகளையுடையவரேயாயினும் மனித சமுதாய

பண்பாட்டுச் சீர்திருத்தத்தில் யாவரும் ஒருமுகப்பட்டுப் பணியாற்றினர். பல்வேறு துறைகளிலும் பல நூல்களும் தோன்றின.

ச்ரௌத ஸ்மார்த்த விதிகளை அனுஷ்டிப்பவர்களுக்கு ஜைமினீய மீமாம்ஸா சூத்ரங்கள் புதுமுறையில் விளக்கப் பட்டன. ஜைமினீய நியாயமாலா விஸ்தரம், யக்ஞதந்த்ர ஸுதாநிதி, ப்ராயச்சித்த ஸுதாநிதி, கால நிர்ணயம் போன்ற நூல்கள் இத்தகையன. மக்களின் பண்பாட்டை சீர்திருத்த எழுந்த நூல் சுபாஷிதஸுதாநிதி என்பது. புருஷார்த்த ஸுதாநிதி என்ற கிரந்தம் தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற நான்கு புருஷார்த்தங்களையும் விளக்க எழுந்தது. பராசர ஸ்மிருதி வியாக்கியானம், வ்யவஹார மாதவீயம் என்ற இரண்டு நூல்கள் சமூக, சமய நெறிகளுக்குச் சட்டம் வகுத்தன. இந்த கிரந்தங்கள் யாவும் ஸ்ரீ வித்யாரண்யர், மாதவர், சாயணர் என்ற மூவராலும் அவர்களுடைய சிஷ்யர்களாலும் செய்யப் பட்டவை.

இந்தமாதிரியான மறுமலர்ச்சியானது, அக்காலத்தில் அரசியல் காரணமாகத் தாக்குண்டு நசித்துவந்த ஹிந்து சமுதாயத்தைத் தட்டி எழுப்பி, நாடு சீர்கேடடையாமல் காப்பாற்றியது. ஏனைய சமயங்களும் ஒருமுகப்பட்டு இந்தப் பிரயத்தனத்தில் ஈடுபட்டனவென்றாலும், ஸ்ரீ சாரதா பீடமே இதற்கு வழிகாட்டியாக இருந்தது. இக்காலத்தில் அருளாட்சி நடத்திய சிருங்கேரி பீடாதிபதிகள் அநேக ஆலயங்களில் பூஜா முறைகளைச் சீர்திருத்தி அமைப்பதிலும் தமது லக்ஷக்கணக்கான சிஷ்யர்களுக்கு சமூக சமய உணர்ச்சிகளை உண்டுபண்ணுவதிலும், அனைவரையும் சமய அனுஷ்டானங்களைக் கடைப்பிடிக்கச் செய்வதிலும் மிகுந்த ஆர்வம் காட்டினார்கள். மேலும் சமூக விரோதிகளை நிர்தாக்ஷிண்யமாய்க் கண்டித்தும், தவறான வழிகளில் சென்றவர்களுக்கு பிராயச்சித்தம் விதித்தும் தங்கள் தவறுதல்களை உணர்ந்து சீர்திருத்தம் அடைய வழி கோலினர். இதுபற்றி பின்வரும் அத்தியாயங்களிலும் பிரஸ்தாபிக்கப்படும்.

## ஆறுவது அத்தியாயம்

## ஸம்ஸ்தானத்தின் ஆரம்ப வளர்ச்சிக் காலம்

### 13. முதலாம் ஸ்ரீ சந்திரசேகர பாரதீ ஆசார்யாள்

( ஆட்சி 1386-1389 )

### 14. முதலாம் ஸ்ரீ ந்ருஸிம்ஹ பாரதீ ஆசார்யாள்

( ஆட்சி 1389-1408 )

ஸ்ரீ வித்யாரண்ய ஆசாரியாளுக்குப்பின் ஸ்ரீசந்திரசேகர பாரதீ I ஆசார்யாள் பீடம் ஏறினுர்கள். அவருக்குப் பின் ஸ்ரீ ந்ருஸிம்ஹ பாரதீ I பட்டத்துக்கு வந்தார். இவர் கோகர்ண க்ஷேத்ரத்துக்கு விஜயம் செய்தார்கள். ஹாலாடி என்ற இடத்தில் ந்ருஸிம்ஹ மூர்த்தியைப் பிரதிஷ்டை செய்தார்கள். 1404ம் ஆண்டில் சிருங்கேரிக்கு வந்த விருபாக்ஷ சக்கிரவர்த்திக்கு ஞானோபதேசம் செய்தார்கள். ஹாராவரியில் 1403ம் வருஷத்திய ஓர் சாஸனம் ஒரு குளத்தின் சமீபமாக இருப்பதாகக் கூறப்படுகிறது. அதில் "பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய ந்ருஸிம்ஹ பாரதீ ஒடேயார் சிருங்கேரி வியாக்யான ஸிம்மாஸனத்தில் இருக்கும்போது செய்யப்பட்ட பூதானம்" என்று குறிக்கப்பட்டிருக் கின்றது. பாரகூர் ராஜ்யாதிகாரியும் வீரவசந்த மாதவ மந்திரியின் குமாரனுமான பாச்சண்ண (பாஸ்கர) உடையார் ஸ்ரீமடத்துக்கு நிலங்களை வழங்கினுன்.

ஆவனி மடம்: ஸ்ரீ ந்ருஸிம்ஹ பாரதீ ஆசார்யாள் ஆவனி மடத்தையும் ஸ்தாபித்ததாக ஓர் கர்ண பரம்பரைச் செய்தி உலவுகிறது. ஆசார்யாள் கோலார் முகாமில் இருந்தபோது இதை ஸ்தாபித்தாராம். தம்முடைய சிஷ்யர் களில் ஒருவரை அந்த மடத்தில் அமர்த்தினுர்கள். ஆவனி மடத்தைப்பற்றிய தஸ்தாவேசுகளில் முதலாவது 1645ம் ஆண்டைச் சேர்ந்தது. பின்னுல் இம்மடத்துக்கு அளித்த தான சாஸனங்கள் பீஜாபூர் கர்னுடக சுல்தான்களால் செய்யப்பட்டவை. இந்த மடத்தை ஸ்தாபித்தவர் இந்த

ஸ்ரீ ந்ருஸிம்ஹபாரதீ ஸ்வாமிகளாக இருக்கலாம். ஆவ்னி மடாதிபர்கள் தம்மை "ஆவனி சிருங்கேரி ஸ்வாமிகள்" என்றழைத்துக்கொள்கிறுர்கள்.

ஸ்ரீ ந்ருஸிம்ஹ பாரதிகளுக்கு, ஸ்ரீ சந்திரசேகர பாரதி, ஸ்ரீ புருஷோத்தம பாரதீ என்ற இரு சீடர்கள் இருந்தார்கள். அவர்களில் புருஷோத்தம பாரதீ தம் குருவின் ஸந்நிதியில் கூடவே இருந்து வந்தார். ஸ்ரீ சந்திரசேகர பாரதி யாத்திரை செய்து வந்தார்.

## 15. ஸ்ரீ சந்திரசேகர பாரதி ஆசார்யாள் II

ஸ்ரீ ந்ருஸிம்ஹ பாரதிகளின் விதேக முக்திக்குப் பிறகு அவர்களின் முதல் சிடர் ஸ்ரீ சந்திரசேகர பாரதி ஹம்பியில் சக்ரவர்த்தி தேவராயன் முன்னிலையில் ஜகத்குருவாகப் பட்டாபிஷேகம் செய்விக்கப்பட்டார். பிறகு ஸ்ரீ புருஷோத்தம பாரதியுடன் சிருங்கேரிக்குச் சென்று தங்கள் குருவுக்கு ஓர் ஆலயம் நிர்மாணம் செய்தபின் இருவரும் கபிலா-காவேரி ஸங்கம க்ஷேத்ரமாகிய திரிகூடலு நரஸிபூர் க்ஷேத்திரத்திற்குச் சென்ருர்கள். அங்குள்ள அச்யுதாரண்யரின் ஆச்ரமத்தில் தவம் செய்து வரும்போது ஸ்ரீ சந்திரசேகர பாரதீ ஆசார்யாள் விதேக முக்தி அடைந்தார்கள். இவர்கள் பீடாதிபத்யம் சொல்பகாலமே. சக்ரவர்த்தியின் மந்திரி ஸ்ரீ புருஷோத்தம பாரதியை ஹம்பிக்கு அழைத்துச் சென்று பட்டாபிஷேகம் செய்து வைத்தார்கள். பிறகு ஆசார்யாள் சிருங்கேரிக்குச் சென்று ஸம்ஸ்தானத்தின் நிர்வாகத்தை வகித்தார்கள்.

## 16. ஸ்ரீ புருஷோத்தம பாரதீ ஆசார்யாள் I

(ஆட்சி. 1408 (?)-1448)

துளு கொங்கண சீமையில் அதிகாரம் வகித்த மங்கராசா என்பவன் ஹரிஹள்ளி கிராமத்தை ஆசார்யாளுக்குச் சமர்ப்பித்தான் (*1446*). ஆசார்யாளின் சிஷ்யர் ஒருவரான புருஷோத்தம ஆரண்யர் என்பவருக்கு ஓர்

கிராமம் தேவராயரால் வழங்கப்பட்டது. விஜயநகர சக்கிரவர்த்தியின் பூதானத்தைக்கொண்டு ஆசார்யாளின் மற்ருெரு சிஷ்யர் கோகர்ணத்தில் ஓர் மடம் நிறுவினுர். இந்த சிஷ்யரின் பெயர் மாதவபாரதி என்பது.

தேவராயருடைய ஆக்ஞையின் பேரில் கோவாவில் உள்ள அவருடைய பிரதிநிதியும் மஹா பிரதான ராமசந்திர தேவ உடையார் என்பவரும் கோகர்ணத்தில் இருக்கும் மஹா பலேச்வரர் ஆலயத்துக்கும் இதர ஆலயங்கட்கும் பூஜா நைவேத்தியங்களுக்காக மான்யம் விட்டு அவை சிருங்கேரி மாதவ பாரதியால் நடத்தப்படவேண்டும் என்று நியமனம் செய்தார்கள். விச்வேச்வர பாரதி என்ற இன்னெரு சிஷ்யர் சக்கிரவர்த்தியிடமிருந்து பூதான மானியம் வாங்கினுர் எனினும் அவருக்கு சிஷ்ய பரம்பரை வாரீசு இல்லாததால் அந்த சொத்து சர்க்காருக்குச் சேர்ந்து விட்டது. ஹம்பிக்கு அருகே விச்வேச்வராரண்யபுரம் என்ற கிராமத்தில் ஸ்ரீ வித்யாசங்கரர் பெயரால் நிறுவப்பட்ட ஆலயத்தின் நித்யபூஜைக்காக பாணவாசி பன்னீராயிரம் என்ற இடத்தில் அண்டவலி என்ற கிராமம் 1430ல் சக்கிர வர்த்தியால் விச்வேச்வராரண்யர் என்ற சிஷ்யருக்கு அளிக்கப்பட்டது. இந்த தானம் ஜகத்குரு ஸ்வாமிகள் விஜய நகரத்துக்கு எழுந்தருளியபோது தேவராயர் அவரை சகல ராஜமரியாதைகளுடன் வரவேற்று உபசரித்ததை ஒட்டிகங்குவல்லி என்ற கிராமத்தை சிருங்கேரியில் இருக்கும் ஆலய பரிபாலனத்துக்கும் அங்கு தங்கும் யதிகளின் ஸம்ரக்ஷணைக்கும் இன்னும் இதர தர்மங்களுக்குமாக அளித்த சமயம் செய்யப்பட்டிருக்கலாம். இவருடைய சிஷ்யர் ஸ்ரீ சங்கரானந்தர்.

## 17. ஸ்ரீ சங்கரானந்த பாரதீ ஆசார்யாள்

(ஆட்சி 1448—54)

ஸ்ரீ சங்கரானந்தர் பட்டத்துக்கு வந்தபின் மல்லிகார்ஜுனர், இளவரசர் புக்கராயர் இவர்களின் அழைப்புக்கிணங்கி விஜயநகரம் சென்ருர். அப்பொழுது

ஆயிரத்து அறுநூற்றுத்தொண்ணூற்றேழு கத்யானம் எனும் பணம் வருமானம் வரக்கூடிய நிலங்களை சக்கர வர்த்தியார் தானம் செய்தார். அதுபோல சக்கரவர்த்தியின் பாக்கூர் பிரதி நிதியும் தனது ஆட்சிக்குள்பட்ட கொங்கு வல்லி என்ற கிராமத்தை ஜாரி செய்தார்.

அரிசிக்கரைத் தாலூகாவைச் சேர்ந்த கனிகட்டேயில் உள்ள ச்ருங்கநாதேச்வரர் ஆலயத்தின் ஓர் தூணில் ஸ்ரீ சங்கரானந்த ஆசார்யாள் பெயர் பொறிக்கப்பட்டிருக் கிறதிலிருந்து ஆசார்யாள் அடிக்கடி அந்த இடத்துக்கு தியானம் செய்ய வந்திருந்ததாகக் கூறப்படுகின்றது.

## 18. ஸ்ரீ சந்திரசேகர பாரதீ ஆசார்யாள் III

(ஆட்சி 1454—1464)

## 19. ஸ்ரீ ந்ருசிம்ஹபாரதீ ஆசார்யாள் II

(ஆட்சி 1464—1479)

ஸ்ரீ சங்கரானந்த பாரதீ ஸ்வாமிகளுக்குப்பின் ஸ்ரீ சந்திரசேகர பாரதீ ஆசார்யாள் III பட்டத்துக்கு வந்தார். அவருக்குப்பின் ஸ்ரீ ந்ருஸிம்ஹ பாரதீ ஆசார்யர்ள் II பட்டத்துக்கு வந்தார். பம்பாபுரம் என்ற இடத்தில் கிடைத்த சாஸனத்தில் ஹள்ளிஹிரியூர் மஹாஜனங்கள் ஸ்ரீ ந்ருஸிம்ஹ பாரதீ ஆசார்யாள் II அவர்களின் பெயரால் காவேரிக்கரையில் ஓர் சத்திரம் கட்டி அன்னதானம் செய்வ தற்காக சிக்க தீக்ஷிதர் என்பாருக்கு பூதானம் வழங்கின தாகக் காணப்படுகின்றது.

## 20. ஸ்ரீ புருஷோத்தம பாரதீ ஆசார்யாள் II

(ஆட்சி 1479—1517)

இவர்கள் ஆட்சி பீடத்தில் இருந்தபோது விஜயநகர அரசுக் கட்டிலைக் கவர இரண்டுபேர் முயன்றனர். 1486ல் சாளுவநரஸிம்ஹனும், 1491ல் துளு வம்சத்தைச் சேர்ந்த நரச நாயக்கன் என்பானும் இராஜ்யத்தைக் கைப்பற்ற முயன்று தோல்வியுற்றனர். விஜயநகர அரசர் கிருஷ்ண

தேவராயர் கலிங்கதேசாதிபதி வீரருத்ர கஜபதியோடு கடும்போர் துவக்குவதற்குமுன் ஸ்ரீ புருஷோத்தம பாரதீ ஆசார்யாளின் அருளாசியை நாடினார். ஆசார்யாளும் தமது ஆசிச் செய்தியைத் தமது சிஷ்யர்களில் ஒருவரான வித்யாரண்யர் என்பவர் மூலம் அனுப்பிவைத்தார்கள். விதயாரண்யரை சகல மரியாதைகளுடன் வரவேற்று ஹம்பியில் இருக்கச் செய்து உபசரித்தான்.

கிருஷ்ணதேவராயர் சிருங்கேரி மடத்துக்கு பாரக்கூர் சீமையில் ஹுய்யூரு என்ற ஊரையும் இன்னும் சில கிராமங்களையும் தானமாக அளித்தார். அதோடு சிருங்கேரிக்குச் சொந்தமாயிருந்து பின் பிறரால் அபகரிக்கப் பட்ட கவத்துரு, கஜநுரு, முண்டலி, ஹரக்கரை, ஷிமோகா, முதலிய கிராமங்களைத் திரும்பவும் சிருங்கேரிக்கே கொடுக்க ஏற்பாடு செய்தார். அரசர் நடக்கவிருக்கும் யுத்தத்தில் தனக்குவெற்றி கிடைக்க வேண்டுமென்றும், தன்னுடைய சைன்யங்கள் தன்னிடம் விச்வாஸமாக இருக்கவேண்டு மென்றும், தனக்கும் தன் பிரஜைகளுக்கும் சுபிக்ஷம் உண்டாகவேண்டும் என்றும் ஆசார்யாளை பிரார்த்தித்துக் கொண்டார். ஆசார்யாளின் பரிபூரணகடாக்ஷம் அதியற்புத மான விளைவையுண்டாக்கியது. கிருஷ்ணதேவராயர் கலிங்கத்தை ஜெயித்தார், ரெய்ச்சூரைத் திரும்பப்பெற்றார். பீஜாபூர், ஆமத்நகர், கோல்கொண்டா, சைன்னியங்களை முறியடித்தார். ஆசார்யாளின் பிரதிநிதியாகச் சென்ற வித்யாரண்யர் ஹம்பியிலேயே தங்கி அங்குள்ள மடத்தை சீர்படுத்தினர். கிராம அதிகாரிகள் சிருங்கேரி ஆசார் யாளுக்குக் கீழ்படிந்து நடக்கவேண்டுமென்று 1515ல் சக்கிரவர்த்தி உத்தரவிட்டார். ஆசார்யாள் துளுநாட்டுக்கு விஜயம் செய்து சங்கரன் என்ற சிற்றரசனால் உபசரிக்கப் பட்டு அகநாசினீ தீரத்திலுள்ள சங்கரநாராயணரையும், லக்ஷ்மீநரஸிம்மரையும் ஆராதித்தார்கள்.

## 21. ஸ்ரீராமசந்திர பாரதீ ஆசார்யாள்.

(ஆட்சி. 1517—1560)

விஜயநகர சக்கிரவர்த்தி சதாசிவார்யரின் தளவாயாக இருந்த ஹொன்னப்ப நாயக்கர் என்பவர் 1545ல் அரகராஜ்ய சீமையைச் சேர்ந்த பஸ்டிஹள்ளியை மடத்துக்கு தானம் செய்தார். கார்களாவுக்குச் சென்றிருந்தபோது சமணர்கள் தங்கள் ஆலயத்துக்கு அழைத்து வணங்கச் சொன்னார்கள். ஆசார்யாள் வணங்கும்போது அங்கு கோவில் கொண்டிருந்த மூர்த்தி பத்மனாபராகக் காட்சி அளிததது. ஆசார்யாளின் தபோ மஹிமை அவ்வாறு.

## 22. மூன்றும் ஸ்ரீ ந்ருஸிம்ஹபாரதீ ஆசார்யாள்

(ஆட்சி. 1560—1573)

## 23. நான்காம் ந்ருஸிம்ஹ பாரதீ ஆசார்யாள் (இம்மடி அல்லது த்விகுண ந்ருஸிம்ஹ பாரதிகள்)

(ஆட்சி. 1573—1599)

இவர் சிருங்கேரியிலுள்ள வசிஷ்டாச்ரமத்தில் தங்கள் குருவின் பெயரைக்கொண்ட நரஸிம்ஹபுரம் என்ற அக்ரஹாரத்தை ஸ்தாபித்தார்கள். 1573ம் ஆண்டில் பெனுகொண்டாவில் ஆட்சி புரிந்த ஸ்ரீரங்க நாயக்கர் I என்பவரால் செய்யப்பட்ட சாஸனத்தில் அதில் அடங்கிய தானம் ஸ்ரீந்ருஸிம்ஹபாரதீ ஆசார்யாள் சிருங்கேரியில் "தர்ம ஸிம்ஹாஸனத்தில்" இருந்தபொழுது வழங்கப்பட்ட தாகக்கூறப்பட்டிருக்கின்றது. இவரை ஸ்ரீவித்யாந்ருஸிம்ஹ பாரதீ என்றும் அழைப்பார்கள்.

இந்த அத்தியாயத்தில் பரிசீலனை செய்யப்படும் சுமார் இரண்டரை நூற்றாண்டு காலத்தில் விஜயநகர சாம்ராஜ்யத்தோடு அது ஓங்கியிருந்த காலத்திலும் வீழ்ச்சி யுற்ற காலத்திலும், சிருங்கேரி கொண்டிருந்த தொடர்பைக் காட்டுகிறது. சிருங்கேரி எல்லைக்கு வெளியிலும் சில நிலங்கள் மடத்தின் ஆதிக்கத்துக்கு வந்தன. அந்நிலங்

களின் சுரங்க பாத்தியத்தையும் பெற்றது. பாக்குமரங்கள், சந்தண மரங்கள் வைத்து வளர்க்கவும், காடு திருத்தி சாகுபடிக்குக் கொண்டுவரவும் அதிகாரம் பெற்றது. அவைகள் யாவும் இறையிலி நிலங்களாக இருந்ததோடு அரசசேவைக்கு ஆள் அனுப்பும் கடமையும் இல்லாதனவாக ஆக்கப்பட்டன. அரசருடைய மேல்பார்வையில் சட்ட நிர்வாகம் செய்யும் உரிமையும் அளிக்கப்பட்டது. சிஷ்யர் களுக்கு வழங்கப்பட்ட நிலங்களில் வாரீசற்றுப்போனவற்றை சமஸ்தானமே நிர்வாகம் செய்ய அனுமதிக்கப்பட்டது. ஆனால் அவ்வாறு வாரீசற்ற நிலங்களை சமஸ்தானம் சேர்த்துக்கொள்ளும்பொழுது அவற்றின் மதிப்புக்கு ஓர் உச்சவரம்பு ஏற்படுத்தி அவ்வரம்புக்கு மேற்பட்டவைகளை அரசரின் அனுமதி பெற்றே சேர்த்துக்கொள்ளலாம் என்ற நிபந்தனையும் விதிக்கப்பட்டது. இராஜ்ஜியத் தலைநகருக்கு ஆசார்யர்கள் எழுந்தருளும்போது அவர்களுக்கு அரச மரியாதைகளுடன் வரவேற்பு அளிக்கப்பட்டது. இந்த மரியாதைகளில் "அட்ட பல்லக்கி" என்பதொன்று. (தெருக்களில் பல்லக்கை நேற்போக்கில்லாமல் குறுக்கு வாட்டில் தாங்கிச் செல்வது)

அப்பய்ய தீக்ஷிதர் தமது "சித்தாந்த லேசசங்க்ரஹம்" என்ற நூலில் இவ்வாறு எழுதியுள்ளார் :—'ஸ்ரீ சங்கர பகவத் பாதாளின் முகாரவிந்தத்திலிருந்து உதித்த அத்வைதோபதேசம் கங்கா பிரவாஹம்போல் அவருடைய பரம்பரையில் வந்த ஆசாயாள்ாகிறபல வாய்க்கால்கள்வழி யோடி, பல சிஷ்யகோடிகளின் இருதயமாகிற நிலங்களில் பாய்ந்து பயனளித்தது.'

ஸ்ரீ பாரதீ தீர்த்தர், ஸ்ரீ வித்யாரண்யர் என்ற இருவரும் பல ஆச்ரமங்களையும் மடங்களையும் ஸ்தாபித்து, அத்வைத பிரவாஹம் சிறு வாய்க்கால்கள் வழியோடி ஆங்காங்கு ஆன்ம சுபிக்ஷத்தை யுண்டுபண்ண காரண கர்த்தாக்களாகத் திகழ்ந்தவர்கள். அவர்களுடைய பரம் பரையில் வந்த ஆசார்யர்களும் இவ்வாறே பல மடங்களை நிறுவி அம் மடங்களில், தம்மிடம் நேரடியாகவோ, சிஷ்ய

பரம்பரையாகவோ தீக்ஷா, உபதேசம் பெற்ற, தகுதி வாய்ந்த சிஷ்யர்களைத் தலைவர்களாக நியமித்தார்கள், பல இடங்களிலிருந்து பல பண்டிதர்களும், சந்நியாஸிகளும் வந்து அத்வைத சாஸ்த்ரத்தின் பல்வேறு துறைகளை ஆராய்ந்தும், சர்ச்சை செய்தும் பயனடைந்தனர். இந்த மடங்களோடு ஆலயங்களும், அன்ன சத்திரங்களும் இணைக்கப்பட்டிருந்தன.

## ஏழாவது அத்தியாயம்

### சமஸ்தானம் ஸ்திரமாகின்றது

17ம் நூற்றுண்டில் சிருங்கேரியின் சரித்திரம் ஒளியும் இருளும் கலந்த காலமாகக் காணப்படுகின்றது. 18ம் நூற்றுண்டின் ஆரம்பத்திலும்கூட இப்படித்தான் இருந்தது. சைன்ய நடமாட்டமும், அரசியல் கிளர்ச்சிகளும், அரச வம்சத்தினர்களின் மாற்றங்களும் நாட்டில் பெருங் குழப்பத்தை உண்டாக்கியிருந்தன. இந்த நெருக்கடியில் சிருங்கேரி சமஸ்தானம் பல நிலங்களையும் சொத்துக்களையும் இழக்க நேரிட்டது. இந்த இருண்ட நிலைமையைக் கர்நாடகத்தில் அரசாண்டு வந்த அரச பரம்பரையினர் ஒருவாறு தீர்த்து வைத்தனர். தென்னிந்தியா முழுவதிலும் பல்வேறு சமயக் கொள்கைகளை அனுஷ்டிக்கும் பற்பல மடங்கள் ஏற்பட்டன. கர்நாடக வீர சைவ மடங்களும், விசிஷ்டாத்வைத மடங்களும் மாத்வ மடங்களும் அநேகம் தோன்றின. இவைகளில் மிகச் சிறந்த கல்விமான்களும் அனுபூதிமான்களுமான பல பீடாதிபதிகள் இருந்தனர். இவை தவிற கிருஹஸ்தர்களாக இருந்துகொண்டே சமய நூல்களை ஐயந்திரிபறக்கற்ற சிறந்த மேதைகளும் தோன்றினர். இவர்களுக்குள் கொள்கை வேற்றுமைகள் இருந்தாலும் பொதுமக்களின் சமய உணர்ச்சிகளையும், சீலத்தையும் ஆன்ம வளர்ச்சியையும் உயர்த்தப் பேருதவி செய்தனர். சமயப் பூசல்கள் மக்களிடையே பரவி அவர்களிடம் பிளவுகளை உண்டுபண்ணவில்லை. அக்காலத்து அரசர்களும் எல்லாச் சமயக்கொள்கைகளுக்கும் ஆதரவு

கொடுக்கும் அளவுக்குப் பரந்த சமரஸ நோக்கு உடையவர் களாகவே யிருந்தனர். எல்லாவற்றையும்விட சிருங்கேரி ஆசார்யர்கள் தம்முடைய ஆழ்ந்த தபஸ்ஸாலும், சீரிய பண்பாட்டாலும், கல்வி அறிவாலும் நாட்டில் யாவராலும் நன்கு மதிக்கப்பெற்றனர்.

இந்தப் பதினேழாம் நூற்றுண்டில் அரசியல் குழப்பங் களும் மாறுதல்களும் அதிகம் இருந்தன. 1565ம் ஆண்டில் தலைக்கோட்டை யுத்தத்தில் முஸ்லீம் அரசர்களால் விஜய நகர ஸாம்ராஜ்பம் முறிபடிக்கப்பட்டு வீழ்ச்சியடைந்தது. விஜய நகரமே சூரையாடப்பட்டது, அழிக்கப்பட்டது. அதன் பின் திருமலை ராயர் பெனுகொண்டாவைத்தனது தலை நகரமாக்கிக் கொண்டார். உள் நாட்டுக் கலகங்களும் பீஜாபூர், கோல்கொண்டாவிலிருந்து வெளி நாட்டுப் படை யெடுப்பும் சேர்ந்து நாட்டில் பெரும் குழப்பத்தை உண் டாக்கின. மதுரை, தஞ்சாவூர் இந்த இடங்களில் இருந்த நாயக்கச் சிற்றரசர்கள், விஜய நகர ஆதிக்கத்தில் இருக்க மறுத்து சுதந்திரக்கொடி நாட்டினர். வேலூர், கெளதி, மைசூர் சீமைகளிலிருந்த உடையார்கள் பேரளவுக்குப் பழய, ஆனுல் மங்கிப்போன சாம்ராஜ்பத்துக்குக் கீழ்படிந் திருந்தனர். 1630ம் ஆண்டில் பீஜாபூர் சைன்யம் ரணத் உல்லாகான் என்பவனின் தலைமையில் தென்னுட்டில் படைபெடுத்தது. விஜபநகர அரசர் மூன்றுவது ஸ்ரீ ரங்க ராயர், தெற்கே நாயக்கர்களின் கலகத்தையும், பீஜாபூர் கோல்கொண்டா சைன்யங்களின் தாக்குதலையும் சமாளிக்க முடியாமல் வேலூர் யுத்தத்தில் முறிபடிக்கப்பட்டார். அவர் கெளதி நாயக்கரிடம் சரண் புகுந்து அவன் ஆதரவில் பேலூரில் வசித்து வந்தார். இத்தகைய சூழ்நிலையை மனதில் கொண்டே ஸ்ரீ சிருங்கேரி சம்ஸ்தானத்தின் வரலாற்றை ஆராயவேண்டும். விஜபநகர அரசர்களின் ஆதரவு அற்றுப்போகவே சம்ஸ்தானம் அநேக கிராமங்களை இழந்தது. அவைகளை நேர்மையற்ற சிலர் ஆக்ரமித்துக் கொண்டனர். ஆசார்யாளும் வெளிப் பிரதேசங்களில் போய் இருக்கவேண்டி வந்தது. கெளதி நாயக்கர்கள் வீர சைவர்

களாயினும் சிருங்கேரி பீடத்தில் மதிப்பும் மரியாதையும் உள்ளவர்களாகவே இருந்தனர். கௌதி நாயக்கர் வம்சத்தில் முதன் முதலாக சிருங்கேரிமடத்துக்கு ஆதரவு அளித்தவர் வேங்கடப்ப நாயக்கர் என்பவர். அவர் ஆசார்யாள் மடத்தில் தங்க உதவியளித்தார் அதிலிருந்து சம்ஸ்தானத்தின் ஸ்தாவர சொத்துக்கள் ஒர்மைப் படுத்தப் பட்டன.

## 24. ஸ்ரீ முதலாம் அபிநவ ந்ருஸிம்ஹபாரதீ ஆசார்யாள்

(ஆட்சி 1599—1622)

இவர் மந்த்ர சாஸ்திரத்தில் மிகத்தேர்ச்சி பெற்றவர். ஓர் தலைசிறந்த அனுபூதிமான். இவர்கள் எழுதிய சிவகீதை வியாக்கியானம் ஒப்புயர்வற்றது. 1602ம் ஆண்டில் "ராமேச்வரர்" என்று ஓர் லிங்கம் பிரதிஷ்டை செய்தார். தன்னுடைய குருவின் பெயரால் 'நரஸிம்மபுரம்' என்ற ஓர் அக்கிரஹாரத்தையும் நிறுவினர். ஆசார்யாள் ஒரு சமயம் மலஹாநிகரேச்வரர் ஆலயத்துக்குச் சென்றார். அங்கு விநாயகப் பெருமானுக்கு விக்ரஹம் இல்லாமல் இருந்தது. ஓர் மஞ்சள் துண்டை யெடுத்து அங்கிருந்த தூண்கள் ஒன்றில் விநாயக மூர்த்தியின் திருவுருவத்தை வரைந்து அதனையே வழிபட்டார். காலக்ரமத்தில் வரையப் பட்ட அந்த உருவம் பருத்து விநாயக விக்ரஹமாகவே ஆகிவிட்டது. இப்பவும் அந்தத்தூணைத் தட்டிப்பார்த்தால் திருவுருவம் இருக்கும் பாகத்தில் உள்ளே வெறும்வெளியாய் (bollow) இருப்பது போன்ற சத்தம் கேட்கின்றது. மற்ற இடங்களில் கெட்டியாக இருப்பதாக சத்தம் கேட்கின்றது. சிலர் இந்த அற்புதத்தைச் செய்தவர் ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதீ ஆசார்யாள் என்பர். அக்கூற்று ஆதாரமற்றது. அவர்களின் காலம் 1705—41. ஆனல் 1605ம் ஆண்டி லேயே இந்த அதிசய விநாயக மூர்த்திக்கு சிவப்ப நாயக்கர்-லிங்கம்மாள் என்ற தம்பதிகளுக்குப் பிறந்த ஸித்தம்மா என்ற பெண்மணி ஓர் தானசாஸனம் செய்திருக்கிருள். குருவம்ச காவியத்தில் ஸ்ரீ அபிநவ ந்ருஸிம்ஹ பாரதீ

ஆசார்யாளே இந்த அற்புதத்தைச்செய்தவர் என்று திட்ட மாகக் கூறப்பட்டிருக்கின்றது.

சிவகங்கை மடம் :—இந்த ஆசார்யாள் சிவகங்கையில் ஓர் மடம் ஸ்தாபித்தார். அதற்குத் தலைவராக ஸ்ரீ சங்கர பாரதீ என்பவரை நியமித்தார். இவர் 1656ம் ஆண்டுவரை பீடத்தை வகித்தார். அதன் பின்னர் பல ஆசார்யர்கள் வரிசையாக அப்பீடத்தில் அமர்ந்து அருளாட்சி செய்து வருகின்றனர். ஸ்ரீ சங்கர பாரதீ வட இந்தியா தென் இந்தியா முழுவதும் சஞ்சாரம் செய்தவர். அவர் ஓர் சிறந்த மேதை. சிவகங்கை மடத்தை ஸ்தாபிப்பதற்கு அக்காலத்து மைசூர் அரசர் ராஜ உடையார் மிதந்த அக்கரை காட்டினர் என்று தெரிகின்றது.

முதலாவது வேங்கடப்ப நாயக்கரும் (1586–1629) சிருங்கேரியும்:—கௌதி நாயக்கர்களுக்கும் சிருங்கேரிக்கும் முதன் முதலாக சதாசிவ நாயக்கர் காலத்தில் தான் தொடர்பு ஏற்பட்டது. வேங்கடப்ப நாயக்கர் சிருங்கேரி ஆசார்யாளை இக்கேரியிலிருந்த தமது அரண்மனைக்கு வர வழைத்து உபசரித்து ஓர் பச்சை வர்ணக்கொடி அளித்தார். அதோடு சிருங்கேரி மடத்தை விரிவுபடுத்திக் கட்டினர். ஓர் அக்கிரஹாரத்தையும் நிறுவினர். முக்கர்நாடு என்ற இடத்தில் ஐம்பது வராகனுக்கு மேற்பட்ட வருமானமுள்ள நிலத்தை தானமாக அளித்தார். 1622ம் ஆண்டில் மறு முறை ஆசார்யாள் இக்கேரிக்கு எழுந்தருளினர்கள். அப்பொழுது அவர்கள் தன்னுடைய பிரதம சிஷ்யரும் தனக்குப்பின் பட்டத்துக்கு வர இருந்தவருமான ஸ்ரீ சச்சிதானந்த பாரதியையும் அழைத்துச் சென்றார்கள். ஸ்ரீ சச்சிதானந்த பாரதியார் தர்க்கம், மீமாம்ஸை, வேதாந்தம் முதலிய சாஸ்திரங்களில் மிகுந்த தேர்ச்சி யுடையவர். அவர் தனது அபார வாக்கு வல்லமையாலும் சாஸ்திர அறிவாலும் அங்கிருந்த பல பண்டிதர்களின் நன்மதிப்பைப் பெற்றார். ஆசார்யாள் சிருங்கேரி திரும்பி யதும் விதேக முக்தி எய்தினர்.

## 25. முதலாம் சச்சிதானந்த பாரதீ ஆசார்யாள்

### ஆட்சி 1622—1663

ஸ்ரீ அபிநவந்ருஸிம்ஹ பாரதீ ஆசார்யாளுக்குப் பின் ஸ்ரீ சச்சிதானந்த பாரதீ ஆசார்யாள பீடாரோகணம் செய்தார்கள். இவர்களுடைய வாழ்க்கை வரலாறு இராமச்சந்திர மஹோதயம் என்ற நூலில் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றது.

மதுரை ஜில்லாவில் வைகை நதியும், மஞ்சளாறும் கூடும் இடத்தில் உள்ள அர்த்தநாரீசுவரபுரம் என்ற ஊரில் வேதாத்யயனம் ஸதாசாரம் முதலிய நற்பண்புகள் நிறைந்த அந்தண வம்சத்தில் பிறந்த காளஹஸ்தி பட்டர் என்னும் ஓர் மஹான் இருந்தார். யஜுர்வேதியான இவர் கார்கய கோத்ரத்தில் உதித்தவர். இந்த வம்சத்தில் பிறந்தவர் யாவருமே வேதத்திலும் சாஸ்திரங்களிலும் மிகத் திறமை பெற்று புகழுடன் வாழ்ந்து வந்தனர். காளஹஸ்தி பட்டரின் புதல்வரான அகோபல பட்டருக்கு மூன்று குமாரர்கள். அவர்களில் மூத்தவர் ந்ருஸிம்ம பட்டர். இவர் வெகுகாலம் குடும்ப வாழ்க்கை நடத்திவிட்டுப் பின்னால் ராமச்சந்திராச்ரமரிடம் ஸந்யாஸம் பெற்று நாராயண ஆச்ரமர் என்ற யோக பட்டத்துடன் விளங்கி ஸித்தியடைந்துவிட்டார். இவருடைய இரு இளைய ஸகோதரர்கள் நரஹரி, அழகாத்ரி என்பவர்கள். இவர்கள் எல்லோருமே அர்த்தநாரீசுவரபுரத்தில் வஸித்து வந்தனர். இவ்வூருக்கே ஸ்ரீ கண்டேசுவரபுரம், குன்றுவாரங்கோட்டை ஜாண்ட்ரப்பட்டி என்று பல பெயர்கள் இருந்திருப்பதாகத் தெரிகிறது. இப்பொழுது இது குன்னம்பட்டி என்று அழைக்கப்படுகிறது.

அழகாத்ரியும் அவர் தர்மபத்தினி திம்மாம்பாளும் தமக்குப் புத்திரபாக்யம் கிடைக்குமாறு பகவானை வேண்டினார்கள். இறைவனருளால் இரண்டு புத்திரர்கள் பிறந்தனர். மூத்தவர் ந்ருஸிம்மர், இரண்டாவது ப்ரஹ்மா சிறு வயதிலேயே தாயை இழந்த இக்குழந்தைகளை இவர்களின்

தாய் மாமன்கள் எடுத்துச் சென்று வளர்த்து வந்தனர். உரியகாலத்தில் தந்தை உபநயனம் செய்வித்துக் கல்வி கற்க ஏற்பாடு செய்தார்.

நாட்டில் கொடும் பஞ்சம் ஏற்பட்ட காரணத்தால், இக் குடும்பத்தினர் மதுரை சோழவந்தான், இராமநாதபுரம், கூலப்ப நாயக்கபுரம், வீர பூபால சாகரம், கீழ மங்கலம், மேல மங்கலம் முதலிய கிராமங்களில் ஊர் ஊராய்த்திரிந்து வாழ்க்கையை நடத்தினர். அழகாத்ரியின் மூத்த குமாரர் ந்ருஸிம்ஹர் தன் தாய் மாமன் வேங்கடாசல யஜ்வாவின் குமாரியை மணக்கும் பொருட்டு ஸ்ரீ சிருங்கேரி சென்றார். அப்போது அந்த மாமன் சிருங்கேரியில் வசித்து வந்தார். ஆசார்யாள் இவனுடைய பரிபக்குவ நிலையை சோதித்து அறிந்து இவரே தமக்குப் பின் பட்டத்துக்கு வர அருகதை உடையவர் என்று தீர்மானித்து இவருக்கு சந்நியாஸம் கொடுத்தார். விவாகத்தில் இச்சை இருந்த இவருக்கு ஆசார்யாளைப் பார்த்ததும் பூர்ண வைராக்யம் ஏற்பட்டு விட்டது. ஸ்ரீ சச்சிதானந்த பாரதீ என்ற தீக்ஷா நாமமும் இவருக்கு வழங்கப்பட்டது.

பட்டத்துக்கு வந்த சில நாட்களுக்குள் வேங்கிடப்ப நாயக்கர் அழைப்பின்பேரில் ஸ்ரீ சச்சிதானந்த பாரதீ ஆசார்யாள் இக்கேரிக்குச் சென்றார். அங்கிருந்து நாயக்கரோடு கொல்லூர் சென்று ஸ்ரீ மூகாம்பிகையை தரிசித்தார்.

**தர்க்கவாதங்கள் :** அரசரும் ஆசார்யாளும் வீற்றிருக்க அவர்கள் முன்னிலையில் காசியிலிருந்து வந்திருந்த ரங்கோஜி என்ற அத்வைத பண்டிதர் வித்யாதீசபட்டர் என்ற மாத்வ பண்டிதரை வாதில் வென்றார். ரங்கோஜியின் சகோதரர் பட்டோஜி தீக்ஷிதர் என்பவர், சமஸ்தான பண்டிதரும், விசிஷ்டாத்வைத சித்தாந்தியுமான இராமானுஜர் என்பவரை வாதுக்கழைத்து அவரோடு தர்க்கம் செய்து வெற்றிபெற்றார். இராமானுஜர் தன்னுடைய விருதுகள் அனைத்தையும் பட்டோஜி தீக்ஷி

தருக்கு சமர்ப்பித்தார். ஆசார்யாள் அரசருக்கு "வைதிக அத்வைத சித்தாந்த பிரதிஷ்டாபகர்" என்ற பட்டத்தை வழங்கினுர்கள். இந்த பட்டிமண்டப குழுவில் அப்பய தீக்ஷிதரின் சமகாலத்தவரான ஸ்ரீ நரஸிம்ஹ ஆச்ரமி என்பவரும் இருந்தார்.

பைரவனின் படையெடுப்பு: வீரபத்திர நாயக்கர் இக்கேரியில் அரசுக்கட்டில் ஏறிய சில காலத்தில் கலச நாட்டரசன் பைரவன் என்பவன் இக்கேரி இராஜ்யத்தின் மீது படையெடுத்து சிருங்கேரி உள்ளிட்ட ஒரு பகுதியை ஆக்ரமித்துக்கொண்டான். அவன் பேராசையினுல் ஆசார்யாளே பயமுறுத்தி மடத்திலுள்ள விலையுயர்ந்த ஆபரணங்களும் மற்றும் பல பொருள்களும் தனக்குக் கிடைக்க எண்ணினுன். தனது நகருக்கு ஆசார்யாளே வரவழைத்தான். ஆசார்யாளே நேரில் பார்த்ததும் பயந்து தன் எண்ணத்தை நிறைவேற்றிக்கொள்ளவில்லை. ஆசார்யாள் சிறிதும் பயப்படவே இல்லை. பின் ஒரு சமயம் பைரவன் தன் சைன்யத்தோடு சென்று சிருங்கேரியைக் கொள்ளேயிட்டான். திரும்பி வரும்போது ஆசார்யாளின் உதவிக்கு வந்த நாயக்கரின் ஓர் சிறு சைன்யத்தையும் தோற்கடித்தான். பைரவனின் மமதை அளவு கடந்தது. மறுபடியும் சிருங்கேரி சென்ருன். ஆசார்யாள் சிருங்கேரியை விட்டு வெளியேற ஆயத்தமான சமயம் நாயக்கர் சைன்யம் வந்து நிலைமையை சமாளித்தது. மூன்ரும் முறையாக பைரவன் பெரும் சைன்யத்தோடு சிருங்கேரியைக் கொள்ளே யடிக்க வந்தான். தனது தபோ பலத்தைத் தவிர வேறு உதவியில்லாத ஆசார்யாள் தியான சமாதியில் அமர்ந்து விட்டார்கள். அந்நிலேயில் அவர்களுக்கு ஓர் தோற்றம் உண்டாகியது. அதில் சிருங்கேரியின் அதி தேவதைகள் அனைவரும் ஆயுதம் தாங்கிப் படையெடுக்க வந்தவனே எதிர்ப்பதுபோலத் தோன்றியது. சமாதி கலேந்து எழுந்த போது பைரவன் தன் சைன்யத்தோடு வெளியேறிவிட்ட தாக அறிந்தார்கள். இந்த ஆசார்யாள் "ராமசந்த்ர மஹோதயம்" "குரு சதகம்" "மீனுக்ஷி சதகம்" என்ற கிரந்தங்களே திருவாய் மலர்ந்தருளினுர்கள். பின் இரண்

டிற்கும் தக்க பண்டிதர்களைக்கொண்டு வியாக்யானம் எழுதும்படி செய்தார்.

**வீரபத்திர நாயக்கரும் (1629–1645) சிருங்கேரியும்:–** 1630ம் ஆண்டில் வீரபத்திர நாயக்கர் ஆசார்யாளின், விருந்தினராக சிருங்கேரிக்கு வந்திருந்தபொழுது இதற்கு முன் வழங்கப்பட்ட 'சாவடி செட்டிக்கொப்பா' தான சாஸனத்தை ஸ்திரப்படுத்தியதோடல்லாமல், ஓர் அன்ன சத்திரத்துக்கு மானிபம் விட்டும், நகர் தாலூகா கோருகுடே கிராமத்தையும் ஜாரி செய்தான். தீர்த்தஹள்ளி சுவாமிகள் தனக்கு உரிமையில்லாத சில விருதுகளை அணிந்து கொண்டதை ஆசார்யாள் நாயக்கருக்கு அறிவித்தபோது அவன் தீர்த்தஹள்ளி சுவாமிகளைக் கண்டித்து அத்தகைய விருதுகளை உடனே கைவிடும்படி தாக்கீது அனுப்பினுன். மேலும் இனிமேல் தன்னிடம் கேட்காமலே சிருங்கேரி ஆசார்யாள் ஏனைய சந்நியாஸிகளைக் கண்டிக்க அதிகாரம் அளித்துக்கடிதமும் எழுதினுன். கூடலி ஸ்வாமிகளின் தூண்டுதலின் பேரில் பீஜாபூர் அதிகாரிகள் ஹரக்கரை மண்டலி ஆகிய கிராமங்களை கூடலி மடத்துக்குச் சேர்த்தார்கள். அந்த அதிகாரிகளாகிய கோதாயிசமல்கான் அதாம் அப்ஸல்கான், கான் அலிஷா இவர்களுக்கு வீரபத்ர நாயக்கர் எழுதியதின் நிமித்தம் சிருங்கேரிக்கு உரிய கிராமங்கள் கிடைத்தன.

**சிவப்ப நாயக்கரின் (1645–1660) சேவைகள்:—**

இவ்வரசர் சிருங்கேரி மடத்துச் சொத்துக்களை ஆக்கிரமித்தவர் பேரிலும் தீர்வை செலுத்தாதவர்பேரிலும் கண்டிப்பான நடவடிக்கைகள் எடுத்துக்கொண்டார். தமது சிப்பந்திகளுக்கு தாக்கீதுகள் அனுப்பி வித்யாரண்ய புரத்து சதாசிவர் ஆலயத்தை சீக்கிரம் கட்டி முடிக்கும்படி உத்தரவிட்டார். திருமலே பட்டர் என்பவருக்கு அவர் செய்த ஆலயப் பணக்கையாடல்களையும், கிராமத்தை சுகாதார முறைப்படி வைத்துக்கொள்ளத் தவறியது பற்றியும், பழய சாஸனங்களையும் தஸ்தாவேசுகளையும்

புதுப்பித்து எழுதாமல் இருப்பதையும் சுட்டிக்காட்டி கடுமையாக எச்சரித்து ஓர் கடிதம் எழுதினார். வாரீசு அற்றுப் போன மூன்று வ்ருத்தி மானியங்களை சிறந்த பண்டிதர்களுக்குக் கொடுக்க ஏற்பாடு செய்தார். அவர்களில் ஒருவர் மதுரைச் சீமையைச் சேர்ந்த [1] தாடிப்புத்தூர் என்ற ஊரைச் சேர்ந்த காளஹஸ்தி சாஸ்திரி என்பவர். சிருங்கேரியை விட்டு உத்தரவின்றி வெளியேறி கார்க்களாவுக்குச் சென்ற சிருங்கேரி குடிகளைத் திரும்ப சிருங்கேரிக்கு அனுப்பிவைக்க ஏற்பாடு செய்தார். ஹொாளேஹொன்னூர் முதலிய இதர மாவட்டங்களிலிருந்து நூற்றி இருபத்தி இரண்டு வராகன்களுக்குமேல் வருமானம் வரும் நிலங்களை மடத்துக்கு ஜாரி செய்தார். நரஸிம்ஹ யோகி என்ற சிருங்கேரி மடத்து சிஷ்யர் ஒருவர் ஆசார்யாளிடம் கௌரவக் குறைவாக நடந்ததைக் கண்டித்து, அவர் வசம் இருந்த நிலங்களைக் கைப்பற்றி சிருங்கேரிக்கு அளித்துவிட்டார்.

ஆசார்யாளும் அணைகள் கட்டியும், புதுப்பித்தும் நீர்ப்பாசனங்களை அபிவிருத்தி செய்தும், பாக்குமர சாகுபடி நிலங்களை விஸ்தரித்தார். சிருங்கேரிமடம் 1346ல் சமஸ்தானமாக ஆனதிலிருந்து, அதன் கீழ் வ்ருத்தி மானியங்களை அனுபவித்து வந்த பிராம்மணர்கள் ஐம்பது [2] கண்டகம் வீதம் நெல் வசூலித்து வந்தனர். அந்நிலங்களை சாகுபடி செய்து வந்த குத்தகைக்காரர்கள் உத்தரவின்றி தம் சொந்த லாபத்துக்கு பாக்குமரங்களை வளர்க்க ஆரம்பித்த காரணத்தால் வ்ருத்திமானிய இனாம்தார்களுக்குக் கொடுபடவேண்டிய நெல் குறைய ஆரம்பித்தது. ஆசார்யாளின் ஸ்ரீ முகத்தின் பேரில் சிவப்ப நாயக்கர் நிலங்களை அளந்து சர்வே செய்தார். சமஸ்தானத்துக்குச் சேர வேண்டிய பேரீஜ் தொகையும் புனரமைப்புப் பெற்றது.

---

1 தாடிப்புத்தூர் என்பது தற்காலத்தில் தாடிக்கொம்பு என்ற ஊர்

2. கண்டகம் என்பது நான்கு மரக்காலுக்குக் கொஞ்சம் கூடுதலான அளவு.

சிருங்கேரிக்குச் சேரவேண்டிய பேரீஜ் (தீர்வை) ஆயிரத்து இருநூறு வராகன்கள் என்று நிர்ணயிக்கப்பட்டது அதோடு ஒவ்வொரு இனும்தாரும் செலுத்தவேண்டியது, பெற வேண்டியது இவ்வளவு என்று நிர்ணயம் செய்யப்பட்டது இனும்தார்கள் ஒவ்வொரு தோப்பு நிலங்கள், நஞ்சை நிலங்களிலிருந்து அடையவேண்டியது நாற்பது கண்டகம் நெல் என்று முடிவு செய்யப்பட்டது 1653-54ல் செய்யப்பட்ட இந்தத்திட்ட (Settlement)ப்படி ஒவ்வொரு இனும்தாருடைய உரிமை கடமைகளைநிர்ணயித்து சமஸ் தானமே தீர்வைகளை நேரடியாக வசூல் செய்துகொள்ள அதிகாரம் வழங்கப்பட்டது.

**இரண்டாம் பத்ரப்ப நாயக்கர் : (1662-1664)** வாரீசு இல்லாமல் முன்பு சர்க்காருக்குச்சேர்க்கப்பட்ட கரஹெள்ளி, கவத்துரு என்ற கிராமங்களை பத்ரப்பநாயக்கர் சமஸ் தானத்துக்கே கொடுத்தார். இது 1662ம் ஆண்டில். இந்த இரண்டு கிராமங்களின் வருமானம் சுமார் நானூற்று அறுபது வராகன்கள்.

**ஏனைய சிற்றரசர்கள் செய்த தானங்கள் : 1625-26ல்** தரிக்கரே ஹனுமப்ப நாயக்கர் என்பவர் தேவப்பூர், தண்டூர் என்ற கிராமங்களை சர்வமான்யமாக சமஸ்தானத்துக்கு அளித்தார். மைசூர் அரசர் கண்டீரவ நரஸராஜ உடையார் ஆசார்யாளுக்கு விலையுயர்ந்த ரத்னங்களாலான படிவங்களை அளித்தர்.

1640ம் ஆண்டில் பீஜாபூர் தளபதி ரணத வுல்லாகான் மைசூர் வரை படையெடுத்து வந்து வழியில் தரிக்கரையைப் பிடித்துக்கொண்டான். சிவாஜியின் தகப்பனார் ஷாஜி அந்த சைன்னியத்தில் உபதளபதியாக விருந்தார். ஆசார் யாளின் ஸ்ரீ முகத்துக்கு மதிப்புக்கொடுத்து ரணத் வுல்லா கான் ஓர் சன்னது வழங்கினான் அதில் "பிரசித்தி பெற்ற பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய ஸ்ரீ சச்சிதானந்த பாரதீ சுவாமிகளின் பாதங்களுக்கு சலாம்" என்று ஆரம்பித்து. தன்னுடைய சிப்பந்தி உத்தியோகஸ்தர்

களுக்கு ஷிமோகா சீமையில் மடத்துக்குச் சொந்தமான கிராமங்கள் பிறர் ஆக்ரமிப்பில் இருந்தால் அவற்றை உடனே சமஸ்தானத்துக்குத் திருப்பிக் கொடுத்துவிட ஏற்பாடு செய்யவேண்டும் என்றும், இனிமேல் சிருங்கேரி ஸ்வாமிகளுடைய கட்டளைகளுக்குக் கீழ்ப்படியவேண்டும் என்றும் எழுதி முடிவில் இன்னும் தேவையானபோது வேண்டிய உதவி செய்வதாகவும் தெரிவித்திருந்தான்.

ஸ்ரீமலஹாநிகரேச்வரர் ஆலயத்தில் ஸ்ரீ பவானி பிரதிஷ்டை:—பீஜப்பூர் படையெடுப்புக்குப் பின் சிவப்ப நாயக்கர் தன்னுடைய தலைநகரை பெத்நூர் என்ற இடத்துக்கு மாற்றியிருந்தார். ஸ்ரீமதாசார்யாள் பெத்நூர் சென்று திரும்பிய உடன் மலஹாநிகரேச்வரர் ஆலயத்தில் ஸ்ரீ பவானி தேவியைப் பிரதிஷ்டை செய்து, நித்ய நைமித்திக உத்ஸவாதிகளுக்கும் ரதோத்ஸவத்துக்கும் தகுந்த ஏற்பாடுகள் செய்தார்கள். "ஸ்ரீ சச்சிதானந்த மஹா யோகீந்திரரின் பாத கமலங்களை வழிபட்ட முள்வாயி (தீர்த்தஹள்ளி தாலூகா) மடாதிபதி கிருஷ்ணானந்த சரஸ்வதி என்பவருக்கு 1660ல் ஸ்ரீரங்கராயரால் சூாபுரம் கிராமம் தானம் செய்யப்பட்டிருந்தது. ஸ்ரீரங்கராயர் பேலூரில் இருந்தபோது இது செய்யப்பட்டது. அந்த கிராமம் இப்பால் சிருங்கேரிமடத்தின் ஸ்வாதீனத்துக்கு வந்தது என்ற விவரத்தை ஈண்டு கூறுகிறோம்.

## 26. ஸ்ரீ ஐந்தாம் ந்ருஸிம்ஹ பாரதீ ஆசார்யாள்
(ஆட்சி 1663—1705)

சோமசேகர நாயக்கர் (1664 — 1675):— இவர் முன்னூறு வராகன் வருமானம் வரக்கூடிய ஏறஹள்ளி கிராமத்தை ஸ்ரீ சந்திரமௌளீச்வரர் வழிபாட்டுக்காக தானம் செய்து ஸ்திரப்படுத்தினான். இந்த நிலங்களின் நான்குமால் அளந்து நிர்ணயம் செய்யப்பட்டது. மேலும் முன்னூறு வராகன்களை மலஹாநிகரேச்வரர் ஆலயத்தை ஜீர்ணோத்தாரணம் செய்ய வழங்கினான்.

ராணி சன்னம்மகாரு (1671 — 1696):— ராணி சன்னம்மகாருவின் அழைப்பிற்கிணங்கி ஆசார்யாள் பேலூருக்கு விஜயம் செய்தார்கள். அவளுடைய மந்திரி கிக்காவிலிருக்கும் ஸ்ரீ ச்ருங்கேச்வர ஆலயத்துக்கு ஓர் உத்ஸவ விக்ரஹம் செய்தளித்தார். முக்கர்நாடு பிரதேசத்திலிருந்த சர்வ மான்ய நிலங்களுக்கு தீர்வை வசூலிப்பதை யறிந்த ராணி அதை ரத்து செய்து உத்தரவு பிறப்பித்தாள். மடத்தின் உபயோகத்துக்குக் கொண்டுவரப்படும் பொருள்கள் மீது சுங்க வரி வசூலிக்கக் கூடாது என்று தனது உத்தியோகஸ்தர்களுக்குக் கட்டளைகள் அனுப்பி வைத்தாள்.

முதலாம் பசவப்பா (1696 — 1714):— ராணி சன்னம்மகாருவுக்குப் பின் அரசாண்ட முதலாம் பசவப்பா 1697ல் தன்னுடைய கீழ் உத்யோகஸ்தர்களுக்கு நிருபங்கள் எழுதியனுப்பி, பரக்கூர் சீமை, அரவட்ட அக்கிரகார சீமை, கும்பள சீமை, பட்டகல பக்கவாடி, கேரோஸோப்பா, சீரளி, சந்தவர, காரகலா, பஸ்ரூரு, சங்கர நாராயணம், பேலட்டங்காடி, மொகரநாடு, கஜநூரு, கௌதி, தானிவாசம், கண்டியம், கரஜே, கோனிபீடு, ஐவங்கே இந்த இடங்களில் ஆசார விசாரணையிலும், தீர்வை வசூலிலும், சிருங்கேரி உத்யோகஸ்தர்களுக்கு வேண்டிய உதவி யளிக்கும்படி உத்தரவுகள் பிறப்பிவித்தார்.

யேலஹங்காவில் குரு நிலமன்னனுக இருந்த மும்மடி தொட்ட வீரப்ப கௌடர் என்பவர் சிகேகுப்பே என்ற கிராமத்தை சிருங்கேரி மடத்துக்கு தானம் செய்தார்.

1686ம் ஆண்டில் ஏற்பட்ட அக்ஷய வருஷத்திய கொடும் பஞ்சத்தில் ஆயிரக்கணக்கான மக்களுக்கு ஆசார்யாள் அன்னதானம் வழங்கினர்கள். தமது குருவின் பெயரால் சச்சிதானந்தபுரம் என்ற ஓர் அக்கிரஹாரம் நிறுவி ஆங்கு சச்சிதானந்தேச்வரர் என்ற ஓர் லிங்க பிரதிஷ்டையும் செய்தார்கள். ஸ்ரீ சாரதா தேவி ஆலயத்தில் ஓர் சித்ர கூடம் அமைத்து அம்மண்டபத்தில் ஓவியங்களை தீட்டச்

செய்தார்கள். அவர்கள் தமது சஞ்சாரத்தின்போது கொல்லூர் சென்று பிரசித்திபெற்ற ஸ்ரீ மூகாம்பிகையை தரிசித்து வழிபட்டார்கள். அதோடு கோகர்ணம் கோடீச்வரம் என்ற க்ஷேத்ரங்களுக்கும் விஜயம் செய்தார்கள்.

## 27. இரண்டாம் ஸ்ரீ சச்சிதானந்த பாரதீ ஆசார்யாள்
(ஆட்சி 1705—1741)

ஸ்ரீ சச்சிதானந்த பாரதீ ஆசார்யாள் பசவப்பாவின் தலைநகருக்கு விஜயம் செய்து அவனைக் கௌரவித்தார். அப்புறம் கிக்கா சென்றார். அதன்பின் சுப்ரமண்யபுரம் சென்றார். அங்கு மத்வ சமயத்தவர் ஆசார்யாள் ஊர்வலம் வருவதைக் கடுமையாக ஆக்ஷேபித்தனர். ஆயினும் ஆசார்யாளின் சிஷ்யர்கள் ஊர்வலத்தைச் சிறப்பாக நடத்தினர். வேலபுரத்து நாயகர் அழைப்பின்பேரில் அங்கு சென்றார். தற்காலத்தில் ஹலெநெங்கி என்றழைக்கப் படும் நேரங்கியின் பல்லாலச் சிற்றரசன் ஆசார்யாளைத் தகுந்த மரியாதைகளுடன் வரவேற்று உபசரித்தான். ஓர் சிற்றரசனின் தலைநகரான நந்தாவரத்துக்கு உப்பினங்காடி என்ற ஊர் வழியாக எழுந்தருளினார். மஞ்ஜேச்வரர் ஆலயம் சென்று வழிபட்டுவிட்டுப் பின் சௌட குறுநில மன்னர்களாலும் ஹெப்ரீ பல்லால சிற்றரசராலும் அவரவர் களின் தலைநகரங்களில் சிறந்த முறையில் உபசரிக்கப் பட்டார். அப்பால் ஹாலாடியிலுள்ள தமது மடத்தில் சிலநாள் தங்கி அங்கு பிரதிஷ்டை செய்யப்பட்டிருந்த ஸ்ரீ ந்ருஸிம்ஹ மூர்த்தியை தரிசித்து வழிபட்டார். அங்கிருந்து புறப்பட்டு கோடீச்வரம், பரகூரம், பட்கலம், ஹோநாவரம், கோகர்ணம் முதலிய இடங்களுக்கு விஜயம் செய்தார்.

ஓர் கடற்கொள்ளைத் தலைவன் (ஜஞ்சீராவின் தலைவன் ஸித்தி) கோகர்ண மடத்தைக் கொள்ளையடிக்க எண்ணங் கொண்டுவந்தான். ஆனால் ஆசார்யாள் அதற்கு முன்பே கோகர்ணத்தை விட்டுப்போய் விட்டதையறிந்து ஏமாற்றங் கொண்டான். அதற்கு பதிலாய் கோகர்ணவாசிகளைக்

கொள்ளையடித்தான். ஆசார்யாள் தமது சஞ்சாரத்தைத் தொடர்ந்து சங்கமம் சென்று அங்கிருந்து பெங்கிபுரம் அடைந்தார். ஆங்கு அவ்வூர் அதிபனை ஹனுமன் என்பவனால் உபசரிக்கப்பட்டார். தரிக்கரே சிற்றரசனை பட்டாபிராமன் என்பான் ஆசார்யாளை அழைத்து மரியாதைகள் செய்து மடத்து முரசுகளைச்சுமக்க ஓர் யானை யும் பெரும் பணமுடிப்பும் வழங்கினன். ஆசார்யாள் இங்கு தங்கியபோது சீராவின் நிர்வாகத்தை வகித்த மொகலாய தளகர்த்தன் ஒருவன் ஆசார்யாளை வந்து தரிசித்து விலை உயர்ந்த சன்மானங்களை சமர்ப்பித்தான்.

பின்பு ஆசார்யாள் சிருங்கேரிக்குத் திரும்பி வந்து சில நாள் தங்கி விட்டு மறுபடியும் கோகர்ணத்துக்கு யாத்திரை கிளம்பினர். திரும்பும் வழியில் பிலிகே, பனவாசிச் சிற்றரசர்களால் கௌரவிக்கப்பட்டார். சோம சேகர நாயக்கரின் வேண்டுகோளுக்கு இணங்கி இக்கேரி, ஸாகர், தீர்த்த ஹள்ளி வழியாக பெத்நூர் சென்று சிலகாலம் தங்கி சிருங்கேரி வந்து சேர்ந்தார்.

## இரண்டாவது சோமசேகரரும் (1714-34) இரண்டாவது பசவப்பாவும்

ஸ்ரீ சிருங்கேரிக்கு இருந்த கடன்களை இரண்டாவது ஸோமசேகரன் தீர்த்து வைத்தான். இவர் சிருங்கேரிக்குச் சொந்தமானதும் வெகு தூரத்திலுள்ளவைகளுமான கிராமங் களிலும் மடத்தின் அதிகாரம் செயல் படும்படியான ஏற்பாடுகளைச் செய்து உதவினர். சில தீர்வைகளை வஜா செய்தார். சிருங்கேரி ஆலயங்களில் தீபம் ஏற்றுவதற்காக ஓர் தான சாஸனம் செய்தார். இரண்டாவது பசவப்பா சிருங்கேரிக்கு வந்து ஆசார்யாளை தரிசனம் செய்துவிட்டுத் திரும்பினன். அரசன் தலைநகருக்குத் திரும்பியதும் அவனுடைய வீர சைவசமய நெறிப்பற்றுதலுள்ள மந்திரி சிருங்கேரியிலேயே இரண்டு வீரசைவ மடங்களை நிறுவினன். இதனல் மன வருத்தமடைந்த ஆசார்யாள் சஞ்சாரம் செய்யக் கிளம்பி விட்டார் உடுப்பியில் மத்வ மடாதிபர்கள்

ஆசார்யாளுக்கு வரவேற்பளித்து உபசரித்தனர். பின்பு ஹாலாடியிலுள்ள தமது மடத்துக்குச் சென்று அங்கே தங்கி விட்டார். அது சமயம் கர்னுடக சீமையில் யுத்த சன்னத்தனுக இருந்த பீஷ்வாபாஜிராவ் சிருங்கேரியிலிருக்கும் வீரசைவ மடங்களை உடனே அப்புறப்படுத்தும்படி பசவப்பாவுக்கு தூது அனுப்பினுன் இதுபோலவே இதர கர்னுடகச் சீமைச் சிற்றரசர்களுக்கும் தாக்கீது அனுப்பி ஆசார்யாள் திரும்ப சிருங்கேரி வரும்படியான ஏற்பாடுகள் செய்யவேண்டுமென்று வற்புறுத்தினுன். அதன்படியே பசவப்பா அந்த இரண்டு வீரசைவ மடங்களையும் அப்புறப் படுத்தினுன். அதன் பின்பே ஆசார்யாள் சிருங்கேரிக்குத் திரும்ப வந்தார்கள்.

### இதர கர்னுடக அரசர்களின் காணிக்கைகள் :—

ஸாந்தே பென்னூர் ஹனுமப்ப நாயக்கர் என்பவன் 1720ல் தண்டுந, தானபுரம் என்ற இரண்டு கிராமங்களைத் திருப்பி அளித்தார். மைசூர் கிருஷ்ணராஜ உடையார் ii ஸ்ரீரங்கப்பட்டணத்திலிருந்து யானைகளையும், பட்டு வஸ்திரங்களையும் மற்றும் பல் வேறு சன்மானங்களையும் தனது காணிக்கையாக அனுப்பிவைத்தார். இந்த அரசர் ஆசார்யாளை "சிருங்கபுரத்தின் மணியாசனத்தில் வீற்றிருக்கும் யோகீந்திரர்" என்று வர்ணித்திருக்கிறுர். அவருடைய பேலூர் உத்தியோகஸ்தர்களும் பல காணிக்கைகளை வழங்கினர்.

### மராட்டிய அரசவம்சத்தினரும் சிருங்கேரியும் :

இந்த ஆசார்யாள் காலத்தில் தான் முதன் முதலாக ஸ்ரீ சிருங்கேரி சமஸ்தானத்துக்கும், மராட்டிய அரச குடும்பத்தினருக்கும் தொடர்பு உண்டாயது. இராஜா ராமனின் குமாரர் இரண்டாவது சிவாஜி ஆசார்யாளுக்கு விலையுயர்ந்த சன்மானங்கள் வழங்கினுர். 1738–39ல் கோலாப்பூர் சம்பு சத்ரபதி வருஷத்துக்கு இருநூறு பணம் வருமானம் கொடுக்கும்படியான நிலங்களை தானம் செய்தார். பீஷ்வா

பாஜிராவுக்கு மடத்தின்மீது இருந்த அக்கரையை முன்பே கூறியாகிவிட்டது. 1739-40ம் ஆண்டில் பாஜிராவ் பல்லாள் பிரதான் சிருங்கேரி மடத்துக்கு சமய, சமுதாய விசேஷங்களில் முதல் மரியாதை (அக்ர பூஜை) கொடுக்கப் படவேண்டுமென்று உத்தரவு பிறப்பிவித்தான்.

கௌதி நாயக்கர்களின் குலதெய்வங்களான கொல்லூர் மூகாம்பிகைபேரிலும், கோகர்ணம் ஸ்ரீ மஹா பலேச்வரர் பேரிலும், ஆசார்யாளுக்கு விசேஷ பக்தி யிருந்துவந்தது. ஆசார்யாள் திருவாய் மலர்ந்தருளிய புஜங்க பாணியில் அமைந்த மூகாம்பிகை ஸ்தோத்திரமும், நவராத்ரி உத்சவத்தை நினைவூட்டும் ஸ்ரீ சாரதா ஸ்தோத்திரமும் இரண்டு காவ்யமணிகள் என்னலாம். சிருங்கேரி ஆலயங்களில் பெருஞ் செலவிலும் விரிந்த முறையிலும் உத்சவங்களை நடத்தினர்கள். அவற்றிற்கு ஏனைய அரசர்களோடு இராமநாதபுரம் சேதுபதியும் காணிக்கைகள் செலுத்தினர். இராமேச்வரத்தில் "வித்யாசங்கரர்" என்ற திருநாமமுடைய ஓர் லிங்க மூர்த்தியை ஸ்தாபிதம் செய்தார்கள்.

1739ம் ஆண்டில் ஆசார்யாள் பசவப்பாவுக்கு எழுதிய கடிதம் ஒன்றில் தனது உடல் நலம் குன்றியிருப்பதாகவும் தமக்கு ஓர் தகுதியுள்ள வாரீசு நியமிக்க விரும்புவதாயும் எழுதியிருந்தார்கள்.

இதுவரை பரிசீலித்த இந்த சகாப்தத்தில் பொதுவாய் பல நஷ்டங்கள் ஏற்பட்ட போதிலும், கௌதி நாயக்கர்கள் உதவியாலும் கர்னடக அரசர்கள் உதவியாலும் சிருங்கேரி சமஸ்தானம் பலப்படுத்தப்பட்டதென்றே கூறலாம். நிலங்களை அளந்து தீர்வைகளை நிர்ணயம் செய்த திட்டங்களாலும் (Settlement) நீர்பாசனங்களை சீர்படுத்தி விரிவு படுத்தியதாலும், புதுவல் சாகுபடிகளாலும், அரசர்கள் அவ்வப்போது வழங்கின சன்மானங்களாலும், சமஸ்தானம் முதலில் அடைந்த நஷ்டங்கள் ஈடுபடுத்தப்பட்டன. இவ்வாறு கிடைத்த வருமானங்களை தர்ம கைங்கர்யங்களிலும், ஆலய சேவைகளிலும், பண்டிதர்களுக்குப் பரிசு

அளிப்பதிலும் ஆசார்யாள் செலவு செய்தார்கள். மொகலாய, மாராட்டிய அரசர்களும், தளகர்த்தர்களும், பிரதேச சிற்றரசர்களும் ஆசார்யாளின் கல்வி அறிவுக்கும், தலை சிறந்த ஆன்மீய வாழ்க்கைக்கும் மதிப்புக்கொடுத்து அவர்களை சௌரவிக்க போட்டி போட்டுக்கொண்டு முன் வந்தனர்.

சிருங்கேரி தர்ம மணி ஆசனத்தின் அருளாட்சியில் யாவரும் பலன் அடைந்தனர். மடத்துக்கு வந்த பண்டிதர்கள் சிறப்பாக சன்மானிக்கப்பட்டனர். ஆசார்யர்களின் பாண்டித்தியமும் ஆசார சீலம் நிறைந்த ஆன்மீய வாழ்க்கையும் அவர்கள் செய்த உபதேசங்களும் அக்காலத்தில் நிலவி வந்த பல்வேறு சமய வகுப்பு வாதப் பூசல்களை சமனப்படுத்தின. வம்சபரம்பரையாய் சைவர்களாயிருந்த கௌதி நாயக்கர்கள் அத்வைதக் கொள்கைகளை ஏற்றுக்கொண்டனர். முதலாம் வேங்கிடப்ப நாயக்கருக்கு ஆசார்யாள் "வைதிக-அத்வைத-சித்தாந்த பிரதிஷ்டாபகர்" என்ற பட்டத்தை வழங்கினார்கள்.

ராணி சன்னமகாரு தனது குமாரர் பசவப்பாவுக்குக் கூறிய அறிவுரை சிருங்கேரி ஆசார்யாளின் செல்வாக்கை மிகத் தெளிவாய் எடுத்துக் காட்டுகின்றது. சன்னமகாரு தன் தனயனுக்குச் செய்த உபதேசம்:—"அதர்ம வழிகளில் செல்லாதே. பாபச் செயல்களை தவிர். சீரிய செயல்களைச் செய். கடவுளின் பாதாரவிந்தங்களை தியானம் பண்ணு. உன்னிடம் சரணடைந்தோருக்குக் கருணை காட்டு. அவர்களைக் காப்பாற்று. பிறரை இகழாதே. தன்னடக்கமாயிருக்க முயல். பிறப்பு இறப்பு என்னும் சம்சாரச் சுழலில் சிக்கவைக்கும் காமம் போன்ற அநாத்ம வ்ருத்திகளுக்கு இடம் கொடாதே. துக்கத்தில் மனதைத் தளரவிடாதே. சுகத்தில் பெருமகிழ்ச்சியடையாதே. தர்மத்தின் அடிப்படைக் கொள்கைகளில் மனதை நிறுத்து. அத்வைத உண்மையை உணர்ந்து தேறு. வேத விற்பன்னர்களை சௌரவி. வாழ்க்கை என்பது ஓர் சொப்பனம் என்பதை அறிந்து "நான் யார்" என்ற விசாரத்தில்

ஈடுபடு. நித்யானந்தத்தை அடைய சிவனை வழிபடு.'' என்பது'.

1561ம் ஆண்டில் வடகர்நாடக அரசர் கிருஷ்ணப்ப நாயக்கரின் ஆக்ஞையால் பொறிக்கப்பட்ட இன்னொரு சாஸனத்தில் அத்வைதத்தின் அடிப்படைக்கொள்கைகளும் சிவ விஷ்ணு அபேதமும் அறிவுறுத்தப்படுகின்றன. கீழே சில பாகங்களைக் கொடுக்கின்றோம்:—

"கணபதிக்கும் சம்புவுக்கும் வணக்கம். சிலர் ஹரியன்றி வேறு தெய்வமில்லையென்பர். சிலர் ஹரனன்றி வேறு தெய்வமில்லை என்பர். இந்தப் பூசலைத் தவிர்ப்பதற்காகவே கூடலியில் ஹரியும் ஹரனும் மிகுந்த கருணையுடன் ஒரே உருவமாக ஹரிஹரனாகக் காட்சியளிக்கின்றனர். அவர்கள் நம்மை ரக்ஷிக்கட்டும். மூவுலகங்களுக்கும் முதல்வராயும் சைவ வைஷ்ணவப்பூசல்களுக்கு அப்பாற்பட்டவராகவும் இருக்கும் பரம்பொருளுக்கு வணக்கம்''.

இன்னும் 1571ல் உண்டான இன்னொரு சாஸனத்தைப் பாருங்கள். இராமராஜநாயக்கர் என்பார் தான் சிவத்தோடு ஐக்கியமாவதற்கு உடுப்பியிலுள்ள ஸ்ரீ கிருஷ்ணனுக்கு வழிபாடு நடத்தும்படி த்வைத சித்தாந்த ஆசார்யரும், மகானுமான 'ஸ்ரீ வாதிராஜ தீர்த்தர்' என்பவருக்கு ஓர் தான சாஸனம் செய்திருக்கிறான்.

ஆசார்யர்களுடைய விஜய யாத்திரைகளும், ஆலயங்களில் நடத்தப்பட்ட உத்ஸவாதி வைபவங்களும், சகல வகுப்பினர்களும் ஜகத்குருவை தரிசித்து அவரவர்கள் ஆத்யாத்மிக முன்னேற்றமடைய பெரும் வாய்ப்பை அளித்தன.

இந்த அத்தியாயத்தை முடிக்கு முன் ஓர் கருத்தை நேயர்களின் மனதில் பதியவைக்க விரும்புகின்றோம். அதாவது இந்த அத்தியாயத்திலும் முந்தின இரண்டு அத்தியாயங்களிலும் விவரிக்கப்பட்ட சமஸ்தானத்தின் ஆரம்பம், அதன் விரிவு முதலியன எல்லாம் ஸ்ரீ சாரதா பீடத்திற்கே உரியன என்பதையும் அப்பீடத்தின் சேவை

களுக்காகவே ஏற்பட்டன என்பதையும் நேயர்கள் மறந்து விடக்கூடாது. அதாவது ஆசார்யர்களின் சொந்த பிரயோஜனத்துக்காக அல்ல. சமஸ்தானத்தின் வருமானங்கள் யதிகள், சாதகர்கள், பண்டிதர்கள், ஆலயங்கள், அன்ன சத்திரங்கள் முதலியன போன்ற பல் வேறு தர்மங்களுக்கே செலவிடப்பட்டன.

## எட்டாம் அத்தியாயம்

## நீண்ட சஞ்சார காலம்

### நாடு முழுதும் அருளாட்சி பரவுகிறது.

இந்தக் காலத்தில் கௌதி ராஜ்யம் வீழ்ச்சியுற ஆரம்பித்து முடிவில் ஹைதரலியால் 1763ல் அந்த இராஜ்யமே அழிவுற்றது.

### 28. ஸ்ரீ முதலாம் அபிநவ சச்சிதானந்த பாரதீ ஆசார்யாள்

(ஆட்சி 1741—1767)

### இரண்டாம் பசவப்ப நாயக்கரும் ராணி வீரம்மகாருவும்:-

புது ஆசார்யாள் வியாக்கியான ஸிம்ஹாஸனம் ஏறும் போது பெட்நூரில் இரண்டாவது பசவப்ப நாயக்கர் ஆண்டுகொண்டிருந்தார். அவர் இறந்தபின் சன்ன பசவப்ப நாயக்கர் பட்டத்துக்கு வந்து இரண்டாண்டுகள் ஆட்சி நடத்தி இறந்துபோனூர். அவருக்குப் பின் ராணி வீரம்மகாரு பட்டத்துக்கு வந்தாள். அவள் ஆசார்யாளை தனது தலைநகருக்கு அழைத்து உபசரித்து ஓர் ஸ்படிக லிங்கத்தையும் முந்நூறு வராகன் மதிப்புள்ள மாணிக்கக் கல்கள் இழைத்த ஓர் கிருஷ்ண விக்ரஹத்தையும் கொடுத்தாள்.

### இரண்டாம் கிருஷ்ணராஜ உடையார் (1734–1766)

அந்தக்காலத்தில் மைசூர் சீமையில் ஸ்ரீரங்க பட்டணத்தைத் தனது தலைநகராகக்கொண்டு இரண்டாம் கிருஷ்ண

ராஜ உடையார் அரசாண்டு வந்தார். அவர் ஆசார்யாளை தனது தலைநகருக்கு வரும்படி விரும்பி அழைத்தார். தன் நாட்டில் வானம் பொய்த்து மழையில்லாமல் போனதால், ஆசார்யாள் வரவால் மழை பொழிந்து சுபிக்ஷம் ஏற்படும் என்று அரசர் கருதினர். அவர் ஆயிரத்து இருநூறு வராகன் மதிப்புள்ள பெலவாடியையும் அதன் சுற்றுப்புற கிராமங்களையும் தானமாகக்கொடுத்தார். ஆசார்யாள் இராமேச்வர யாத்திரை போகும்போது அவர்களுக்குப் பாதுகாப்புக்குக் காவலர்களை அனுப்பும்படி தனது உத்தியோகஸ்தர்களுக்கு உத்தரவு பிறப்பிவித்தார். சிருங்கேரி சமஸ்தானத்துக்குச் சேரவேண்டிய தீர்வைகளை வசூல் செய்யவும், சமஸ்தான பிராந்தியங்களில் கலவரம் நடக்காமல் சட்டப்படி அமுல் நடத்தவும், ஆசார விசாரணை நடத்துவதில் சமஸ்தானத்துக்கு வேண்டிய உதவி அளிக்கவும், சர்க்கார் கீழ் உத்தியோகஸ்தர்களுக்கு ஓர் ரஹ்தாரி அனுப்பிவைத்தார். தனி நபர்களால் மானிபம் விடப்பட்ட நிலங்களுக்கும் தீர்வை வஜாச்செய்து இறையிலி மானிபங்களாக்கினர்.

**இதர அரசர்கள்:—** பேலூர் வேங்கிடாத்ரி நாயக்கர் சமஸ்தானத்துக்கு காணிக்கைகள் அனுப்பிவைத்து தனது எல்லையிலுள்ள சமஸ்தான நில அனுபவ சம்பந்தமாகத் தான் தலையிடுவதில்லை என்று உறுதியும் கூறினர். சிருங்கேரியில் ஆண்டுதோறும் நடக்கும் விஜயதசமி விழாவுக்காக முன்னூறு வராகன் பெறுமான கொடலி மண்டே என்ற கிராமத்தை குடகுநாட்டரசர் வீரப்ப உடையார் தானம் செய்தார்.

**நாசிக் யாத்திரை:—** ஜகத்குரு ஸ்வாமிகளுக்கு அக்ர பூஜை சம்பாவனையாக பீஷ்வா மாதவராவ் பல்லாள் பிரதான் வருஷாந்தர மானிபமாக ஓர் சாஸனம் செய்தளித்தான். பீஷ்வாவின் சிறு தகப்பனர் ரகுநாத ராவ் என்பவரின் அழைப்பிற்கிணங்கி ஆசார்யாள் பூனவுக்கு எழுந்தருளினர்கள். அப்பொழுது மைசூர் சீமையை ஆண்ட ஹைதரலி என்ற இஸ்லாமிய அரசர் ஆசார்யாளுக்கு

எழுதிய கடிதத்தில் "தாங்கள் ஓர் தலைசிறந்த மஹான். யாவரும் தங்களை வணங்கி ஆசிபெற விரும்புவது இயல்பே. ரகுநாதராவின் அழைப்பின்பேரில் தாங்கள் பூனா செல்வது பற்றி எனக்கு மட்டற்ற மகிழ்ச்சி" என்று எழுதியுள்ளான். ஆசார்யாளுக்கு இன்னும் பலவிதமாய்ப் புகழுரை கூறி மிக்க மரியாதையுடன் ஆசார்யாளின் பிரயாணத்துக்குக் கூடச் செல்லுமாறு ஒரு யானை, ஐந்து குதிரைகள், ஒரு பல்லக்கு, ஐந்து ஒட்டகங்கள், தங்க நாணயங்கள், பட்டு வஸ்திரங்கள், சால்வைகள் இவற்றையும், பிரயாணச் செலவுக்காக பத்தாயிரத்து ஐந்நூறு ரூபாய்களும் அனுப்பி வைத்தான். பூனாவிலிருந்து ஆசார்யாள் நாசிக் க்ஷேத்திரம் சென்றார். அங்கு விதேக முக்தியடைந்தார். பீஷ்வா பாலாஜிபாஜிராவ் கிருஷ்ணா தீரத்தில் தன் முகாமிலிருந்து ஆசார்யாளுக்குக் காணிக்கை அனுப்பினான்.

## 29. ஸ்ரீ ஆறும் ந்ருஸிம்ஹ பாரதீ ஆசார்யாள்
(ஆட்சி 1767—1770)

1766ம் ஆண்டில் பீஷ்வா மாதவராவும், நைஜாம் அலியும் ஹைதரலியோடு போர் தொடுத்தனர். ஓர் சிறு இடைவெளி சாவகாசம் கிடைத்தபோது ஹைதர் தான் இழந்த பிரதேசங்களைத் தன்வசமாக்கிக்கொண்டான். இரகுநாதராவ் என்பவனால் உண்டான உள்நாட்டுக் குழப்பத்தைக் கூட பொருட்படுத்தாமல் பீஷ்வா மறுபடியும் மைசூர் ராஜ்யத்தோடு போர் தொடுத்தான். இரு தரப்பினரும் போரில் அசந்துபோய் 1770ம் ஆண்டில் சமாதானம் செய்துகொண்டார்கள். இத்தியாதி காரணங்களால் ஆறும் ந்ருஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகள் சிருங்கேரி மடத்தின் நிர்வாகத்தை வகிக்க இயலவில்லை. இருப்பினும் ஹைதரலி ஆறுதலான செய்தி அனுப்பினான். தன்னுடைய உத்தியோகஸ்தர்கள் சமஸ்தானத்தின் நில நிர்வாகத்துக்கும், தர்ம ஸ்தாபனங்களின் பராமரிப்புக்கும் தகுந்த உதவி செய்வார்கள் என்று எழுதினான். ஆசார்யாள் நாசிக் க்ஷேத்திரத்திலேயே விதேக முக்தியடைந்தார்கள்.

நாசிக்கில் வசித்த காலம் மடத்துக்கு ஏற்பட்ட கடன்களை பீஷ்வா மாதவராவ் நிவர்த்தி செய்தான்.

சுமார் பத்தாண்டு காலம் நாசிக் க்ஷேத்திரமே சிருங்கேரி ஜகத்குருவின் கேந்திர ஸ்தானமாகத் திகழ்ந்தது. அங்கிருந்தே தர்மோபதேசங்களும் செய்து வந்தார்கள். 1761ம் ஆண்டு முதல் 1772ம் ஆண்டு வரை மாதவராவ் சிருங்கேரிக்குக் கொடுக்கும் சர்ககார் உதவியை சிறிது சிறிதாக உயர்த்தி இருநூறு ரூபாயிலிருந்து ஆயிரத்து ஐந்நூறு ரூபாய்களாக்கினன்.

## 30. ஸ்ரீ மூன்ரும் ஸச்சிதானந்த பாரதீ ஆசார்யாள் ஆட்சி 1770 — 1814

1780ம் ஆண்டில் ஹைதரலி தனது உத்யோகஸ்தர்களுக்கு சிருங்கேரி மடத்துக்குவேண்டிய உதவி செய்யும்படி உத்திரவு அனுப்பியதன் மூலம் தனக்குப்புது ஆசார்யாளின் மீதிருந்த பக்தி விநயத்தைக் காட்டிக்கொண்டான்.

திப்பு சுல்தான்:—ஹைதரலிக்குப் பின் திப்பு சுல்தான் மைசூர் சிம்மாசனம் ஏறினன். அவன் மராட்டியர்கள், நைஜாம், ஆங்கிலேயர்கள் ஆகிய மூவரின் தாக்குதல்களுக்கு ஆளானன். இதுதான் மூன்ருவது மைசூர் யுத்தம் (1790—1792) அச்சமயத்தில் பரசுராம் பாவே என்பவன் பெத்நூர் மீது படை எடுத்தான். அவனுடைய சைன்யங்கள் பட்டவர்த்தன் தலைமையில் மூடத்தனமாக சிருங்கேரியைக் கொள்ளையடித்தது. ஆலயங்களைக் கொள்ளையிட்டது புனிதமான ஸ்ரீ சாரதா தேவியின் ஆலயத்திலும் புகுந்து சீர்குலைத்தது. இந்தக் கொள்ளையில் பறிபோன சொத்துக்கள் அறுபது லக்ஷம் மதிப்புள்ளவை. பிராம்மண புரோகிதர்கள் கொல்லப்பட்டனர். ஆசார்யாளுக்கு நேர்ந்த இந்த துர்பாக்கியத்துக்கு வருந்தி திப்பு சுல்தான் ஓர் ஆறுதல் கடிதம் அனுப்பினன். அதில் 'புண்ய ஸ்தலங்களுக்கு ஊறு செய்யும் துஷ்டர்கள், விரைவில் தங்களுடைய அக்கிரமத்தின் பயனை அனுபவிப்பார்கள். சிரித்துக்கொண்டு பாபம் செய்கின்றவன் பொறுக்க

முடியாத சித்திர வதைக்கு உள்ளாவான் என்ற முதுரை பொய்க்காது. குருவுக்குச் செய்யும் அபசாரம், குடும்ப நாசத்தையும், சொத்தின் அழிவையும், இன்னும் சகல முறைகளிலும் நாசத்தையும் உண்டாக்கும்'' என்று எழுதி ஆலயங்களைப் புனருத்தாரணம் செய்வதற்கும், ஸ்ரீ சாரதா தேவி ஆலயத்துக்கு ஸம்புரோக்ஷணம் செய்வதற்கும், நானூறு பொற்காசுகளும் அனுப்பிவைத்தான். அதோடு ஓர் பல்லக்கும், யானைகளும் வஸ்திரங்களும் அனுப்பினான்.

பல சந்தர்ப்பங்களில் திப்பு சுல்தான் ஆசார்யாளுடைய நல்லாசியைக் கோரினான். ஒரு கடிதத்தில் அவன் எழுதியுள்ளது: ''நான் மூன்று துணைகளைத்தான் நம்பியிருக்கிறேன். ஒன்று இறைவனின் இன்னருள். இரண்டு ஆசார்யாளின் நல்லாசி. மூன்று என்னுடைய புஜபலம்''. இன்னொரு சமயம் ஆசார்யாளை சதசண்டி, சஹஸ்ர சண்டி ஜபயக்ஞங்களை நடத்துமாறு பிரார்த்தித்தான். அக்கடிதத்தில் ''நான் என்னுடைய நகர் பிரதிநிதியை, ஆசார்யாள் இந்த மஹா யக்ஞத்தைச் செய்துமுடிப்பதற்குத் தேவையான சகலவிதமான உபகரணங்களையும் கொடுக்கும்படி ஆக்ஞாபித்திருக்கிறேன். நகர்நாட்டு திரயம்பகராவும், கொப்பா அமீல்தாரும் சிருங்கேரியில் முகாம் இருந்து தேவையான பாத்திர பண்டங்களையும், துணி மணிகளையும், படிவங்களையும் கொடுப்பார்கள். என்மீது கிருபை கூர்ந்து மேற்படி யக்ஞங்களை யதோக்தமாய் நடத்திக் கொடுக்கும்படி தலை வணங்கிப் பிரார்த்திக்கிறேன். பிராம்மணர்களுக்கு தாராளமாய்க் கொடுப்பதுடன் தினம் தோறும் ஆயிரக்கணக்கான பிராம்மணர்களுக்கு சந்தர்ப்பணை நடத்தவேணும்.'' யக்ஞங்கள் முடிந்தபின் எழுதிய கடிதத்தில், மேற்படி யக்ஞங்களின் பயனாக தனக்கு வியக்கத்தக்க வெற்றிகள் கிடைத்ததாகவும் தவிர நாட்டில் நல்ல மழை பொழிந்து நிலங்கள் ஏராளமாக மகசூல் கொடுத்திருப்பதாயும் எழுதியுள்ளான்.

1792ல் ஆசார்யாள் தம் மடத்துக்கு ஏற்பட்ட அவல நிலைமையை எடுத்துச் சொல்லிப் பரிகாரம் தேடுவதற்காகப்

பூனு செல்லத் தீர்மானித்தார்கள். அப்பொழுது திப்பு சுல்தான் ஆசார்யாளை ஸ்ரீரங்கபட்டணம் வரும்படி வேண்டிக்கொண்டான். ஆசார்யாளிடமிருந்து வெகுநாள் வரை யாதொரு தகவலும் வராமற்போகவே திப்பு சுல்தான் ஓர் "ரஹதாரி" அனுப்பி ஆசார்யாள் திரும்பிவரச் செலவுக்குப் பணம் அனுப்பிவைத்தான். அப்பொழுது எழுதிய கடிதத்தில் "எங்கெங்கு ஆசார்யாள் போன்ற மஹான்கள் இருக்கின்றார்களோ ஆங்காங்கு சுபிக்ஷம் நிலவும்" என்று தான் நம்புவதாக எழுதியிருக்கிறான். ஆசார்யாள் வெளியூர்களில் சஞ்சாரம் செய்யும் காலங்களில் சிருங்கேரியிலிருக்கும் ஆலயங்களையும், தர்மங்களையும் கண்காணித்து வர நகர் பிரதிநிதிக்கு ஏற்கனவே கட்டளை யிட்டிருந்தான். ஆசார்யாள் சிருங்கேரி வந்தபின் திருப்பதி யாத்திரைக்குக் கிளம்பினார்கள். அப்பொழுதும் ஓர் ரஹதாரியை திப்பு அனுப்பிவைத்தான். திப்பு சிருங் கேரிக்கு யாத்திரை செய்யவேண்டுமென்று ஆசை கொண்டான். ஆனால் அந்த ஆசை நிறைவேறவில்லை. **1791**க்கும் **1798**க்கும் இடையே திப்பு சுல்தான் ஆசார் யாளுக்கு இருபத்தி ஒன்பது கடிதங்கள் எழுதியிருக்கிறான். அவை ஒவ்வொன்றிலும் தனக்கு ஆசார்யாள் மீது இருந்த ஆழ்ந்த பக்தி விச்வாஸத்தை வெளியிட்டிருக்கிறான்.

நைஜாம் அலி:— திப்புவின் விரோதிகள் கூட ஆசார்யாளுடைய ஆசீர்வாதத்தை எதிர்பார்த்தது குறிப்பிடத்தக்கது. ஹைதராபாத் நைஜாம் அலி **1791**ல் சிருங்கேரி ஆசார்யாளுக்கு முன்பிருந்த ஸகல விருதுகளை யும், மரியாதைகளையும் திரும்பவும் முன்பிருந்தபடியே வழங்கும்படி சன்னது பிறப்பிவித்தான். சிருங்கேரி மடத் தின் சிஷ்யர்கள் வாரீசு இல்லாமல் இறந்தால் அவர்களின் சொத்துக்கள் மடத்தில் சேர்க்கப்பட வேண்டுமென்றும் ஆக்ஞாபித்தான். தன்னுடைய உத்யோகஸ்தர்கள் மடத் துக்குச் சேரவேண்டிய தீர்வைகளையும் காணிக்கைகளையும் வசூலிக்க உதவி செய்யவேண்டும் என்று கட்டளையிட்டான். அதோடு ஆசார விஷயமான விசாரணை நடவடிக்கை

களுக்கும் அவர்களுடைய உதவி இருக்கவேண்டும் என்று உத்தரவிட்டான்.

மராட்டிய அரசர்கள் :—1782 — 83ல் ஹிந்துராவ் கோர்படே என்பவர் மடத்துக்கு வருஷம் ஒன்றுக்கு நூறு 'மோயின்கள்' (நாணயங்கள்) கொடுத்துவர ஓர் சாஸனம் செய்துவைத்தார். 1786—87ல் தௌலத்ராவ் ஹிந்துராவ் கோர்பாடே என்பவர் திம்மன்ஹத்தி என்ற கிராமத்தை தான சாஸனம் செய்தார். 1793—94ல் மஹத்ஜி ஸிந்தே பிர்பல்காட் என்ற கிராமத்தை ஜாரிசெய்தார். 1800ல் பீஷ்வா இரண்டாம் பாஜிராவ் சமய சம்மேளனங்களில் ஆசார்யாளுக்கு அக்ர பூஜை வழங்கவேண்டும் என்றும் அவற்றைப் பெற்றுக்கொண்டு போக ஓர் பிரதிநிதியைத் தன் அரண்மனைக்கு அனுப்பவேணுமாய் ஆசார்யாளைக் கேட்டுக்கொண்டான். மேலும் அவன் தன்னை சிருங்கேரி மடத்து சிஷ்யன் என்றும் கூறிக்கொண்டான். 1805ம் வருஷத்திய கிழக்கிந்தியக் கம்பெனியாரின் தஸ்தாவேசு ஒன்றில் பீஷ்வாவைக் குறிப்பிடும்போது "பண்டிட் ப்ரதான் பீஷ்வா பஹதூருக்கு குரு சிருங்கேரி சுவாமிகள்" என்று கண்டிருக்கிறது. 1805ல் கம்பெனியார் ஆசார்யாள் திருப்பதி, காஞ்சி, இராமேச்வரம், திருவனந்தபுரம் முதலிய இடங்களுக்கு யாத்திரை செய்ய அனுகூலமாக 'ரஹதாரி' ஒன்றை வழங்கினார்கள்.

இதர சிற்றரசர்கள் :–1785–6ல் ஜுகலியின் (ஆனேகல் தாலுகா) பசவப்ப நாயக்கர் கோட்டூர் சீமை (பல்லாரி ஜில்லா) யைச் சேர்ந்த காசாபுரம் என்ற கிராமத்தையும் மற்றும் சில கிராமங்களையும்; சந்தேபென்னூர் பசவப்ப நாயக்கர் பசபுரம் என்ற கிராமத்தையும், ஆலய வழிபாட்டுச் செலவுகளுக்காக சிருங்கேரி மடத்துக்கு அளித்தார்கள். சிருங்கேரியில் சுப்ரமண்யேச்வரர் ஆலயம் இக்காலத்தில் தான் கட்டப்பட்டது. மைசூர் சாமராஜ உடையார் ஆசார்யாளுக்குத் தனது விச்வாஸத்தைத் தெரிவித்து யானைகளையும் ஆபரணங்களையும் வழங்கினான்,

ஸ்தானிகர் (Regent) பூர்ணய்யா :–திப்புவின் மரணத்துக்குப் பின் மைசூரின் பரம்பரை வாரீசான கிருஷ்ணராஜ உடையாரிடம் ராஜ்யம் ஒப்படைக்கப்பட்டது. அவர் சிறு வயதாய் இருந்தமையால் திவான் பூர்ணய்யா ஸ்தானிகராக (Regent) நியமிக்கப்பட்டு ராஜ்ய நிர்வாகத்தை நடத்திவந்தார். இவரைப்பற்றி ஓர் சுவாரஸ்யமான விருத்தாந்தம் கூறப்படுகின்றது. பூர்ணய்யா ஓர் மாத்வ பிராம்மணராய் இருந்த காரணத்தால் அத்வைதக்கொள்கைகளில் நம்பிக்கையில்லை அத்வைதிகளேயும் அத்வைத ஆசார்யார்களேயும் வெறுத்தார். சிருங்கேரி ஆசார்யர்கள் நிறைய சொத்துச் சேர்த்துக்கொண்டு சோம்பேறிகளாகக் காலம் கழிப்பதாகக் கருதினார். அவர்களை மட்டந்தட்ட சமயம் பார்த்திருந்தார்.

ஒரு சமயம் ஆசார்யாள் தலைநகருக்கு விஜயம் செய்திருந்தபோது மைசூர் சீமையிலிருந்த தலைசிறந்த பண்டித மேதைகளைத் திரட்டி ஆசார்யாளோடு தர்க்க வாதம் நடத்த ஏற்பாடு செய்தார். ஆசார்யாளும் ஓர் நிபந்தனையின் பேரில் இந்தத் தர்க்க வாதத்துக்கு சம்மதித்தார். தனக்கும் தன்னோடு தர்க்கம் செய்யும் பண்டிதர்களுக்கும் இடையே ஓர் திரை மறைப்புப் போடவேண்டும் என்பதே அந்த நிபந்தனை. அவ்வாறே திரையிடப்பட்டது. சர்ச்சையும் ஆரம்பமாயிற்று. திரைக்குப் பின்னால் இருந்து ஆசார்யாள் பண்டிதர்களின் தர்க்க வாதங்களுக்கு பதில் அளித்துக் கொண்டு வந்தார். தர்க்கம் ஓர் உச்சநிலையை அடைந்தது. அப்பொழுது பூர்ணய்யாவின் செவிகளில் திரைக்குப் பின்னால் இருந்து வரும் குரல் ஓர் பெண்ணின் குரல்போன்று தொனித்தது. தனது ஆவலை அடக்க இயலாதவராய் மெள்ள திரையை விலக்கிப் பார்த்தார். என்ன ஆச்சர்யம்! அங்கு ஸ்ரீ சாரதா தேவியே அமர்ந்து தர்க்கம் செய்து கொண்டிருந்ததையும், அவ்வுருவம் மாறி ஆசார்யாளாக ஆனதையும் கண்டார். உடனே ஆசார்யாளின் பாதங்களில் வீழ்ந்து மன்னிப்புக் கோரினார். அதோடு தன்னால் முடிந்த அளவு ஆசார்யாளுக்கு சேவை செய்வதாயும் உறுதி

கூறினர். அதன்படியே தான் மைசூர் சமஸ்தானத்தின் ஸ்தானிகராக இருந்தபோது மடத்துக்குத் திறம்பட சேவையும் செய்திருக்கிறார். பூர்ணய்யாவால் ஆசார்யாளுக்கு எழுதப்பட்ட முப்பத்தெட்டு கடிதங்கள் தஸ்தாவேசுகளில் காணக்கிடைக்கின்றன. அவை ஒவ்வொன்றிலும் "ஆசார்யாளுக்கு வணக்கத்துடன் விக்ஞாபனம்" (இண்டி பின்ன:) என்று கன்னடத்தில் எழுதி இருக்கின்றார். 1803ம் ஆண்டில் ஏற்பட்ட கொடும் பஞ்சத்தின் போது ஆசார்யாளை விசேஷ ஜபங்களும், அபிஷேகங்களும் நடத்தும்படி வேண்டிக்கொண்டார். மழை பொழிந்து நாடு சுபிக்ஷம் அடைந்தபோது ஸ்தானிகர் பூர்ணய்யா ஆசார்யாளுக்குத் தன் நன்றியைத் தெரிவித்து 'ஆசார்யாள் தாம் செய்த பிரார்த்தனையின் மூலம் ஸ்ரீ மலஹாநிகரேச்வரருடைய திவ்யானுக்ரஹம் கிடைக்கச் செய்ததால் நாடு செழிப்புற்றது' என்றும் எழுதினர். (இக்காலத்திலும் வானம் பொய்த்து மழையில்லாமல் வரட்சி ஏற்படும்போதெல்லாம் ஸ்ரீ மலஹாநிகரேச்வரருக்கு விசேஷ ஜபம், பூஜைகள் நடத்துவதால் மழை பெய்து நாடு செழிப்புறுகிறது என்பது பிரத்யக்ஷம்.)

1805ம் ஆண்டில் ஆசார்யாள் சஞ்சாரம் செய்யப் புறப்பட்டார்கள். அப்போது ஸ்தானிகர் பூர்ணய்யா அதற்கு வேண்டிய சகல ஏற்பாடுகளையும் செய்துகொடுத்தார். சென்னைக்கு ஆசார்யாள் விஜயம் செய்தபோது அக்காலத்து கவர்னர் துரையைச் சந்தித்தார்கள். திருப்பதி, காளஹஸ்தி, காஞ்சி, இராமேச்வரம், திருவனந்தபுரம் உள்ளிட்ட பல க்ஷேத்திரங்களுக்குச் சென்றுவிட்டு ஸ்ரீரங்கபட்டணம் வந்தார்கள். அப்பால் பங்களூர் வழியாக சிருங்கேரிக்குத் திரும்பினர்கள். ஸ்தானிகர் பூர்ணய்யா தனது உத்தியோகஸ்தர்களுக்கு அனுப்பிய கண்டிப்பான உத்தரவுகளில் சிருங்கேரியின் பாத்தியதைகளுக்கும் சலுகைகளுக்கும் யாதொரு குறைவும் ஏற்படக்கூடாது என்று வற்புறுத்தினர். தவறுதலாக நடந்துகொள்ளும் சமஸ்தான ரயத்துகளையும், ஊழியர்களையும் கண்டுபிடித்து

அவர்களைத் தண்டிப்பதற்கு சிருங்கேரிக்கு அனுப்பிவைக்குமாறு கட்டளையிட்டார். கொப்பாவிலிருந்த, அதிகார மமதை பிடித்த ஓர் அமீல்தாரை சிருங்கேரி குடியானவர்கள் விஷயத்தில் தலையிடவேண்டாம் என்றும் உடனே தனது தாலூகாவுக்குத் திரும்பிச் செல்லவேண்டும் என்றும் தாக்கீது அனுப்பினர். ஹைதரலி, திப்பு சுல்தான் காலத்திலேயே, பொன்னைத் திருடும் பிராம்மணர்களையும், மதுபானம் செய்யும் பிராம்மணர்களையும் சமஸ்தான அதிகாரிகள் கண்டுபிடித்து அவர்களுக்கு ஸ்ம்ருதி சாஸ்திர விதிகளின்படி தண்டனை வழங்க அதிகாரம் கொடுக்கப்பட்டிருந்தது. இந்த அதிகாரம் வெகு ஜாக்கிரதையாகப் பாதுகாக்கப்பட்டும் வந்தது.

வேறு எந்த மடத்து சுவாமியும் 'அட்டபல்லகி' யில் செல்லக்கூடாது என்று கண்டிப்பான உத்தரவை ஸ்தானிகர் பூர்ணய்யா பிறப்பித்திருந்தார். ஒரு சமயம் ஹரிஹரபுரம் மடத்து சுவாமி ஒருவரை அட்டப்பல்லகியில் செல்லும்படி தூண்டிய ஹெக்கதிம்மய்யா என்ற பணக்கார வியாபாரியைக் கண்டித்து எச்சரித்து கொப்பா அமீல்தார் மூலம் தாக்கீது அனுப்பினர். தமக்கு உரிமையில்லாத அந்தஸ்தை மேற்கொள்ளுவதோ, அந்த விருதுகளை அணிவதோ கூடாது என்ற உத்தரவு பிறந்தது. சிஷ்யர்களிடமிருந்து ஸம்பாவனை பெறுவதில் சிருங்கேரிமடத்துக்கு அப்புறம்தான் சிவகங்கை மடத்திற்கு பாத்யதை என்றும் நிபந்தனை விதித்தார். தீர்த்தஹள்ளி புட்டிகே சுவாமி என்பவர் ஹெய்கே மடத்து விவகாரங்களில் தலையிட்டதின் விளைவாக ஹெய்கே மடத்து ஏஜண்டு ஒருவர் இறக்க நேரிட்டது. ஸ்தானிகர் பூர்ணய்யா கவலேதுர்க்கா அமீல்தாருக்கு எழுதி புட்டிகே சுவாமிகளின் அதிக்கிரமச்செயலை அறிவுறுத்தி எச்சரிக்குமாறு உத்தரவிட்டார். மேலும் ஹெய்கேமடம் போன்ற சிருங்கேரியின் கிளை ஸ்தாபனங்கள் விஷயமாக சிருங்கேரி ஜகத்குரு சுவாமிகளே உத்தரவுகள் பிறப்பிவிக்க அருகதையுடையவர் என்றும் பிரகடனம் செய்தார். *(1810)*

அதிக வட்டி வாங்குவதைத் தடுக்க நூறு வராகன்களுக்கு மாதம் ஒன்றுக்கு ஒரு வராகனுக்குமேல் வட்டி வசூலிக்கக் கூடாது என்று ஸ்தானிகர் பூர்ணய்யா பிறப்பித்த உத்தரவை, சிருங்கேரி எல்லையில் ஜகத்குரு ஸ்வாமிகள் அமுலுக்குக் கொண்டுவந்தார். இந்த விதியை மீறின வியாபாரிகளின் சொத்துக்கள் ஜப்தி செய்யப்பட்டன.

1811ம் ஆண்டில் மஹாராஜா கிருஷ்ணராஜ உடையார் மேஜர் ஆகிவிட்டதால் ஸ்தானிகர் பூர்ணய்யா இராஜ்ய நிர்வாகத்தை அவரிடம் ஒப்படைத்தார். மஹாராஜா சிருங்கேரி ஆசார்யாளை தனது தலைநகருக்கு எழுந்தருளும்படி அழைப்பு அனுப்பினர். அதை அனுசரித்து ஆசார்யாளும் மைசூர் சென்றார்கள். அங்கிருக்கும்போது நஞ்சன்கூடு சென்று ஸ்ரீ கண்டேச்வரரைத் தரிசிக்கவேண்டும் என்று ஆசார்யாள் விரும்பினர்கள். ஆனால் சுமதீந்த்ர மடத்து சுவாமிகள் தன் வாசஸ்தலத்தின் வழியாக ஆசார்யாள் செல்லுவதை ஆக்ஷேபித்தார். மஹாராஜா சாமர்த்தியமாக சுமதீந்த்ர ஸ்வாமிகளை மைசூருக்கு வரச்செய்து ஆசார்யாள் நஞ்சங்கூடு செல்ல வழி கோலினர்.

1812ம் ஆண்டில் சிருங்கேரிக்கு சாதுர்மாஸ்ய விரதச் செலவுக்காக ஸர்வமான்யமாக மஹாராஜாவால் விடப்பட்ட ஹரகேரிக்கு ஆசார்யாள் விஜயம் செய்து அங்கேயே விதேக முக்தியடைந்தார். மைசூர் ராஜ்ஜியத்தின் முஸ்லீம் ஹிந்து அரசர்களாலும், மாதவராவ், இரண்டாவது பாஜிராவ், மஹத்ஜி சிந்தே என்ற மராட்டிய அரசர்களாலும், ஹைதராபாத் நைஜாம் அலிகான் என்பவராலும் கிழக்கு இந்திய கம்பெனி கவர்னர்களாலும் ஒருங்கே போற்றப்பட்டவரும், கௌரவிக்கப்பட்டவரும், சிறந்த ஆன்ம ஞானியுமான மூன்ருவது ஸ்ரீ சச்சிதானந்த பாரதீ சுவாமிகள் இவ்வாறு மிகுந்த கியாதியுடன் விளங்கினர்கள்.

## 31. இரண்டாவது ஸ்ரீ அபிநவ ஸச்சிதானந்த் பாரதீ ஆசார்யாள்.

(ஆட்சி 1814—7)

இவர்களுடைய ஆட்சி மூன்றே வருஷங்கள்தான். "சிருங்கேரி ஆத்மீக பீடம் தலைசிறந்தது, ஸ்வாமிகளும் புதிதாகப்பட்டம் பெற்றிருக்கிறார்கள். ஆகையால் சம்ஸ்தானத்தின் நிர்வாகத்தை செம்மையாக நடத்தி, மடத்தின் கியாதியை ரக்ஷிக்கவேண்டும்." என்று மைசூர் மகாராஜா தன் காரியஸ்தர் வெங்கடாசல பட்டருக்கு உத்தரவு அனுப்பினார். மகாராஜாவினுடைய விச்வாசத்தையும், பக்தியையும் இது நிரூபிக்கிறது அல்லவா!

தாங்கள் முக்தியடையும் காலம் சமீபித்துவிட்டது என்பதை அறிந்த ஸ்வாமிகள், ஸ்ரீ சிருங்கேரி அக்கிரஹாரத்தில் இருந்துவந்த சிரேஷ்டரான ப்ரம்மசாரி ஒருவருக்கு ஸந்யாஸ தீக்ஷை கொடுத்துவிட்டு ஆறு தினங்களில் விதேகமுக்தி அடைந்தார்கள்.

## 32. ஏழாவது ஸ்ரீ ந்ருஸிம்ஹ பாரதீ ஆசார்யாள்

(ஆட்சி 1817—1879)

ஸ்ரீ ந்ருஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகள் 1798ம் ஆண்டில் ஜனனமானார். சிறு பையனாக இருக்கும்போதே பண்டிதர்களிடம் சாஸ்திர பாடம் கேட்க ஆர்வம் கொண்டு காசிக்குக் கால்நடையாகவே சென்றார். அங்கு அவர் சந்தித்த பண்டிதர்களில் பிரக்யாதி பெற்ற அஹோபல பண்டிதரின் சிஷ்யரான சிந்தாமணிக் குட்டிசூரி என்ற வாஞ்சேச்வர சாஸ்திரி என்னும் விற்பன்னர் ஒருவர். ஆசார்யாள் பதவி ஏற்றவுடன் கல்வியில் சகல துறைகளிலும் தேர்ச்சியடைய பெருமுயற்சி எடுத்துக்கொண்டார்கள். அதோடு சமஸ்தான நிர்வாக நுணுக்கங்களையும் கற்றுத் தேர்ந்தார்கள். சமஸ்தானத்தில் முன்பு இருந்த சில குழப்பங்களைச் சீர்படுத்தி ஒழுங்கு செய்தார்கள். பசியையும் தூக்கத்தையும் கூட வென்றார்கள். ஐம்பது வயது பூர்த்தியாகுமுன்பே

சாதாரண சாப்பாட்டை நிறுத்திவிட்டு ஒரு பிடி பாகல்காய்களை வேகவைத்துப் புசிக்கலானார். நாள் முழுவதும் தியானத்திலும் பூஜையிலுமே செலவிட்டார்கள். ஆசார்யாள் 1858ல் பங்களூரில் இருக்கும்போது கமிஷனர் பௌரிங் என்ற ஆங்கிலேயன் ஆசார்யாளின் ஆன்மீய வாழ்க்கையைக் கேள்வியுற்று அவர்களை தானே நேரில் கண்டு பரீக்ஷிக்க ஆவல்கொண்டான். ஓர் இரவு ஒரு மணிக்கு மாறுவேடம் தரித்து ஆசார்யாள் இருக்கும் இடம் சென்று பூஜையறை முன்னால் இடப்பட்டிருந்த திரைச்சீலையைச் சற்று விலக்கி உள்ளே பார்த்தான். தன்னைச் சுற்றி என்ன நடக்கின்றது என்பதை முற்றிலும் மறந்து வணங்கியதலையுடன் ஸ்ரீசந்திரமௌளீச்வரருக்கு புஷ்பார்ச்சனை செய்துகொண்டிருந்த ஆசார்யாளை கமிஷனர் பார்த்தான். அவனுக்கு ஆச்சரியமும், ஆசார்யாளிடத்தில் கௌரவபுத்தியும் உண்டாயின. அவன் ஆசார்யாளுக்கு எழுதிய கடிதம் ஒன்றில் தனக்கு ஆசார்யாள் மீதிருந்த பக்தி விநயத்தைத் தெரியப்படுத்தியிருக்கிறான்.

ஆசார்யாளுக்கு ஸம்ஸ்கிருதம் தவிர தெலுங்கு, கன்னடம், தமிழ், மராட்டி, ஹிந்துஸ்தானி முதலிய பல பாஷைகளிலும் தேர்ச்சியுண்டு. இதனால் இந்தியாவின் பலபாகங்களிலிருந்து மக்கள் திரளாகவந்து ஆசார்யாளிடம் தங்கள் குறைகளை நேர்முகமாகக்கூறி அவர்களுடைய ஆலோசனையையும் உபதேசத்தையும் பெற நல்ல வாய்ப்பு இருந்தது.

ஆசார்யாள் உறுதியான உள்ளம் படைத்தவர். அவர் எடுத்துக்கொண்ட தீர்மானங்களிலிருந்து சற்றும் அசைக்க முடியாமல் அவற்றை அமுலுக்குக் கொண்டு வந்தார். எதிர்ப்பு மனப்பான்மை சிறிதும் இன்றி, பொறுமையைச் சற்றும் இழக்காமல் சுமுகமாகவே தான் எடுத்துக்கொண்ட காரியங்களைச் செய்துமுடிப்பார்கள். ந்ருஸிம்ஹமூர்த்தியின் உருவத்தியானத்தில் ஆழ்ந்து இருந்தவராதலால் அவரிடம் ஓர் சலனமற்ற காம்பீர்யம் உண்டாகியிருந்தது. அவரை தரிசிப்பவர்களுக்கு பணிவும், அச்சமும், மரியாதையும்

தானே உண்டாயின. ஆயினும் அவரது உள்ளம் மிகவும் இளக்கமானது. துன்பத்தைக்கண்டு வருந்தும் சுபாவம் உடையவர்.

ஆசார்யாளின் திடசங்கல்பத்துக்கும், எடுத்த காரியத்தைமுடிக்கும் வல்லமைக்கும் அவர்களுடைய ஜீவிய சரித்திரத்திலிருந்து ஓர் சில உதாரணங்கள் கூறலாம். வட இந்திய சஞ்சாரத்தின்போது நாகபுரி சென்றூர். அங்கிருந்த போஸ்லே அரசன் ஆடம்பரத்திலும், கேளிக்கைகளிலும் வீண் பொழுது போக்கிக்கொண்டிருந்தான். ஆதலால் அவன் ஆசார்யாளைப் பொருட்படுத்தவில்லை. ஆசார்யாள் தமது சொந்த ஹோதாவில் தம்மை யாரும் வணங்க வேண்டுமென்ரே மரியாதை செய்யவேண்டுமென்ரே நினைப்பவரல்ல. ஆயினும் அரசனுடைய உதாசீனத்தை தாம் அமர்ந்திருக்கும் பீடத்திற்குச் செய்த அவமரியாதை யாகவே ஆசார்யாள் கருதினுர்கள். ஆகவே கம்ப்டி என்ற இடத்தில் தமது முகாமை அமைத்துக்கொண்டு மடத்துக்கு ஏற்படும் செலவையும் பொருட்படுத்தாமல், அரசன் தனது தவறை உணர்வான் என்று எதிர்பார்த்துப் பல மாதங்கள் தங்கிவிட்டார்கள். இதே சமயத்தில் அரசனுக்குப் பல இன்னல்கள் ஏற்பட்டன. ஆசார்யாளுக்குத் தான் செய்த அபசாரமே இவ்வின்னல்களுக்குக் காரணம் என்று அரசன் உணர்ந்தான். ஆசார்யாள் முகாமுக்குக் கால்நடையாகவே சென்ருன். வீழ்ந்து வணங்கினுன். மன்னிப்புக்கோரினுன். தன் தலைநகருக்கு ஆசார்யாளை அரசமரியாதையோடு அழைத்துவந்து உபசரித்தான்.

1838ல் ஆசார்யாள் இராமேச்வரத்தில் இருந்தார்கள். அவருக்கு ஆலயத்திலேயே தங்க வசதி அளிக்கப்பட்டது. இராமேச்வரம் வரும் யாத்ரிகர்கள் ஆலயத்தினுள் இருக்கும் பல புண்ய கூபங்களில் நீராடி கடைசியாகக் கோடி தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து தமது யாத்திரையை முடித்துக்கொள்வது வழக்கம். இந்த கோடி தீர்த்தத்தில் தீர்த்தப் பிராம்மண சிப்பந்திகளே தீர்த்தத்தைக் கிணற்றி லிருந்து இறைத்து ஓர் தொட்டியில் விழும்படி

விடுவார்கள். அதில் தான் யாத்ரிகர்கள் ஸ்நானம் செய்வது வழக்கம். இதற்காக அந்தக் கோயில் பிராமணர்கள் ஊதியம் பெறுவதும் உண்டு. ஆசார்யாள் அங்கு தங்கியிருக்கும்போது கோடி தீர்த்தத்தில் தமது மடத்து சிப்பந்தி பிராமணர்களை தமது ஸ்நானத்துக்குத் தண்ணீர் வார வேண்டும் என்று விரும்பினார்கள் அதற்குத் தீர்த்தப் பிராமணர்கள் சம்மதிக்கவில்லை. உடனே ஆசார்யாள் வேறொரு கிணற்றுக்குச்சென்று அங்கேயே தமது ஸ்நான அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு அங்கு கூடியிருந்த சிஷ்யர்களுக்கும் இதராளுக்கும் "இது ஸர்வ தீர்த்தம். இதில் ஸ்நானம் செய்வதே யாத்திரையின் முடிவாகும்" என்று கூறினார்கள். அன்றிலிருந்து யாத்ரிகர்கள் கோடி தீர்த்தத்துக்குப் போகாமலே ஸர்வதீர்த்தத்தில் ஸ்நானம் செய்து யாத்திரையை முடித்துக்கொள்ள ஆரம்பித்தனர். கோடி தீர்த்தம் இறைக்கப்படாமல் அழுக்கு நிறைந்து கவனிப்பாரற்றுப் போனது. அத்தீர்த்தப் பிராம்மணர்கள் தமது ஊழியத்தை இழந்தனர்.

1872ல் ஆசார்யாள் அடுத்த சஞ்சாரத்தின்போது மதுரையில் தங்கியிருந்தார்கள். இராமேச்வரத்திலுள்ள அந்த அந்தணர்கள் மதுரைக்கு வந்து ஆசார்யாளின் அடிகளில் வீழ்ந்து மன்னிப்புக் கோரினர். ஆசார்யாளும் மனமுவந்து இராமேச்வரம் சென்று கோடிதீர்த்தக் கிணற்றைத் தூர்வை எடுக்கச்செய்து தாம் அபிமந்திரித்து வைத்திருந்த கமண்டல தீர்த்தத்தை அக்கிணற்றில் ஊற்றி ...ம் யாத்ரிகர்கள் கோடி தீர்த்தத்தில் ஸ்நானம் ...று புனிதப்படுத்தினார்கள்.

...ரக்கு இரண்டாம் முறையாக ஆசார்யாள் விஜயம் ...பு தம்முடன் தமது சிஷ்யரும் தமக்குப்பின் வரவேண்டியவருமான பாலஸ்வாமிகளையும் ... வந்திருந்தார்கள். மீனாக்ஷி ஆலயத்தின் ...தில் பிரவேசித்து அம்பாளுக்கு நேரடியாகத் ... செய்யவேண்டுமென்று பாலஸ்வாமிகள் ...ர். ஆனால் கோயில் அர்ச்சகர்களான

பட்டர்கள் அதற்கு இடம் கொடுக்கவில்லை. உடனே ஆசார்யாள் ஆலயத்துக்குச் சென்று மட்டையோடு கூடிய இரண்டு தேங்காய்களைக் கொண்டுவரச் செய்து, அவற்றை ஸ்ரீ மீனாக்ஷியின் சந்நிதி முன்பு வைத்து அவற்றில் மீனாக்ஷியின் ஸான்னித்யத்தை ஆகர்ஷித்து, அவற்றிற்கு பூஜை செய்து அதைத் தம் ஜாகைக்குக் கொண்டுவந்து விட்டார்கள். ஆசார்யாளுடைய உத்தரவின்பேரில் அன்று முதல் ஆலயத்துக்கு வரும் சேவார்த்திகள் பட்டர்களுடைய உதவியில்லாமலே வெளியிலேயே தாமே தேங்காய் உடைத்து கற்பூரம் காட்டி வழிபாடு செய்யத் தலைப் பட்டனர். இத்தகைய வழிபாட்டை முதன் முதலாகச் செய்தவர் அக்காலத்தில் மதுரையில் வக்கீலாக இருந்து பின்னால் ஹைகோர்ட்டு ஜட்ஜாக உயர்த்தப்பட்ட (ஸர்) எஸ். சுப்ரமண்யரேயாகும். பட்டர்களின் செல்வாக்கும் ஊதியமும் குறைந்தன. அவர்கள் யாவரும் ஆசார்யாள் தங்கியிருக்கும் இடத்துக்கு ஒருங்கே சென்று ஆசார்யாளின் பாதங்களில் விழுந்து மன்னிப்புக் கோரி மறுபடியும் பழைய பூஜா முறையை புனருத்தாரணம் செய்யுமாறு பிரார்த்தித்தனர். ஆசார்யாளும் மனமிரங்கி மறுபடியும் கோவிலுக்கு விஜயம் செய்து ஸ்ரீ மீனாக்ஷியின் ஸான்னித்தியத்தைத் திரும்பவும் திருவுருவத்தில் சேர்த்து பூஜை நடத்தினார்கள். மக்களும் பழைய வழக்கப்படி வழிபட ஆரம்பித்தனர்.

**மூன்றும் கிருஷ்ணராஜ உடையார்:—** 1822ல் மஹாராஜா கிருஷ்ணராஜ உடையார் ஆசார்யாளை மைசூருக்கு வரும்படி அழைத்தார். அப்போது ஹரகேரியில் தங்கியிருந்த ஆசார்யாள் மைசூர் போகாமல் நேராக சிருங்கேரி வந்துவிட்டார்கள். 1828ல்தான் ஆசார்யாள் மைசூர் சென்றார்கள். இந்த வரவின் ஞாபகார்த்தமாக பேலவாடி சாஸனத்தை அரசர் ஸ்திரம் செய்தார். இந்த சாஸனம் 1760லேயே உண்டானதாயினும் பேலவாடி சமஸ்தானத்தின் அனுபோகத்துக்கு வராமல் இருந்தது. அதை இப்பொழுது ஸ்திரப்படுத்தினதின் மூலமாக பேலவாடி சமஸ்தானத்தின் அனுபோகத்துக்கு வந்தது. அதோடு கொப்பா தாலூகாவைச் சேர்ந்த சீமக்காடியும்

அதன் உட்கடையான பதினான்கு கிராமங்களையும் சேர்த்து சிருங்கேரி ஸமஸ்தானத்துக்கு அரசர் அளித்தார்.

மேலும் சமஸ்தானத்துக்குச் சொந்தமான சர்வமான்ய நிலங்களில் சந்தணக்கட்டை வெட்டிக்கொள்ளும் உரிமையும் வழங்கப்பட்டது. தனது அமீல்தார்களுக்குத் தாக்கீது அனுப்பி ஸமஸ்தானத்துக்குத் தேவைப்படும் பொருள்களுக்குச் சுங்கவரி வசூலிக்கக் கூடாது என்றும் மடத்தால் எடுக்கப்படும் ஆசார ஒழுங்கு நடவடிக்கைகளை அமுலுக்குக் கொண்டுவருவதில் அவர்கள் வேண்டிய உதவி செய்ய வேண்டும் என்றும் திட்டம் செய்தார். அரண்மனை ஊழியர்கள் கூட மடத்தால் எடுக்கப்படும் ஆசார விசாரணை வரம்புக்குக் கட்டுப்பட்டவர்கள் என்றும் பிரகடனம் செய்தார். வாரீசு இல்லாமல் இறந்துபோகும் மடத்து சிஷ்யர்களின் சொத்துக்கள் மடத்துக்கே சேரவேண்டும் என்ற பழய உத்தரவை ஸ்திரம் செய்தார். இதில் சொத்தின் மதிப்பு ஆயிரம் ரூபாய்களுக்குக் குறைந்தால் மடத்துக்குத் தாமே சேர்ந்துவிடுமென்றும், அதற்கு மேற்பட்டால் சர்க்கார் அனுமதிபெற்றுச் சேர்த்துக்கொள்ளலாம் என்றும் ஓர் நிபந்தனை இருந்தது. சிஷ்யர்களின் குடும்பங்களில் ஏற்படும் பாகத்தகராறு போன்ற சிவில் வியவஹாரங்களையும் மடமே கவனித்துக்கொள்ளும்படி ஏற்பாடாயிற்று.

சிறு மடங்களைச் சேர்ந்த வேறு எந்த சுவாமிகளும் வெண்கொற்றக்குடை, மகரதோரணம், போன்ற சின்னங்களை உபயோகிக்கக் கூடாது என்று உத்தரவிட்டு சிருங்கேரியின் பிராதான்னியத்தையும், கௌரவத்தையும் மஹாராஜா மிகக் கண்டிப்பான முறையில் காப்பாற்றினர். ஹரிஹரபுரம், தீர்த்தஹள்ளி, மூலபாகல முதலிய மடத்து சுவாமிகள் சிருங்கேரி மடத்து அதிகார வரம்புக்கு உட்பட்டவர்கள் என்றும், அவர்கள் சிருங்கேரி மடத்தின் உத்தரவுகளுக்கும் ஆலோசனைகளுக்கும் கட்டுப்பட்டு நடக்கவேண்டும் என்றும் உத்தரவு பிறப்பித்தார், (1828)

1841, 1843, 1847 ஆண்டுகளில் ஏற்பட்ட மூன்று தஸ்தாவேசுகளில் சிவகங்கை மடத்து சுவாமிகள் ஸ்ரீஅபிநவோத்தண்ட கங்காதரபாரதி என்பவர் சிருங்கேரி ஸ்வாமிகளுக்கு எழுதிய கடிதங்கள் உள்ளன. அவற்றில் மேற்படி சிவகங்கை சுவாமிகள் தான் மூப்படைந்தமையால் மடத்துக்காரியங்களை கவனிக்கச் சக்தியற்றவராய் இருப்ப தாயும், தனக்குப்பின்னுல் பட்டத்துக்குவர இருப்பவரின் நடத்தை தனக்குப் பிடிக்காமல் இருப்பதாயும், வேருெரு தகுந்தவரை சிருங்கேரி மடத்திலிருந்தே தேர்ந்தெடுத்துத் தக்க பயிற்சி அளிக்கவேண்டுமாயும் எழுதியிருக்கிருர்.

மைசூர் மஹாராஜாவின் இதர கடிதங்கள் சிருங்கேரி ஆலயங்களுக்கு வெள்ளி தங்கப்பாத்திரங்கள் உபயம் செய்ததையும், விலையுயர்ந்த ஆபரணங்கள் அனுப்பி வைத்ததையும், ஸ்ரீ சாரதாதேவிக்கு ஓர் ரதம் செய்ய ஏற்பாடு செய்திருப்பதையும் அறிவிக்கின்றன. ஆசார்யாள் மஹாராஜாவின் வேண்டுகோளை அங்கீகரித்து சாமராஜ நகரிலேயே ஓர் ரதம் செய்ய உத்தரவிட்டார்கள். சீரங்க பட்டிணத்திலுள்ள ஞானனந்தேச்வரர் ஆலயத்தில் எழுந் தருளியிருக்கும் ஸ்ரீ பிரஸன்ன பார்வதீ தேவியின் பீடத்தில் ஸ்தாபிக்கும்படி ஓர் ஸ்ரீ சக்ரம் அனுப்பிவைத்தார்கள். அரண்மனை புரோகிதர் ஒருவர் மடத்தின் ஆசார விசாரணை யையும் நடத்திவந்தார். அவர் அரண்மனைப் புரோகிதத் தையும், மடத்துக் காரியங்களையும் சேர்த்துப் பார்க்க இயலாமல் சிரமப்பட்டார். அதை யறிந்த அரசர் ஆசார விசாரணையை நடத்தத் தனி ஒருவரை நியமனம் செய்ய உத்தேசித்திருப்பதாய் ஆசார்யாளுக்குத் தெரியப்படுத்திய கடிதத்தில் "ஆசார்யாளின் பிரதம சிஷ்யரான நான் அவர்களின் இஷ்டத்துக்கு விரோதமாக நடப்பதாகக் கருத வேண்டாம்" என்று பிரார்த்தித்திருக்கிருர். இக்கடிதம் அவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்ததன்றெனினும் மஹா ராஜாவுக்கு ஆசார்யாளின் மீது இருந்த அபார மரியாதையைக்காட்டுகிறது.

நகர் என்ற இடத்தில் ஃபௌஜ்தாராக இருந்த ஓர் கீழ்த்தர உத்தியோகஸ்தன் நம்பிக்கை மோசம், கையாடல் முதலிய குற்றங்களைச் செய்ததுடன், நகரின் ஸிம்ஹாஸனத்தில் ஓர் போலி ஆசாமியை அமர்த்தக் கருதி உள்நாட்டுக் கலவரம் செய்தான். அக்கலவரம் பங்களூர் வரை பரவிற்று. இதை யடக்கி அதற்குக் காரண பூதனாக இருந்த ஃபௌஜ்தாரைத் தண்டிக்க சைன்னியங்களை அனுப்புவதில் அரசர் முனைந்திருந்தார். அச்சமயத்திலும் மஹாராஜா சிருங்கேரியின் மீது மிகுந்த அக்கரைகொண்டு அதைப் பாதுகாப்பதில் கண்ணும் கருத்துமாக இருந்தார். தனது திவானுக்கு சிருங்கேரியை நன்கு பாதுகாத்து வரவேண்டுமென்று கட்டளையிட்டார். அதற்காக ஓர் சிறு குதிரைப்படையையும் அனுப்பிவைத்தார்.

மைசூர் மஹாராஜா சரியான முறையில் ஆட்சி நடத்தவில்லை என்ற ஆதாரமற்ற ஓர் புகாரை வியாஜமாகக் கொண்டு ஆங்கில கவர்னர் ஜெனரல் பெண்டிங்கு என்பான் மைசூர்ச் சீமையை ஓர் ஆங்கில கமிஷனர் கையில் ஒப்படைத்தான். ஆங்கிலேய கமிஷனர்கள் சிருங்கேரி சம்பந்தப்பட்டவரை மிகவும் மரியாதையாகவே நடந்து கொண்டனர். 1837–38ல் மார்க்கப்பான் (Mark Cubbon) என்பவன் ஆசார்யாளின் உத்தரவுகளுக்குமேல் ஆங்கில சர்க்காருக்கு அப்பீல் செய்ய உரிமை கிடையாது என்றும், மடத்து அதிகாரிகள் ஆங்கில சர்க்காருக்கு வருஷாந்தர வரவு செலவுகணக்குகளை அனுப்பத்தேவையில்லை என்றும், மடத்துக்குப் பூர்வீகமாக ஏற்பட்ட சகல உரிமைகளையும் மடம் நிரந்தரமாய் அனுபவிக்கலாம் என்றும் பிரகடனம் செய்தான். இந்த பூர்விக உரிமைகளில் மடத்தின் எல்லைக்குள் சட்டரீதியான ஒழுங்கு நடவடிக்கைகள் எடுப்பது, ஸிவில் விசாரணை போன்றவையும் அடங்கியிருந்தன.

ஓர் தலைமை கமிஷனரின் அதிகாரப் பூர்வமான அறிக்கையில் கண்டுள்ள சில வாசகங்களை ஈண்டு சுருக்கமாகக் கூறலாம். "சிருங்கேரி மடத்து இனும்களில் அடங்கியவை (1) சிருங்கேரி கஸ்பாவும் அதன் உள்கடை கிராமங்களும் சேர்ந்த சிருங்கேரி மாகாணம் (2) சர்க்கார் எல்லைகளில் உள்ள சிறு மானிபங்கள் இவற்றின் பட்டியல் ஒன்று மடத்தின் ஏஜண்டு வசம் கொடுக்கப்பட்டது. (3) இதர தாலூகாக்களிலுள்ள மானிபங்கள்.

**I.** இவற்றில் இரண்டாவது ஐட்டத்தில் கண்டவைகளை சர்வே செய்து அவை இதர சர்க்கார் நிலங்கள் போல நடத்தப்படவேண்டும். **II.** மூன்ருவது ஐட்ட நிலங்களும் சர்வே செய்வது உசிதம். ஆனுல் அவ்வாறு சர்வே செய்வதால் அவற்றின் தீர்வைகளில் எதுவும் மாறுதல் ஏற்படாது. மேலும் சர்வே செய்யுமுன் ஆசார்யாளுக்கு அறிவித்து அவர் சம்மதத்தின் பேரில் அமுலாக்கவேண்டும். இவற்றை ஆசார்யாள் அங்கீகரிப்பார் என்று கமிஷனர் நம்புகிருர். **III** முதலாவது ஐட்டம் சம்மந்தமாக யாதொரு மாறுதலும் செய்யவேண்டாம். ஆனுல் சுற்றுப் பக்கத்து கிராமங்களை சர்வே செய்வதின்மூலம் சிருங்கேரி மாகாணத்தின் நான்கு மால் துல்பமாக்கப்படும். மேலே கண்ட விஷயங்களை ஆசார்யாளிடம் விக்ஞாபனம் செய்து இவ்விஷயமாக ஆசார்யாளின் ஸம்மதியைப்பெறுவதற்கும், கூடுமானுல் ஸ்ரீ ஜகத்குரு அவர்களை நேரில் தர்சித்து இவ்விஷயத்திலும் மற்றும் மடத்தின் சொத்து ஸம்பந்தமான எல்லா விஷயங்களிலும் ஸ்ரீஜகத்குருவின் அபிப்ராயத்தை அறிந்து அதன்படி நடக்கவும் ஸித்தமாக இருக்கிரேும் என்பதை தெரியப்படுத்திக் கொள்கிரேும்" என்று அந்த அறிக்கையில் கூறப்பட்டிருக்கிறது.

1834ல் தனது இராஜ்யம் ஆங்கிலேய கமிஷனர்கள் கையில் ஒப்படைக்கப்பட்டிருப்பதால் தனக்கு உண்டான மனத்துயரை விவரித்து மஹாராஜா ஆசார்யாளுக்கு ஓர் கடிதம் எழுதினுர். வட நாட்டில் சஞ்சாரம் செய்துகொண்டிருந்த ஆசார்யாளைத் திரும்பி வர வேண்டுமாயும், அதற்கு ஏற்பட்ட செலவைத்தான் ஏற்றுக் கொள்ளுவதாயும் பல கடிதங்கள் மஹாராஜா எழுதியிருக்கிருர். அரண்மனையில் நடந்தேறிய சகல சுபச்செய்திகளையும் அவ்வப்போது ஆசார்யாளுக்குத் தெரியப்படுத்தியிருக்கிருர். ஒரு தங்கப்பல்லக்கையும் அனுப்பி வைத்

தார் 1854ல் ஆசார்யாள் இரண்டாம் முறையாக மைசூருக்கு விஜயம் செய்தார்கள். அப்போது சிவகீதையைப் படித்து வரும்படியாக மஹாராஜாவுக்கு உபதேசம் செய்தார்கள். அச்சமயத்தில் மஹாராஜா ஆண்டுதோறும் மடத்துக்குக் காணிக்கையாக பன்னிரண்டாயிரம் ரூபாய் அளிப்பதாக விக்ஞாபனம் செய்துகொண்டார். 1861ல் மஹாராஜா சிருங்கேரிக்கு வந்தார்.

வடநாட்டு சஞ்சாரம் :— மைசூர் சீமை ஆங்கில நிர்வாகத்துக்கு வந்த சிறிது காலத்துக்கெல்லாம் ஆசார்யாள் வடநாட்டு சஞ்சாரத்தைத் துவக்கினார்கள். தார்வாரில் கலெக்டராக இருந்த அலெக்ஸாண்டர் நிஸ்பெட் என்பவன் ஆசார்யாளை வரவேற்றான். அதோடு ஆசார்யாள், நாஸிக், துவாரகை, குருக்ஷேத்ரம், காசி, பதரிகாச்ரமம், ஜகந்நாதம் முதலிய இடங்களுக்கு அழைத்துப்போகப் போதுமான காவற்படையொன்றும் அனுப்பிவைத்தான். ஆசார்யாள் ஹைதராபாத்துக்கு விஜயம் செய்தபோது நைஜாமின் பிரதம மந்திரி சண்டுலால் என்பவர் நைஜாமின் பிரகடனம் ஒன்றை ஆசார்யாளிடம் சமர்ப்பித்தார். அதில் மத சம்மந்தமான விஷயங்களில் யாவரும் ஆசார்யாளுக்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டும் என்று கண்டிருந்தது. வடநாட்டு சஞ்சாரத்தில் ஆசார்யாளுக்கு எங்கும் ஏகோபித்த வரவேற்பும் மரியாதையும் இருந்தன. படோதா ராஜ்ய மன்னன் கெய்க்வார் ஆசார்யாள் சஞ்சாரத்துக்கு பாதுகாப்பளிக்க ஓர் குதிரைப்படையை அனுப்பினான். குவாலியர் அரசன் ஜயாஜிராவ் சிந்தேயும், இந்தூர் அரசன் துக்கோஜிராவ் ஹோல்கரும், தாராதேசத்து யச்வந்தராவ் பாவர், ஹைய்பத்ராவ் பாவர் என்பவர்களும், அகல்கோட் ஷாஜி ராஜா போஸ்லேயும், நர்குண்டு தேசத்து பாஸ்கர ராவ் தாதாஜி சச்வ் என்பவனும், நரசிங்ராவ் சித்தோலே தேஷ்முக் என்பவனும் கச்சு ராஜாவும் தேவாஸ் மன்னன் ருக்மாங்கராவ் பவர், சிதோலே லக்ஷ்மண ராவ் நரஸிங் முதலியோர் மடத்துக்கு வருஷா வருஷம் காணிக்கை முதலியன அனுப்பிவைப்பதாக ஒப்புக்கொண்டனர்.

வாரிசுத்தேர்வு:—ஆசார்யாள் சிருங்கேரிக்குத் திரும்பியபோது அவர்களுக்கு வயது அறுபது. தமக்கு ஓர் வாரிசைத் தேர்ந்தெடுத்து அவருக்குத் தக்க பயிற்சி அளிக்கவேண்டுமென்று சங்கல்பித்தார்கள். எட்டு ஆண்டுகள் தகுதி வாய்ந்த ஒருவரைத் தேடினார்கள். கடைசியாக

ஓர் அர்ஹதையுள்ள இளைஞரை மனதில் கொண்டு மைசூருக்கு வந்தார்கள். சிவஸ்வாமி என்ற இளைஞர் பெற்றோர் இன்மையால் அவரது தமையனுடைய ஸம்ரக்ஷணையில் இருந்து வந்தார். அத் தமையனர் மைசூர் சமஸ்தான பண்டிதர்களில் ஒருவரான லக்ஷ்மீ நரஸிம்ஹ சாஸ்திரி என்பவர். அவர் தனது இளைய சகோதரனைப் பிரிந்திருக்க விரும்பவில்லை. ஆசார்யாளும் மஹாராஜாவும் அவரை வற்புறுத்தியும் ஓர் அளவு அச்சுறுத்தியுமே பையனை அடையமுடிந்தது. சிவஸ்வாமி என்ற இளைஞருக்கு சந்நியாஸம் வழங்கி ஸ்ரீ சச்சிதானந்த சிவ அபிநவ ந்ருஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகள் என்ற தீக்ஷா நாமாவும் கொடுத்தார்கள். இவருக்கு இளவரசுப்பட்டம் சூட்டியபோது மஹாராஜா வும் தலைமை கமிஷனரும் உடனிருந்தனர்

## தென்னாட்டுக்கு இரண்டாவது விஜயம்:—

ஆசார்யாளும் இளவரசும் நீண்டதொரு தென்னிந்திய யாத்திரையை மேற்கொண்டார்கள். சிரங்கபட்டணத்திலிருந்து நஞ்சங்கூடு, சாமராஜ நகர் வழியாக கோயம்புத்தூர் ஜில்லா, சேலம் ஜில்லா, திருச்சிராப்பள்ளி ஜில்லா, மதுரை ஜில்லா, இராமநாதபுரம் ஜில்லா, திருநெல்வேலி ஜில்லா, திருவிதாங்கூர் சமஸ்தானம், செங்கற்பட்டு ஜில்லா, சென்னை, வட ஆர்க்காடு ஜில்லா, கடப்பை ஜில்லா, கர்நூல் ஜில்லாக்களில் சஞ்சாரம் செய்தார்கள். திருவனந்தபுரத்தில் வரவேற்பு ஏற்பாடுகளை திவான் அவர்களே நேரில் கவனித்தார். கரமனையில் திவானுலும் அதிகாரி களாலும் வரவேற்கப்பட்டு கோட்டை வாசலில் மஹாராஜா நேரில் வந்து வரவேற்றார். இந்த விஜய யாத்திரை பன்னிரண்டு ஆண்டுகள் நடந்தது. அப்பொழுது மைசூர் சர்க்காரும் சென்னை மாகாண சர்க்காரும், இந்திய சர்க்காரும், ஆசார்யாளின் அந்தஸ்துக்கு ஏற்ற முறையில் ஆங்காங்கு வரவேற்புகள் ஏற்பாடு செய்தும், தகுந்த பாதுகாப்பு அளித்தும், போதுமான காவற்படை கூடவே அனுப்பியும் உபசரித்தனர்.

கமிஷனர் பௌரிங் என்பவன் விடுத்த 1867 டிசம்பர் 20ம் தேதிய அறிக்கையில் தனக்குக் கீழ் வேலை பார்க்கும் உத்தியோகஸ்தர்கள் யாவரும் ஜகத்குரு அவர்களுக்குத் தேவையான உதவி செய்வதுடன், தத்தம் அலுவலர்கள் ஆசார்யாளை தகுந்த மரியாதையுடன் வரவேற்க

உத்தரவுகள் பிறப்பிக்கவேண்டுமென்றும், "ஸ்மார்த்த சம்பிரதாயத்தின் தலைவராக இருக்கும் ஸ்ரீ ஜகத்குரு அவர்கள் வேறு எந்த சமயாசாரியாரும் அடையாத விசேஷ கௌரவம் அடைந்தவர்கள்" என்றும் எழுதி யுள்ளான்.

இந்தியா கவர்ன்மெண்டுக்கு 1868 ஜுலை 27ம் தேதியில் எழுதிய கடிதத்தில் கமிஷனர் கீழ்க்கண்டவாறு எழுதியிருக்கிறான். "சிருங்கேரி ஜகத்குரு தென்னிந்தியாவின் பெரும் பகுதி ஹிந்து மக்களுக்கு சமய குரவராகத்திகழ்வது மட்டுமன்றி, பிரதான மராட்டிய அரசர்களான ஹோல்கர், பழய பீஷ்வாக்கள் போன்றவர்களுக்கும் குலகுருவாக விளங்குகின்றார். மற்றெல்லா சமயாசார்யர்களுக்கும் இல்லாத செல்வாக்கை உடையவராக இருக்கின்றார். இக்காரணம் பற்றியேதான் அன்னாருக்கு ஒப்புயர்வற்ற மரியாதை செலுத்தப்படுகின்றது என்று நான் கருதுகிறேன். ஜகத்குரு "நர்சிங்" பாரதி எழுபத்திரண்டு வயதடைந்த மதிப்பிற்குரிய பெரியார். நாடெங்கும் யாத்திரை செய்தவர். அவருடைய கல்வியறிவு யாவராலும் போற்றப்படுகின்றது. படாடோப மற்ற வாழ்க்கையோடு கருணைக்கும் அறிவுக்கும் கியாதி பெற்றவர். அவருக்குச் செய்யப்படும் மரியாதை மிகப்பொருத்தமானதே"

இந்த பன்னிரண்டாண்டு சஞ்சாரத்தில் தனக்குப்பின் பட்டத்துக்கு வர இருந்த இளவரசு சுவாமிகளுக்குத் தேவையான பயிற்சி யளிக்கப் பட்டது. 1877ல் சிருங்கேரி திரும்பினார்கள். 1879ல் விதேக முக்தி அடைந்தார்கள். அவர் உடல் நீத்தற்குச் சற்றுமுன் ஓர் அற்புதம் நடந்தது. அவர்கள் மண்ணுலகைவிட்டேகு முன் கோகர்ணம் சென்று மஹாபலேச்வரரை தரிசிக்கவேண்டுமென்று சங்கல்பித்தார்கள். சரீரம் அஸ்வஸ்தமாக இருக்கும் நிலையில் ஆசார்யார் "பல்லக்கு தயாராகட்டும். மஹாபலேச்வரரின் பாதங்களை தரிசிக்க சீக்கிரமே செல்லவேண்டும்" என்று கூறினார்கள். பின்பு சற்று நேரம் அசைவற்ற மௌனத்தில் ஆழ்ந்திருந்தார்கள். மறுபடி "நமது சிர்பாதம் தாங்கிகள் எவ்வளவு சமர்த்தர்கள்! இவ்வளவு குறுகிய கால அளவில் என்னை கோகர்ணம் கொண்டுபோய்த் திரும்பக் கொண்டுவந்து விட்டார்களே" என்று மொழிந்தார்கள். இதே சமயத்தில் கோகர்ணத்தில் அம்மடத்து பிரதிநிதி ஆசார்யாள் கோகர்ண ஆலயத்தில் பிரவேசித்ததையும், ஆங்கு வழி

பாடு நடத்தியதையும் கனவில் தோற்றம் கண்டார். இது என்ன பிரமாதம்! ஓர் யோகியால் செய்யக்கூடாதது என்ன இருக்கின்றது? ஜீவபோதம் பிரம்மபோதமாக மாறி பிரம்மத்தில் ஐக்கியமான ஜீவன் முக்தர்கள் இவ்வாறு செய்வது பெரிதா என்ன!

இந்த ஒன்றரை நூற்றுண்டு காலம் மிகக் குழப்பமான காலம். யுத்தங்கள், சைன்யத்தில் கலகங்கள், இராஜ்யங்களின் ஏற்றங்கள், தாழ்ச்சிகள், கொள்ளைகள், பஞ்சங்கள் போன்ற துர்பிக்ஷங்கள் நாட்டில் தாண்டவமாடின. இத்தகைய குழப்பமான காலத்தில்கூட முஸ்லீம் அரசர்கள், சிருங்கேரி ஜகத்குருவை தம்மைக் காக்கும் சக்தியாகக் கருதினர். ஹிந்து அரசர்களோ தம்மை சிருங்கேரி குருவின் சிஷ்யர்கள் என்று கூறிக்கொண்டு அவர்களுக்கு அக்ரபூஜை செய்ய முன்வந்தனர். இந்திய ஸமஸ்தானங்களும் ஆங்கில மாகாண சர்க்கார்களும் ஆசார்யாளின் சஞ்சாரத்துக்கு காவல்படைகள் அனுப்பியும் உபசரித்தும் போற்றினர். இவை யாவும் அகில இந்தியாவிலும் ஒரே மனதாய் ஏற்கப்பட்ட ஆசார்யாளின் அசாதாரண பெருமையையே காட்டுகின்றன. இம்மட்டுமல்ல. லக்ஷக்கணக்கான சாமானிய மக்களும் ஆசார்யாளை தரிசிப்பதால் தாங்கள் கிருதார்த்தர்களானதாகக் கருதினர். ஓர் ருசிகர மான சம்பவம் தஸ்தாவேசுகளில் காணக்கிடைக்கின்றது. ஆசார்யாள் தென் மராட்டிய சீமையில் சஞ்சாரம்செய்துகொண்டிருந்தபோது ஒருநாள் நள்ளிரவில் கழுத்தில் சுருக்கிட்டுக்கொல்லும் சுபாவமுள்ள “தக்கியர்” **(thugs)** என்ற கொள்ளைக்கூட்டம் ஒன்று ஆசார்யாளின் முகாமில் நுழைந்து கொள்ளையடிக்க வந்தது. ஆனால் ஆசார்யாளின் அறிவுரையைச் செவிமடுத்த அவர்கள் உடனே ஆசார்யாளின் சிஷ்யர் களாக மாறி, அவர்களையும் அவர் பரிவாரங்களையும் அடர்ந்த காட்டுப் பிரதேசத்தின் வழியாக அழைத்துச்செல்ல வழிகாட்டிகளாக மாறி விட்டனர். ஹிமயம் முதல் இராமேச்வரம் வரை பல லக்ஷக்கணக்கான இன்னலுற்ற மக்கள் ஆசார்யாளின் ஆசியைப்பெற விழைந்து பெற்று மனச்சாந்தியடைந்தனர்.

# ஒன்பதாம் அத்தியாயம்

## ஆதி சங்கரர் திரும்ப அவதரித்தார்

### *33. ஸ்ரீ சச்சிதானந்த சிவ அபிநவ ந்ருஸிம்ஹ பாரதீ ஆசார்யாள்*

**ஆட்சி 1879–1912**

வம்சம் :— மைசூர் இராஜ்யத்தில் மஹாராஜா மூன்றும் கிருஷ்ண ராஜ உடையாரின் ஆஸ்தான பண்டிதர்களுள், குணிக்கல் ராமா சாஸ்திரி என்பவர் பண்டித திலகமாய் விளங்கினர். நையாயிகக் கொள்கைகளை விளக்கி “சதகோடி” என்ற ஓர் அரிய பிரமாண நூலைச் செய்து சிறப்புப்பெற்ருர். அவர் கல்வியறிவுகளில் ஓர் சிறந்த மேதை. அவருக்குப் பின் அவருடைய ஜ்யேஷ்ட புத்திரர் லக்ஷ்மீ நரஸிம்ஹ சாஸ்திரிகள் அரண்மனைப் பண்டிதராக அமர்ந்தார். அவர் தன் தகப்பனரால் செய்யப்பட்ட “சதகோடி” என்ற கிரந்தத்துக்கு அக் காலத்தில் எழுந்த மறுப்புகளைக் கண்டித்து “சதகோடி மண்டனம்” என்ற நூலைச் செய்தார். குணிக்கல் ராமாசாஸ்திரிகளின் மூன்ருவது புதல்வர் சிவஸ்வாமி 1858ம் ஆண்டில் (பிங்கள வருஷம் பால்குன மாதம்) பிறந்தார். குழவிப்பருவத்திலும் இறைவன் புகழை மழலைச் சொற்களில் உச்சரிப்பார். அவருடைய இரண்டாவது வயதில் தகப் பனரும் ஐந்தாவது வயதில் தாயாரும் காலமானர்கள். அவருடைய சகோதரர் லக்ஷ்மீ நரஸிம்ஹ சாஸ்திரிகளின் பராமரிப்பில் இருந்து கல்வி போதிக்கப்பட்டார். 1866ல் ஸ்ரீ ந்ருஸிம்ஹ பாரதீ ஆசார்யாள் சிவஸ்வாமிக்கு சந்நியாஸம் வழங்கி, ஸ்ரீ சச்சிதானந்த சிவ அபிநவ ந்ருஸிம்ஹ பாரதீ என்ற தீக்ஷா நாமமும் சூட்டினர்கள். ஸந்யாஸ ஸ்விகார தினத்தன்று பகலில் ஆஹார நியமத்துடன் பல வைதிக கர்மாக்களைச் செய்து அஸ்தமனத்திற்குப் பின் களைப்பு மேலிட்டு கிருஷ்ணஜினத்தில் படுத்துக்கொண்ட எட்டு வயதே யுடைய இந்த இளம் சன்னியாஸி அவருடைய குருவே கண்டு ஆச்சர்யப்படும்படியாய் “தூக்கத்தில் ஸர்வோஹம் ஸர்வோஹம்” என்று சொன்னர். இது அவருடைய தீவிர ஆன்ம விகாஸத்தையும் அவருள் மறைந்திருக்கும் பிற்கால மேன்மையையும் புலப்படுத்தியது.

**முதல் சஞ்சாரம்:—**அவருக்கு இளவரசுப்பட்டம் கட்டியதும் இரண்டு ஆசார்யர்களும் சேர்ந்து சஞ்சாரத்துக்குப் புறப்பட்டார்கள். சீரங்கபட்டணத்திலிருந்து புறப்பட்டு நஞ்சங்கூடு சாமராஜ நகரம் வழியாக கோயம்புத்தூர், சேலம், திருச்சிராப்பள்ளி, இராமநாதபுரம், மதுரை, திருநெல்வேலி, செங்கல்பட்டு வட ஆர்க்காடு, சென்னை, கடப்பை, கர்நூல் முதலிய ஜில்லாக்களில் சுற்றுப்பிரயாணம் செய்து விட்டு 1877ல் சிருங்கேரி திரும்பினுர்கள். இந்தப் பன்னிரண்டு ஆண்டு களில் செய்த விஜய யாத்திரையில் இளைய ஆசார்யாளுக்குப் பெரியவாள் தன்னுடைய நேர்முகமான உபதேசத்தாலும், கல்வி போதனையாலும் பயிற்சி அளித்துப் பக்குவப்படுத்தினுர்கள். ஸ்ரீந்ருஸிம்ஹபாரதீ மஹா சுவாமிகள் சித்தியடைந்ததும், ஸ்ரீ சச்சிதானந்த சிவ அபிநவ ந்ருஸிம்ஹ பாரதீ ஆசார்யாள் முப்பத்து மூன்ருவது ஆசார்யாளாக ஸ்ரீ சாரதா தேவியின் வியாக்யான ஸிம்ஹாஸனத்தில் அமர்ந்தார்கள்.

## இரண்டாவது சஞ்சாரம் வட இந்தியாவில்

ஆசார்யாளின் அருளாட்சியின் முதல் ஆறு ஆண்டுகள் இடைவிடாத பூஜையிலும், யோகப் பயிற்சியிலும் கழிந்தன. அவற்றில் பூரணத்துவத் தையும் அடைந்தார்கள். தனது குருநாதரோடு அடிக்கடி ஆன்மீயத் தொடர்பு ஏற்படுத்திக்கொண்டிருந்ததனுல் ஆசார்யாளுக்கு விசேஷ ஆன்ம உணர்ச்சியும் அசைக்கமுடியாத திடநம்பிக்கையும் உண்டாயின.

ஸ்ரீ வித்யா சங்கரர் ஆலயத்துக்கு சமீபகாலத்தில் தங்கவிமானம் அமைத்தளித்த அண்ணு சாகேப் என்ற ஓர் தனவந்த ஜாகீர்தார் தக்ஷிண பிரதேசத்துக்கு ஆசார்யாள் விஜயம் செய்யவேண்டும் என்று கோரியதனுல் 1886 பிப்ரவரியில் ஆசார்யாள் தக்ஷிண பீடபூமி சஞ்சாரத்தைத் துவக்கினுர்கள். முதலில் கோகர்ண க்ஷேத்திரம் சென்ருர்கள். தமது குருநாதர் அந்திமகாலத்தில் தரிசிக்க விரும்பிய மஹாபலேச்வரரை தரிசித்து வழிபட்டார்கள். அதன் பின் ஜம்கண்டியின் சிற்றரசனுயிருந்த இராமசந்திர பட்டவர்த்தன் என்பவர் வருந்தியழைத்த தின் பேரில் அங்கு சென்ருர். அச்சிற்றரசர் ஓர் வைர ஹாரத்தைக் காணிக்கையாகச் செலுத்தியதுமன்னியில் சிருங்கேரியில் நடக்கும் விழாக் களில் ஒன்றின் செலவைத் தான் ஏற்றுக்கொள்வதாக வாக்குறுதியளித்

தார். பின் ஒவ்வொரு ஊராகச் சென்று கோலாப்பூரையடைந்தார். அங்கிருந்த ஸ்தல மடத்து சுவாமிகள் மிக்க மரியாதையுடன் வரவேற்ருர். பூஞ ஸமீபம் வரை சென்ற ஸ்ரீ ஸ்வாமிகள் அதற்கு அப்பால் செல்லாமல் திரும்பிவிட்டார்கள். பெல்லாரியில் இருந்த லிங்காயத வகுப்பினர் முதலில் ஆசார்யாள் ஊர்வலமாக வருவதை ஆக்ஷேபித்தார்கள். ஆனல் பின்பு ஆசார்யாளுடைய உணர்ச்சியூட்டும் சான்னித்யத்தாலும் அன்பொழுகும் வாக் விசேஷத்தாலும் ஈர்க்கப்பட்டவர்களாய் தமது ஆக்ஷேபணையை வாபஸ் வாங்கிக்கொண்டார்கள். ஊர்வலம் சிறப்பாக நடந்தேறியது. இவ்வாறு நான்கு ஆண்டுகள் சஞ்சாரம் செய்துவிட்டு 1890ல் சிருங்கேரியடைந்தார்கள்.

**மூன்ருவது சஞ்சாரம் தென்னிந்தியா :**—அடுத்து இரண்டாண்டுகள், ஆசார்யாள் சிருங்கேரியிலேயே தங்கி தமது சிஷ்யர்களுக்கு உயர்தர வேதாந்த பாடங்கள் போதிப்பதில் ஈடுபட்டு நிம்மதியாகக் காலம் கழித்தார்கள். மஹாராஜா சாமராஜ உடையார் வருந்தி அழைத்ததின் பேரில் 1891ல் மைசூருக்கு விஜயம் செய்தார்கள். ஆங்கு கணபதி பூஜா உத்ஸவத்தில் வழக்கமாக ஆண்டுதோறும் நடந்துவந்த வித்வத் சதஸ் நடத்தினுர்கள். அதில் தென்னிந்தியாவிலிருந்து சிறந்த மேதைகளும் பண்டிதர்களும் பங்கெடுத்துக்கொண்டனர். மஹாராஜாவும் கூட சில நாட்களில் மாலை நிகழ்ச்சிகளில் பிரசன்னமாக இருப்பார். பின் நஞ்சங்கூடு சென்றுவிட்டு குடகுச்சீமையில் காவேரியின் உத்பத்தி ஸ்தானத்தைக் கண்ணுற்ருர்கள். பிறகு சத்தியமங்கலம், கோபிசெட்டி பாளையம் சென்ருர்கள். கோபியில் ஓர் தனவந்தரால் நிர்மாணம் பண்ணப்பட்ட ஓர் ஆலயத்தில் ஸ்ரீசுப்ரமண்யரைப் பிரதிஷ்டை செய்தார்கள். அதன்பின் காவேரி தீரத்திலிருந்த பல அக்கிரகாரங்களுக்குச் சென்ருர்கள். அய்யம்பாளையம் என்ற ஊரில் ஒரு பணக்கார மிராசுதாரின் வேண்டுகோளுக்கிணங்கி ஸ்ரீதண்டபாணி சுவாமி ஆலயம் கட்ட அஸ்திவாரக்கல் நாட்டினுர்கள். அப்பால் கடத்தூர் வந்தார்கள். அங்கிருந்து பழனி, மதுரை, இராமேச்வரம் முதலிய இடங்களுக்கு விஜயம் செய்தார்கள். இராமனுதபுரத்தில் நவராத்ரி பூஜையை நடத்தினுர்கள். அங்கு அரண்மனையிலுள்ள ஸ்ரீராஜராஜேசுவரி தேவாலயத்தில் இதுவரை நடந்துவந்த மிருகபலியை நிறுத்தி ஸ்ரீ சக்ர ப்ரதிஷ்டைசெய்து ஸாத்விகமாக வைதிகமுறையில் பூஜையும் உத்ஸவமும்

நடக்க ஏற்பாடு செய்தார்கள். இவை யாவும் அக்காலத்திலிருந்த இராமனுதபுரத்து ராஜாவின் வேண்டுகோளுக்கு இணங்கி செய்யப்பட்டன. இந்த ஆலயத்தின் நிர்வாகத்துக்கும் நித்தியப்படி பூஜைக்குமாக வருஷம் ஒன்றுக்கு பன்னீராயிரம் ரூபாய் வருமானமுள்ள ஓர் கிராமத்தை இராமனுதபுரம் சேதுபதி இனுமாக வழங்கினுர். அங்கிருந்து காரைக்குடிக்குச் சமீபமான கோயிலூர் சென்ருர்கள். அங்கு நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் என்ற நகரத்தாரால் பரிபாலிக்கப்பட்ட ஓர் அத்வைத மடம் உள்ளது. அதன் பின் செட்டிநாட்டில் பல ஊர்களில் சஞ்சாரம் செய்தார்கள். சிருங்கேரியிலிருக்கும் ஸ்ரீ சாரதா தேவியின் ஆலயத்தைப் புதுப்பிக்க முப்பதினுயிரம் ரூபாய் நகரத்தார்களால் வழங்கப்பட்டது. அங்கிருக்கும்போது மைசூரில் மஹாராஜா சாமராஜ உடையார் காலமான செய்தி எட்டியது. அதைக்கேட்ட ஆசார்யாள் மிக வருந்தினுர்கள்.

திருநெல்வேலி ஜில்லா சென்று தாமிரபர்ணியின் உற்பத்தி ஸ்தானமான பாணதீர்த்தம் சென்று திரும்பினுர்கள். பாண தீர்த்தத்தில் சிங்கம்பட்டி ஜமீன்தார் வரவேற்று உபசரித்தார். திரும்புகாலில் முன்பு அய்யம்பாளேயத்தில் தன்னுல் அஸ்திவாரக்கல் நாட்டிய ஸ்ரீ தண்டபாணி ஆலயம் பூர்த்தியாகி இருந்தது. அதில் ஸ்ரீ தண்டபாணி, ஸ்ரீ பிரசன்ன பரமேச்வரர், ஸ்ரீ பிரசன்ன பார்வதி திருவுருவங்களேப் பிரதிஷ்டை செய்தார்கள். இந்த ஆலயம் அவ்வூர் மிராசுதார் தாண்டவராய பிள்ளேயால் நிர்மாணம் செய்யப்பட்டது (1895 — ஏப்ரல்). பங்களூருக்கு விஜயம் செய்தபோது மைசூர் ரீஜண்டாக இருந்த ராணியின் அழைப்புக் கிடைத்தது. அதன்படி மைசூர் சென்று மஹாராஜா சாமராஜரின் மறைவுக்கு வருத்தம் தெரிவித்ததோடு ராணிக்கு மந்த்ரோபதேசம் செய்து சிவபூஜை செய்து வரும்படி நியமித்தார்கள். சிருங்கேரிக்கு 1895ல் திரும்பி வந்தார்கள்.

ஆசார்யாளின் உதவியாலும், ஆசியாலும், அப்பய்ய தீக்ஷிதரின் வம்சத்தவரின் ஒத்துழைப்பாலும், உபநிஷத் பிரம்மேந்திர பரம்பரையைச் சேர்ந்த மஹாதேவேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் தீக்ஷிதரின் வாழ்க்கையோடு தொடர்புள்ள, விரிஞ்சிபுரத்து மார்க்கபந்து ஆலயத்தை

ஜீர்ணோத்தாரணம் செய்து கும்பாபிஷேகமும் நடத்தி நித்தியப்படி பூஜைக்கும் ஏற்பாடு செய்தார் (1892).

1894—95ல் குவாலியர் மஹாராஜா ஸிந்தே தமது இராஜ்ஜியத்தில், சங்கேச்வர மடத்துக்கும் மேலாக சிருங்கேரி மடத்துக்கே முதல் ஸ்தானம் அளிக்கப்படவேண்டும் என்று பிரகடனம் செய்தார். இதை அந்த சர்க்கார் ஆசார்யாளுக்கு பிரதான காரியதரிசியின் கடிதம் மூலம் தெரிவித்தது.

நிலவருமான விஷயங்கள்:— ஆசார்யாருக்கு, சமஸ்தானத்தின் நிர்வாக அலுவல்களைத் தணிக்கை செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டது. 1800ம் ஆண்டு வாக்கில் ஜகத்குருவால் பிரம்மதாயமாகவும், தேவதாயமாகவும் விடப்பட்ட நிலங்கள் சமஸ்தானத்தின் மொத்த நிலப்பரப்பில் மூன்றில் இரண்டு பங்காக இருந்தது. காலப்போக்கில் இந்த இனும்கள் வெகுவாக பராதீனப் படுத்தப்பட்டு, ஆதியில் அவை எந்தக் காரியத்துக்காக விடப்பட்டனவோ அந்த லக்ஷியம் நிறைவேறாமல் போயிற்று. பெரும்பான்மையான பராதீனங்கள் அதிகார வரம்பை மீறினதாகவும் இருந்தன. அநேக தேவதாய இனும் நிலங்கள் சமஸ்தானத்தின் வருதிக்குக் கட்டுப்படாமல் விலகிப்போயிருந்தன. ஆசார்யாள் இந்த அவல நிலைமையை சீர்திருத்தும்படி மைசூர் மஹாராஜாவைக் கேட்டுக்கொண்டார்கள். திவான் சேஷாத்ரி அய்யர் இதனைப் பரிசீலிக்க முற்பட்டார். மூல தஸ்தாவேசுகள் ஆராயப்பட்டன. வரம்பு மீறிய பராதீனங்கள் ரத்துச் செய்யப்பட்டு நிலங்கள் ஸ்வாதீனப் படுத்தப்பட்டன. சமஸ்தானத்தினுடையவும் இனும்தார்களினுடையவும் சாகுபடிதார்களினுடையவும் உரிமைகள் திட்டப்படுத்தப்பட்டன (1897). இந்த ஸெட்டில்மெண்டினாலும், அதை ஸர்வ ஜாக்ரதையாக அமுலுக்குக் கொண்டுவந்ததாலும் சமஸ்தானத்தின் நில வருமானம் அறுபதினாயிரம் ரூபாயிலிருந்து ஒரு லக்ஷத்துக்கு உயர்ந்தது. இராமநாதபுரம் சேதுபதி யளித்த நிலங்களிலிருந்து எண்ணாயிரம் ரூபாய் வருமானம் கிடைத்தது.

சிருங்கேரிக்குத் திரும்பி வந்த சிறிது காலத்தில் வேத சாஸ்திர பாடங்கள் கற்பிக்க "ஸத் வித்யா ஸஞ்ஜீவினீ" என்ற பாடசாலையை

ஆசார்யாள் நிறுவி, உயர்தரக் கல்வி பயிலும் மாணவர்களுக்கு ஆசார்யாளே வேதாந்த பாடம் போதித்து வந்தார்கள்.

**பண்டித மதனமோஹன மாளவ்யா:—** இவர் ஆசார்யாள் வாரணாஸிக்கு எழுந்தருளி ஹிந்து சர்வகலாசாலைக்கு அஸ்திவாரக்கல் நாட்டவேண்டுமென்று ஓர் நண்பர் மூலம் வேண்டுகோளை அனுப்பினர். ஆசார்யாள் அவ்வளவு குறுகிய கால அளவில் தாம் வாரணாஸிக்குச் செல்வது கூடாத காரியம் என்றும், அதற்குப் பதிலாய் தமது குருநாதரின் பாதுகைகளை அனுப்பியிருப்பதாயும், அவை தன்னுடைய வரவைக் காட்டிலும் விசேஷ அனுக்கிரஹம் அளிக்கும் என்றும் சொல்லி அனுப்பினர்கள்.

ஆசார்யாளின் திரு உள்ளத்தில் தாம் ஏகாந்தமாக இருந்து தபஸ் செய்யவேண்டும் என்ற எண்ணம் உதயமாயிற்று. அதற்காக துங்கா நதியின் தெற்குக்கரையிலிருந்த காட்டின் ஒரு பகுதியைத் திருத்தி ஆங்கு ஓர் ஆச்ரமம் அமைக்கச் செய்தார்கள். அதற்குத் தன் குருநாதரின் பெயரால் "நரஸிம்ஹ வனம்" என்ற பெயரும் சூட்டினர்கள். வருஷத்தில் பல மாதங்கள் ஆசார்யாள் அங்கேயே தங்கிவிடுவார்கள். வெள்ளிக்கிழமை தோறும் ஸ்ரீ சாரதாதேவி ஆலயத்துக்கு வந்து தரிசிப்பார்கள். சாதுர்மாஸ்ய விருதத்தை மடத்தில் வந்து தங்கி அனுஷ்டித்தார்கள். மைசூர் மஹாராஜா கிருஷ்ணராஜ உடையாரும் அவருடைய சகோதரரும், அவருடைய ஆசிரியர் ஃப்ரேசர் என்பவரும் 1898ல் சிருங்கேரிக்கு வந்து தான் பட்டம் வஹிக்குமுன்பு ஆசார்யாளின் அனுக்கிரஹத்தைக் கோரி வந்திருப்பதாகத் தெரியப்படுத்தினர். பின்னல் 1901லும் மஹாராஜா சிருங்கேரிக்கு வந்தார்.

**லோகாயதப்போக்கைத் திருத்துவது; சங்கரரின் கொள்கைகளுக்குப் புத்துயிர் அளிப்பது:—** மக்கள் சமயக் கோட்பாடுகளைப் புறக்கணித்து,விஷயாகார வ்ருத்திகளில் ஆழ்ந்து, பண்டைய கலாசாரப் பண்புகளை, நேரடியாக எதிர்க்காவிட்டாலும், உதாஸீனம் செய்து வருவதைக்கண்டு மனம் நொந்து, இத்தகைய சீர்கேட்டைத் தடுக்கத் தகுந்த வழி கோல வேண்டுமென்ற எண்ணம் ஆசார்யாளின் திருவுள்ளத்

தில் முக்கிய ஸ்தானம் வகித்தது. பல நூற்றுண்டுகளுக்கு முன் இருந்த சமய சமுதாய குழப்பங்களை சங்கரர் அவதரித்து சீர் திருத்தியதை நினைத்தார்கள். ஆசார்யாள் மறுபடியும் ஸ்ரீ சங்கரரின் கொள்கைகளுக்குப் புத்துயிர் அளிக்கவேண்டும் என்று சங்கல் பித்தார்கள். இதற்காக ஸ்ரீ சங்கரர் அவதார ஸ்தலமான காலடியில் ஓர் ஆலயம் நிர்மாணம் பண்ணி அதை ஓர் திவ்ய க்ஷேத்ரமாக்கி நாடெங்கும் சனாதன தர்மக் கொள்கைகள் பரவுவதற்கு அது ஓர் கேந்திர ஸ்தானமாக்கப்படவேண்டும் என்று விரும்பினார்கள்.

இந்தத் திட்டத்தின் முதல்படியாக ஸ்ரீ சங்கரர் அவதரித்த தினத்தை ஏப்ரல்-மே மாதங்களில் "சங்கர ஜயந்தி" உத்ஸவமாக ஐந்து தினங்கள் கொண்டாடப் படவேண்டும் என்று நியமித்தார்கள்.

திவான் சேஷாத்ரி அய்யர் முயற்சியால் பழய காலடி அக்கிரகாரம் இருந்த இடம் தெளிவாக்கப்பட்டது. ஆசார்யாள் "நடுக்காவேரி ஸ்ரீநிவாஸ சாஸ்திரி" என்பவரை அங்கு அனுப்பி ஆண்டு தோறும் சங்கர ஜயந்தி உத்ஸவத்தை நடத்திவர நியமித்தார்கள். மைசூர் திருவாங்கூர் ராஜ்ஜியங்களில் ஹைகோர்ட் ஜட்ஜாக இருந்து ஓய்வு பெற்ற A. ராமச்சந்திர அய்யர் என்பவரிடம் 1905ம் ஆண்டில் தமது ஏஜண்டு ஸ்ரீகண்ட சாஸ்திரிகளை அனுப்பி, திருவனந்தபுரம் மகாராஜா விடம் காலடி அக்கிரகாரத்துக்குச் சேர்ந்த நிலப்பரப்பை ஜாரி பெறும்படி ஆக்ஞாபித்தார்கள். சிறந்த பக்திமானும், பெருந்தன்மை வாய்ந்தவருமான திருவாங்கூர் மஹாராஜா "மூலம் திருநாள்" என்றழைக்கப்பட்ட ஸ்ரீ ராமவர்ம ராஜாவும், அவருடைய திவான் V. P. மாதவராவும் இந்த ஏற்பாட்டுக்கு மனமுவந்து இசைந்தார்கள். இந்திய சர்க்காரால் 1904ல் அமுலுக்குக் கொண்டுவரப்பட்ட பண்டைக் கால சின்னப் (ancient monument) பாதுகாப்புச் சட்டத்தை தமது இராஜ்ஜியத்திலும் அரசர் சட்டமாக்கினர். அதன் ஷரத்தின் கீழ் கைப்பள்ளி நம்பூத்திரி பேரால் பட்டாவாசி தெக்கேமடம் சுவாமியார் என்பவர் வசம் இருந்த குண்டக்கரா புரையிடம் லக்கம் 115 என்ற நிலத்தையும், சங்கரர் பிறந்த இடம், அவர் வீடு இருந்த இடம் அவருடைய தாயாரின் சடலம் தகனம் செய்யப்பட்ட இடம் என்று கண்டுபிடிக்கப்பட்ட குட்டநாடு தாலுகாவில் காலடிக்கரா

மஞ்சப்ரா ப்ரவர்த்தி என்ற இதர நிலங்களையும் திருவாங்கூர் சர்க்கார் வசப்படுத்திக்கொண்டது.

1906ம் ஆண்டு ஜனவரி மாதம் இருபத்திஏழாம் தேதியுள்ள சர்க்கார் அறிக்கையில் ஒரு பகுதி மிக சுவாரஸ்யமானது. அதை ஈண்டு குறிப்பிடுகிறேம். "இந்தத் திட்டத்தை அமுலாக்குவதின் அடுத்தபடியாக இந்திய நாடெங்கும் போற்றி கௌரவிக்கப்பட்ட ஸ்ரீ சங்கரரின் பிறந்த இடத்தைப் பாதுகாத்துக் கண்காணிக்க சர்க்கார் உறுதி செய்துள்ளது. இந்த இடம் குட்டநாடு தாலூகா மஞ்சப்ரா பிரவர்த்தியில் காலடி என்ற கிராமத்திலுள்ளது. அது ஆல்வாயி என்ற நதிக்கரையிலுள்ளது. அதை சர்க்கார் ஸங்கேதம் அதாவது புனித ஸ்தலமாகக் கருதுகிறது. ஆற்றங்கரை ஓரத்தில் ஓர் சுற்றுமதில் உள்ளது. அதுவே ஸ்ரீ சங்கரரின் தாயாருடைய சடலம் தகனம் செய்யப்பட்ட இடமாக கர்ண பரம்பரையாய் வழங்கி வருகின்றது. அதன் ஓரமாக ஓடும் ஆற்றங்கரையில் ஸ்ரீ சங்கரர் தமது தாயாருக்கு அந்திமக் கடன் செய்ததாகவும் கூறப்படுகின்றது."

இந்த இடத்துக்கு அண்மையில் ஸ்ரீ சங்கரரின் தாயார் வழிபட்ட கிருஷ்ணன் கோயிலும் இருக்கிறது. திருவாங்கூர் மஹாராஜா இந்த நிலங்களை சர்க்கார் வசமாக்கி ஆசார்யாளுக்கு ஜாரி செய்து அந்த இடத்தைத் திருத்தி ஆலயத்திருப்பணி செய்ய பத்தாயிரம் ரூபாயும் அளித்தார்.

**நான்காவது சஞ்சாரம்–காலடி :—** ஆசார்யாள், தாம் எடுத்துக் கொண்ட முயற்சி முதற் கோப்பிலேயே வெற்றிகரமாய் முடிந்ததை நினைத்து மகிழ்ந்தார்கள். காலடிக்குச்செல்ல ஆயத்தமானுர்கள். இந்த நாட்களிலெல்லாம் ஆசார்யாள் ந்ருஸிம்ஹ வனத்தில் தனித்திருந்து ஆத்மானந்த அனுபவத்தில் திளைத்திருந்தார்கள். அவர்களுக்கு இந்த ஏகாந்தத்தை விட்டு வெளியே செல்ல மனமில்லை. இக்காலத்தில் அவர்கள் ஸ்ரீ சாரதாதேவியின்மீது பாடிய சுலோகங்கள் அவர்களுடைய மனோ நிலையை எடுத்துக்காட்டுகின்றதோடு அவர் அடைந்த ஆத்மானந்த அனுபவத்தையும் புலப்படுத்துகின்றன. "தாயே! உன் திவ்ய சந்நிதியை விட்டு என்னை ஏன் வெளியே அனுப்புகிருய்? ("கஸ்மாத் தூரீகரோஷி") அடியேன் எனது குருநாதர் ஆலயத்தை

யும், ஸ்ரீ வித்யாதீர்த்தர் ஆலயத்தையும் தரிசித்துக்கொண்டும் ஆத்ம வித்யா விலாஸத்தையோ விவேகசூடாமணி போன்ற பகவத் பாதாளின் கிரந்தங்களையோ பாடிக்கொண்டும் ந்ருஸிம்ஹ வனத்தில் உலாவிக் கொண்டும், ஆற்று மணலில் அமர்ந்தும் என்மனதைப் பரதத்துவத்தில் நிலைக்கச்செய்து நிம்மதியாகக் காலம் கடத்தி வந்தேனே! என்னுடைய குருநாதரால் உன்னிடம் ஒப்படைக்கப்பட்ட சிசுவல்லவோ நான்" என்றும் இன்னும் இவ்வாறு பலவிதமாக உள்ளம் கசிந்து முறையிட்டிருக் கிறார்.

ஆயினும் தாம் எடுத்துக்கொண்ட பெரிய கடமையை முற்றுப் பெறவைக்கவேண்டும் என்ற தாகம் எழுந்தது. அதுவும் ஸ்ரீ சாரதா தேவின் ஆணையே என்று அறிந்தார். பிரயாணத்தைத் துவக்கி னார்கள். சிருங்கேரியை விட்டுப் புறப்படுமுன் ஸ்ரீ சாரதா தேவிக்கு கருங்கல்லால் ஆலயம் நிர்மாணம் பண்ணுவதற்கு அஸ்திவாரக்கல் நாட்டினார்கள். திடீரென்று எதிர்பாராமல் மைசூர் மஹாராஜா தமது பத்தினி, தாயார், சகோதரர் இவர்களோடு சிருங்கேரி வந்தார். மஹாராஜாவுக்கு சிவபஞ்சாக்ஷரம், ஸ்ரீ வித்யா மந்த்ரம் இவற்றை உபதேசித்தருளி ஸ்ரீ சக்ர பூஜை செய்து வரும்படி ஆக்ஞாபித்து, அப்பூஜா விதானத்தையும் போதித்தார்கள்.

1907ம் ஆண்டு பிப்ரவரி மாதம் சிருங்கேரியை விட்டுப் புறப்பட்டு மே மாதத்தில் பங்களூர் வந்து சேர்ந்தார்கள். ஆங்கு அப்போது மைசூர் திவானாக இருந்த **V. P.** மாதவராவ் அவர்களுடையவும் **A.** இராமச்சந்திர அய்யர் அவர்களுடையவும் வேண்டுகோளுக்கு இணங்கி நகரத்தின் மத்தியில் புதிதாக வாங்கப்பட்ட ஓர் இடத்தில் ஸ்ரீ சங்கருடைய உருவச்சிலை ஒன்றை ஸ்தாபித்தார்கள். அதிக துரிதமாய் மைசூர் சீமையை விட்டு கோபிசெட்டிபாளையம் வந்தார்கள். அங்கிருந்து காவேரி தீரத்திலுள்ள பல ஊர்கள் வழியாக திருவானைக்கா என்ற ஜம்புகேச்வரம் சேர்ந்தார்கள். அவ்விடத்தில் கானாடு காத்தான் சிதம்பரம் செட்டியார் என்பவரால் புனருத்தாரணம் பண்ணப்பட்ட ஸ்ரீ ஜம்புகேச்வரர் ஸ்ரீ அகிலாண்டேச்வரி ஆலயங்களின் கும்பாபிஷேகங் களில் கலந்துகொண்டார்கள். ஸ்ரீரங்கத்திலும் திருச்சிராப்பள்ளியிலும் சிறிது தாமதித்துவிட்டு புதுக்கோட்டை வழியாக கோவிலூர்

சென்றார்கள். அப்புறம் சில தினங்கள் கானாடுகாத்தானில் தங்கிவிட்டு காரைக்குடி தேவகோட்டை முதலிய இடங்களுக்குச் சென்று, குன்னக் குடியில் சாதுர்மாஸ்ய விருதத்தை நடத்தினார்கள். திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள சிஷ்ய கோடிகள் ஆசார்யாளுக்கு பிரமாதமான வரவேற்பு அளித்து காலடி ஆலய நிர்மாணந்துக்கு என்று இரண்டு லக்ஷம் ரூபாய் வசூல் செய்து வழங்கினார்கள். ஆசார்யாள் பாபநாசம், பாண தீர்த்தம் சென்று விட்டு மூன்று தினங்கள் கன்னியாகுமரி முனையில் தங்கி ஸ்ரீ கன்னியாகுமரி அம்மனை தரிசித்து வழிபட்டார்கள். 1909ம் ஆண்டில் திருவனந்தபுரத்துக்கு விஜயம் செய்தபோது முன்பு எப்பொழுதும் கண்டிராதமுறையில் கோலாகலமான வரவேற்பு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. திருவனந்தபுரம் மஹாராஜா ஓர் யானையையும், காலடி ஆலய பிரதிஷ்டைக்காக மேலும் பத்தாயிர ரூபாயும் வழங்கினார்.

**காலடி ஆலயங்களின் பிரதிஷ்டை :—**

சமஸ்தான ஸர்வாதிகாரி ஸ்ரீகண்ட சாஸ்திரிகளும், இராமசந்திர அய்யரும், காலடியிலிருந்து ஐந்தாவது மைலில் உள்ள பெரும்பாவூர் என்ற இடத்தில் எதிர்கொண்டு வரவேற்றுக் காலடியில் செய்யப்பட்ட காரியங்களை விவரித்தனர். உடனே ஆசார்யாள் ஸமாதி நிஷ்டையில் ஆழ்ந்துவிட்டார்கள். அதில் ஸ்ரீ சங்கரரின் தாயாரான பாக்யவதி ஆர்யாம்பாள் கருணை பொழியும் புன்முருவல் பூத்த முகமண்டலத்தோடு ஆசார்யாளை வரவேற்பது போன்ற தோற்றம் உண்டானது. காலடிக்கு வந்து சேர்ந்த உடனே ஆசார்யாள் முதலில் அந்தப் புனிதவதியின் சடலம் தகனம் செய்யப்பட்ட இடமான ஓர் அசோக விருக்ஷத்தடிக்குச் சென்றார்கள்.

ஸ்ரீ சங்கரர் காலத்திலிருந்து இதுவரை நெடும் தூக்கத்தில் ஆழ்ந்து கிடந்த காலடி கிராமம் ஆசார்யாளின் வரவினால் புத்துயிர்பெற்று எழுவதுபோல் திகழ்ந்தது. ஆங்கு இரண்டு ஆலயங்கள் எழுப்பப் பட்டிருந்தன. ஒன்று ஸ்ரீசங்கரருடையது. மற்றொன்று ஸ்ரீசாரதாதேவி ஆலயம். ஆசார்யாள் 1910ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 21ம் தேதி திங்கட்கிழமையன்று அவ்வாலயங்களுக்குக் கும்பாபிஷேகம் நடத்தினார்கள். அது ஸௌம்மிய வருடம் மாசி மாதம் சுக்கிலபக்ஷம் துவாதசி திதி கூடிய நன்னாள். இந்த மஹத்தான செயலே ஸ்ரீ

சங்கரரின் தெய்வீக சக்தி மறுபடியும் பூலோகத்தில் திரும்ப எழுந்தருளியதாக நமக்குக்காட்டியது ஸ்ரீ சாரதாதேவியையும் ஸ்ரீ சங்கரரையும் மனதாரத்தொழுது எங்கும் தர்மம் நிலவவேண்டும் மக்கள் சுபிக்ஷமாக வாழவேண்டும் என்று பிரார்த்தித்தார். அன்று அவர் பாடி யருளிய சுலோகங்கள் பக்திஸுதாதரங்கினி என்ற ஸ்தோத்திர நூலில் 185ம் பக்கத்திலும் 93ம் பக்கத்திலும் உள்ளன.

சிவகங்கை மடத்து சுவாமிகளும் இந்த கும்பாபிஷேக வைபவத்தில் கலந்துகொண்டார். ஆசார்யாள் காலடியிலிருக்கும்போது, மைசூர் மஹாராஜாவும், கொச்சி மஹாராஜாவும், அவர்களுடைய திவான்களும் மற்றும் உயர்தர உத்தியோகஸ்தர்களும் அங்கு வந்து ஆசார்யாளை தரிசித்து ஆசிபெற்றனர்.

அங்கிருந்து சிருங்கேரிக்குத் திரும்பிவந்த யாத்திரையில் கொச்சி ராஜ்யம், கோயம்புத்தூர் ஜில்லா, சேலம் ஜில்லா, திருச்சிராப்பள்ளி ஜில்லா வழியாகச் சென்றார்கள். அய்யம்பாளையம் சென்று அங்கு தாண்டவராய பிள்ளையால் நிர்மாணிக்கப்பட்ட ஸ்ரீ தண்டபாணி ஆலயத்தில் ஸ்ரீ சங்கரருடைய திருவுருவத்தைப் பிரதிஷ்டை செய்தார்கள். ஆங்கு ஏற்கனவே ஆசார்யாளின் திருவுருவம் ஸ்தாபிக்கப்பட்டிருந்தது. மைசூர் சீமையில் நந்தி துர்க்கத்தில் தங்கி பின்பு பெங்களூருக்கு வந்து அங்கு புதிதாகக் கட்டப்பட்ட மடத்தில் **"பாரதீய கீர்வாண ப்ரௌட வித்யாபிவர்த்தினி"** என்ற பெயருடன் ஓர் உயர்தர ஸம்ஸ்க்ருதக் கல்லூரி நிறுவினார்கள். அதில் **V. P.** மாதவ ராவ் அவர்களின் நன்கொடையால் எழுப்பப்பட்ட உபாத்தியாயர்களும் மாணவர்களும் தங்கும் விடுதிகளைத் திறந்துவைத்தார்கள். 1911ம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் சிருங்கேரியை அடைந்தார்கள். உடனே ஸ்ரீ சாரதாதேவி ஆலயத்துக்குச் சென்று "அத்ராக்ஷம்" என்று ஆரம்பித்து "கிம் கரணீய மஸ்தி ?" என்று முடியும் நன்றி அறிவுரை சுலோகங்களை அநுப்ராஸமாய்ப் பாடினார்கள். அதாவது நான் தாயாரைக் கண்டுகொண்டேன். இனிச் செய்யவேண்டியது என்ன இருக்கிறது என்று பொருள். காலடிக்குப் புறப்படுமுன் ஸ்ரீ சாரதா தேவிக்குக் கற்கோயில் கட்ட அஸ்திவாரக்கல் நட்டது ஞாபகம் இருக்கலாம். அது முடியும் வரை தற்காலிகமாக மரத்தாலாய ஓர்

ஆலயத்தில் அம்பாளின் பிம்பம் பிரதிஷ்டை செய்யப்பட்டிருந்தது. ஆசார்யாள் சிருங்கேரிக்கு வர சில தினங்களுக்கு முன் அம்மரக் கோயில் தீக்கிரையாயது. ஆனால் ஆச்சரியப்படும் விதத்தில் அம்பாளின் திருவுருவத்தையோ, வஸ்திரங்களேயோ, புஷ்பமாலைகளேயோ நெருப்புத் தொடவில்லை. இதனைக்கேட்ட ஆசார்யாள் சரளமாக நின்ற இடத்தி லேயே ஓர் அழகான சுலோகம் கவனம் செய்தார்கள். (அது பக்தி ஸுதாதரங்கிணியில் 97-வது பக்கத்திலிருக்கிறது) அதன் கருத்துப் பின்வருமாறு. “கேனோபநிஷத்தில் அக்னி வாயு போன்ற தேவதைகள் அவற்றின் மூல காரணமான பரம்பொருளின் ஸன்னிதியில் சக்தி யற்றுப்போகும். அப் பரம்பொருளிலிருந்தே பிரபஞ்சத்தை உருவாக்கும் பஞ்சபூதங்களின் அதிதேவதைகள் தம் ஆற்றலைப் பெறுகின்றன. என்று கூறப்பட்டுள்ளது ஆகையால் சமீபத்திலிருக்கும் மரச்சுவர்கள் எரிந்தபோது ஸ்ரீ சாரதாதேவியின் திருவுருவத்துக்கோ, அவள் அணிந் திருந்த ஆடை ஆபரணங்களுக்கோ புஷ்பமாலைகளுக்கோ கூட அக்னி யால் ஊறு செய்ய முடியவில்லை என்பதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது ?”

வாரிசு நியமனமும் விதேக முக்தியும் :— ஸ்ரீ சிருங்கேரியிலேயே பிறந்தவரும், புத்திக்கூர்மையுடையவரும், சீரிய பண்பாடுகளை உடையவருமாயிருந்த ஸ்ரீ நரஸிம்ஹ சாஸ்திரி என்பவரையே தமக்குப் பின் பட்டத்துக்கு வரவேண்டியவராக ஏற்கனவே சங்கல்பம் செய் திருந்தார்கள். தனது சிஷ்யனாக வரப்போகும் நரஸிம்ஹ சாஸ்திரியை சிறந்த மேதையாக்க தேவியைப் பன்முறை முன்பே பிரார்த்தித்தும் இருந்தார்கள். நரஸிம்ஹ சாஸ்திரி அச்சமயம் பெங்களூரில் உள்ள மடத்தைச்சேர்ந்த ஸம்ஸ்க்ருதக்கல்லூரியில் உயர்தரப் படிப்புப் படித்துக் கொண்டிருந்தார். 1912ம் ஆண்டு மார்ச்சு மாதம் ஆரம்பத்திலேயே தாம் இந்நிலவுலகைவிட்டுச் செல்லவேண்டும் என்று ஆசார்யாள் தீர் மானித்து விட்டார்கள். மஹாராஜாவிடம் தெரிவித்துவிட்டு நரஸிம்ஹ சாஸ்திரியை சிருங்கேரிக்கு அழைத்துவரவேண்டும் என்று ஆக்ஞாபித் தார்கள். அவ்வாறு அவர் வந்ததும் அவருக்கு சந்நியாஸம் வழங்கி பீடாதிபதியாகச் செய்ய ஏற்பாடு செய்தார்கள்.

பரிதாபி ஆண்டு சைத்ர சுக்ல துவிதீயைக்குச் சரியான 1912ம் ஆண்டு மார்ச்சுமாதம் 20ம் தேதியன்று ஆசார்யாள் விதேக முக்தி

அடைந்தார்கள். அவருடைய சரீரம் ந்ருஸிம்ஹ வனத்தில் அடக்கம் செய்யப்பட்டது. அந்த சமாதியின்மீது ஒரு லிங்கமும் பிரதிஷ்டை செய்யப்பட்டது. ஸ்ரீ நரஸிம்ஹ சாஸ்திரி ஏப்ரல் மாதம் 7ம் தேதி அன்று ஸ்ரீ சந்திரசேகர பாரதீ ஸ்வாமிகள் என்ற தீக்ஷா நாமத்தோடு வியாக்கியான பீடம் ஏறினர்கள்.

ஆத்ம ஞானிகளுள் தலைசிறந்தவராயும், பக்தியில் ஆழ்ந்து திளைத்தவராயும், கல்வி அறிவில் ஸரஸ்வதிக்கு ஒப்பானவராயும், யோக சாதனையில் அபார சித்தியடைந்தவராயும் திகழ்ந்த ஸ்ரீ சச்சிதானந்த சிவ அபிநவ ந்ருஸிம்ஹ பாரதீ மகாஸ்வாமிகளை யாவரும் ஒருமுகப்பட்டு ஸ்ரீ சங்கர பகவத் பாதாளின் மறு அவதாரமே என்று கருதிப் போற்றினர்கள். அதற்குத் தகுந்தாற்போல் காலடிக்கு ஏற்பட்டிருந்த சாபத்தை நிவர்த்தி செய்து ஓர் சிறந்த க்ஷேத்திரமாகச் செய்தார்கள். அவருடைய கருணை ததும்பும் முக விலாசமும் பரந்த உள்ளமும் எல்லா சமயத்தவரையும் அவர்பால் ஈர்த்தன. முஸ்லீம் களும், கிருஸ்தவர்களும், ஹிந்துக்களுடன் போட்டி போட்டுக்கொண்டு அவருடைய தூய வாழ்க்கைக்கும் தெய்வீகத் தன்மைக்கும், மரியாதை செய்தனர். ஆசிரியர் ஃப்ரேஸர் என்பார் தான் ஆசார்யாளுடன் நடத்திய சம்பாஷணை, தன்னை வாழ்க்கை நெருக்கடியிலிருந்து விடுவித்து ஆன்ம விகாஸம் அளித்ததாகக் கூறியுள்ளார். சார்லஸ் ஜான்ஸ்டன் என்பார் ஆசார்யானைப்பற்றி "அவருடைய வாழ்க்கை மிகவும் சீரியது. காந்தம் போல் யாவரையும் தன்வயப்படுத்தும் தோற்றமுடையவர். சம்ஸ்க்ருதத்தில் சிறந்த மேதை, வேதாந்தத் தத்துவங்களின் நுட்பங்களில் ஆழ்ந்த அறிவு படைத்தவர்." என்று எழுதியிருக்கிறர்.

அவரிடம் ஈடுபாடுடைய சிற்றரசர்கள் ஆயிரம் ஆயிரமாகக் காணிக்கை செலுத்தினர். ஆனல் பணம் படையாத ஏழை மக்கள் தங்களுடைய மனப்பூர்வமான பக்தியையே காணிக்கையாகச் செலுத்தினர். இதுவே ஸ்வாமிகளுக்கு திருப்தி அளித்தது. படித்த மேதைகளின் முன்பு மணிக்கணக்கில் எவரும் எளிதில் புரிந்துகொள்ள முடியாத சாஸ்திர விசாரணையில் ஈடுபடுவார். ஆனல் பக்தி நிறைந்த சாமான்யர் முன்னிலையில் சாதாரண முறையில் சமய தத்துவங்களைத்

தெளிவாக விளக்குவார். ஆயிரக்கணக்கான மக்கள் அவரிடம் தமது குறைகளைக் கூறி ஆறுதல் அடைந்தனர். எவரும் ஏமாந்து திரும்பியதேயில்லை. இயற்கையாகவே தமக்கு அமைந்திருந்த அபார ஆன்ம சக்தியால் தன்னை அண்டினவர்களுக்கு தரிசன மாத்திரத்தில் ஆறுதல் அளிக்கும் ஆற்றல் அவரிடம் இருந்தது. ஓர் உதாரணம் கூறுவாம் :—திருவாங்கூர் சீமையில் ஆசார்யாள் சஞ்சாரம் செய்து கொண்டிருந்த சமயம் ஓர் ஏழைப் பிராம்மணக் கவிஞர் ஆசார்யாளை அணுகித் தன் ஊமைப் பிள்ளையை பேசவைக்க வேண்டுமென்று பிரார்த்தித்தார். ஆசார்யாள் அந்த பிராம்மணருக்கு ஓர் மந்த்ரம் உபதேசித்தார். அந்த மந்த்ர பலத்தால் அக்குழந்தை பேச ஆரம்பித்தது. இந்த வருத்தாந்தத்தை அக்கவிவாணர் தான் இயற்றிய ஸ்தோத்திரம் ஒன்றில் கூறியிருக்கிறார்.

ஸ்ரீ சங்கர பகவத் பாதாள் போலவே, இவரும் வைதிக தர்மத்தை மக்களுக்கு உபதேசித்தார். சமயத்தின் பெயரால் செய்யப்பட்டுவந்த பல துராசாரங்களைக் கண்டித்தார். அவரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட ஆலயங்களில் தாந்த்ரிக பத்ததிகளுக்குப் பதிலாய் வைதிக முறையில் பூஜா வழிபாடுகள் நடத்துமாறு ஏற்பாடு செய்தார். அவர் பிரதிஷ்டை செய்த விஷ்ணு, சிவன், தேவி, சுப்ரமண்யர், சங்கரர் இவர்களின் திருவுருவங்கள் அவருடைய மந்த்ர சக்தியாலும், தபோ பலத்தாலும் சான்னித்தியம் அடைந்து திகழ்ந்தன.

ஜகத்குரு மஹாஸ்வாமிகளிடம் பல தலைசிறந்த சந்நியாஸிகள் பயிற்சியும் வித்தியாப்பியாஸமும் பெற்றனர். அவர்களில் ஒருவர் கோவர்த்தன பீடத்துத் தலைவரான ஸ்ரீ பாரதீகிருஷ்ண தீர்த்தர் என்பவர். இவருக்குப் பூர்வாச்ரமத்தில் ஸ்ரீ வெங்கடரமண சாஸ்திரி என்று பெயர். இன்னொருவர் ஓர் சித்தராகி, ஸ்ரீ ராமானந்த சரஸ்வதீ என்று தீக்ஷா நாமம் பெற்ற G. ராமசந்திர அய்யர் என்பவர். வள்ளிமலை சித்தர் என்பவர் அர்த்தநாரி என்ற ஸ்ரீ சச்சிதானந்தர். இவர் ஜகத்குரு மஹாஸ்வாமிகளிடம் வைராக்ய நெறியிலும் வானபிரஸ்த ஆச்ரம நெறியிலும் உபதேசம் பெற்றார். ஜகத்குருவின் ஆக்ஞையின் பேரிலும், உதவியின் பேரிலும் ஸ்ரீரங்கம் ஸ்ரீ T. K. பாலஸுப்ரமண்யய்யர் தமது ஸ்ரீ வாணி விலாஸ அச்சகத்தில் ஆதிசங்கரரின் நூல்களைத்

திரட்டி வரிசையாகப் பிரசுரித்தார். அவற்றோடு பல வேதாந்த கிரந்தங்களையும் வெளியிட்டார். ஆசார்யாள் பல சமயங்களில், முக்கியமாய் ஆலயங்களுக்குச் சென்று தரிசித்தபோது பாடிய அநேக ஸ்தோத்திரங்கள் "பக்தி ஸுதா தரங்கிணி" என்ற ஓர் தொகை நூலாக வெளிவந்துள்ளது.

ஆசார்யாளின் வாழ்க்கை வரலாறு மூன்று உள. **N.** ஸ்ரீகண்ட சாஸ்திரிகளால் கன்னட மொழியில் எழுதப்பட்டது, தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு ஸ்ரீ வாணிவிலாஸ அச்சகத்தில் வெளியிடப்பட்டிருக்கின்றது. **B. V.** காமேச்வரய்யர் என்பவர் அதனைத்தழுவி ஆங்கிலத்தில் ஒன்று எழுதியிருக்கிறார். ஆங்கிலத்திலும தமிழிலும் ஓர் சுருக்கமான வாழ்க்கை வரலாறு **R.** கிருஷ்ணஸ்வாமி அய்யரால் எழுதப்பட்டு ஸ்ரீ வாணிவிலாஸ அச்சகத்தில் பிரசுரமாகியிருக்கிறது.

## 34. ஸ்ரீ நான்காம் சந்த்ரசேகரபாரதீ ஆசார்யாள்

**ஆட்சி 1912–1954**

ஏழாவது ஸ்ரீ ந்ருஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகளவர்களால் நன்மதிக்கப் பெற்றவரும், பண்டிதர்களின் திலகமாய் விளங்கியிருந்தவருமான சுப்பா சாஸ்திரி என்ற பெரியார் தமது வாழ்க்கையின் இறுதி நாட்களில் இல்லறம் துறந்து துறவியாகி ஹிமாலயம் சென்று விட்டார். அவருடைய குமாரர் கோபால சாஸ்திரி என்பவரும் தன் தகப்பனர் போலவே கல்வியில் மேதையாக விளங்கினர். அவருடைய தர்ம பத்தினி பதினன்கு குழந்தைகளுக்குத் தாயானள். ஆனல் அவர்களில் கனிஷ்டரான ந்ருஸிம்ஹன் என்பவரைத்தவிர ஏனைய அனைவரும் விண்ணுலகேகினர். ந்ருஸிம்மர், மடத்தின் சர்வாதிகாரியான ஸ்ரீ கண்ட சாஸ்திரிகளின் மேல்பார்வையில் வளர்க்கப்பட்டார். மத்தியதரப்பள்ளியொன்றில் கன்னடமும், ஆங்கிலமும் பயின்றார். அவருடைய புத்திக் கூர்மை ஜகத்குரு ஸ்ரீ சச்சிதானந்த சிவாபிநவ ந்ருஸிம்ஹ பாரதீ சுவாமிகளின் கவனத்தைக் கவர்ந்தது. முதலிலிருந்தே அவரைத் தமக்குப்பின் பட்டத்துக்கு வரக்கூடியவர் என்று கருதியிருந்தார். ஸ்வாமிகள் அவரை ஸத்வித்யா சஞ்ஜீவினி பாடசாலைக்கு மாற்றச் செய்து வேத அத்யயனம் சாஸ்திராப்யாஸம் செய்ய ஏற்பாடு செய்

தார். பின்பு பெங்களூரில் இருந்த ஸ்ரீ மடத்துக் கல்லூரிக்கு அனுப்பி மீமாம்ஸை கற்குமாறு செய்தார். ஆசார்யாள் அடிக்கடி தமக்குப்பின் பட்டத்துக்குவர இருக்கும் ந்ருஸிம்ஹரை, அந்த பீடத்தில் அமர அருகதை உடையவராக கல்வியிலும், பண்பிலும், அறிவிலும் செய லிலும் மேம்படச் செய்யவேண்டும் என்று ஸ்ரீ சாரதா தேவியைப் பிரார்த்திப்பார். ஆசார்யாளின் விருப்பப்படியே ந்ருஸிம்ஹரும் எல்லாத்துறைகளிலும் மேம்பாடுற்று விளங்கினர். அவரே ஆசார் யாளுக்குப்பின் ஸ்ரீ சந்திரசேகரபாரதீ ஆசார்யாள் என்ற தீக்ஷா நாமத்தோடு ஸ்ரீ சாரதாவின் வியாக்கியான ஸிம்ஹாஸனம் ஏறினர்.

**அவர் ஆட்சியின் முதல் சில ஆண்டுகள் :—** ஆசார்யாள் சிறந்த புண்டிதமேதைகளைத் தம் பக்கலில் வைத்துக்கொண்டார்கள். அவர் களில் ஒருவர் விருபாக்ஷ சாஸ்திரிகள் என்பவர். இவர் பிற்காலத்தில் கூடலீ மடாதிபதியானர். விருபாக்ஷ சாஸ்திரிகள் ஆசார்யாளைப் பற்றிக் கூறியதாவது. “ஆசார்யாளுடைய அபார பாண்டித்ய மேதா விலாஸம் இறைவனுடைய அருளால் ஏற்பட்டிருக்கவேண்டுமே யொழிய தன்னுடைய முயற்சி என்று சொல்ல முடியாது.” ஆசார்யாள் மூன்று ஆண்டுகளுக்குள் மிக்கக் கடினமான வேதாந்த சாஸ்திர நுட்பங்களை ஐயந்திரிபற ஓதி உணர்ந்தார்கள் இதுபோன்றே ஏனைய சாஸ்திரங்களிலும் தேர்ச்சி அடைந்தார்கள்.

ஸ்ரீ சாரதா தேவியின் கருங்கற்கோயில் கட்டி முடிக்கப்பட்டது. தமது குருநாதர் ஸ்ரீ சச்சிதானந்த சிவ அபிநவ ந்ருஸிம்ஹ பாரதீ மஹா சுவாமிகளின் சமாதியின் மீது ந்ருஸிம்ஹ வனத்தில் ஓர் அழகிய ஆலயமும் எழுப்பப்பட்டது. 1916ம் ஆண்டில் இரண்டு ஆலயங் கட்கும் கும்பாபிஷேகம் செய்ய ஆசார்யாள் ஏற்பாடு செய்தார்கள். இந்த மஹோத்ஸவத்தில் மைசூர் மஹாராஜாவும் பரோடா தேசத்து கெய்க்வாரின் பிரதிநிதிகளும் ஏனைய அரசர்களின் பிரதிநிதிகளும் கலந்துகொண்டனர். சிருங்கேரி மடத்து சிஷ்யர்கள் ஆயிரக்கணக்காக வந்திருந்து ஆசார்யாளின் ஆசியைப்பெற்றார்கள். ஸ்ரீ ஜகத்குரு ஏகாந்தமாக இருந்து தபஸ் செய்ய விரும்பினர்கள். தம்முடைய குருநாதர் மீதும் ஸ்ரீ சாரதாதேவியின் மீதும் அபார நம்பிக்கைகொண்டு ஏகாந்தமான இடத்தை யடைந்து தபஸ் செய்ய ஆரம்பித்தார்கள்.

சில சமயங்களில் வெளியே வந்து தமது சிஷ்யர்களுக்கு பிரஸ்தானத்ரய பாஷ்யங்களில் பிரவசனம் செய்வார்கள்.

முதல் சஞ்சாரம்:—மைசூர் மகாராஜாவின் வேண்டுகோளை அங்கீகரித்து 1924-ம் ஆண்டு ஜனவரி மாதத்தில் தமது தென்னிந்திய சஞ்சாரத்தைத் துவக்கினார்கள். மைசூர் மஹாராஜா பயபக்தி விச்வாஸத்துடன் பிரமாதமான வரவேற்பு அளித்தார். மைசூர் மஹாராஜாவின் உதவியால் தமது குருநாதர் பிறந்த வீட்டை மடத்துக்காகப் பெற்று அந்த இடத்தில் தமது குருநாதருக்கு ஓர் ஆலயமும் அதையொட்டி ஓர் பாடசாலையும் நிறுவினார்கள். அப்புறம் சத்தியமங்கலம் வந்து சேர்ந்தார்கள். அதிலிருந்து முன்பு தமது குருநாதர் செய்த சஞ்சார மார்க்கமாகவே யாத்திரை நடந்தது. கோபிசெட்டிபாளையம் சென்று பின் காவேரி ஆற்றின் கரையிலுள்ள அக்கிரகாரங்கள் வழியாக ஜம்புகேச்வரம், ஸ்ரீரங்கம், திருச்சிராப்பள்ளி புதுக்கோட்டைசீமை, செட்டிநாடு முதலிய இடங்களுக்கு விஜயம் செய்தார்கள். குன்னக்குடியில் சாதுர்மாஸ்ய விருதத்தை முடித்துக் கொண்டார்கள். பின்பு இராமநாதபுரம், இராமேச்வரம், மதுரை முதலிய இடங்களில் சஞ்சாரம் செய்தார்கள். திருநெல்வேலி ஜில்லாவில் தாமிரபர்ணிக்கரையிலுள்ள கிராமங்களுக்குச் சென்றார்கள். பாபநாசம், பாணதீர்த்தம், திருச்செந்தூர் போனார்கள். பின்பு கன்னியாகுமரி சென்று, அம்பாளை தரிசித்துவிட்டு திருவனந்தபுரம் சென்றார்கள். திருவனந்தபுரம் மஹாராஜா தன்னுடைய அந்தஸ்துக்கும், ஆசார்யாளின் மஹத்துவத்துக்கும் உகந்த சிரிய முறையில் வரவேற்பு அளித்தார். 1927ம் ஆண்டு ஏப்ரல் மாதம் காலடியில் சங்கர ஜயந்தியைக் கொண்டாடினார்கள். அங்கிருந்த பாடசாலையில் வேதாந்த பாடம் கற்பிக்க ஏற்பாடு செய்தார்கள். 1927ம் ஆண்டு இறுதியில் சிருங்கேரி வந்து சேர்ந்தார்கள். ஆசார்யாளின் சஞ்சாரத்தின் சிறப்பும் அதனால் பல்லாயிரக்கணக்கான மக்களுக்குக் கிடைத்த தரிசனமும், ஆசியும், அவற்றால் விளைந்த ஆன்மீய வளர்ச்சியும், சமய சமூக முன்னேற்றமும் இன்றும் பலருடைய ஞாபகத்தில் இருந்துவருகின்றன.

ஏகாந்த வாழ்க்கையும் தபஸ்ஸும்: வாரிசு நியமனம் செய்தது:- நான்கு ஆண்டுகள் விஸ்தாரமான சஞ்சாரம் செய்தபின் ஆசார்யாளின்

உள்ளம் மறுபடியும் ஏகாந்தத்தை நாடியது. உலகத்தையே மறந்த வராகத் தனித்திருந்து கடுமையான தவத்தை மேற்கொண்டார்கள். படாடோபங்களையும் செல்வத்தையும் துறந்தார்கள். தமது ஜீவிதத்துக்கு எவ்வளவு குறைவுதலாகத் தேவைப்படுமோ அதனைமட்டும் ஏற்றுக் கொண்டார்கள். ஆனால் சமஸ்தானத்தின் நிர்வாகம் நடக்கவேண்டுமே! ஸ்ரீ சாரதாம்பிகையின் அ ரு ள ா ல் உந்தப்பட்டு ஸ்ரீநிவாஸன் என்ற பெயருடைய கூர்த்தமதியும், ஆன்மவிகாஸமும், பண்பும் ஒருங்கே நிறைந்த ஓர் இளைஞரைத் தேர்ந்தெடுத்து, அவருக்கு சந்நியாஸம் வழங்கி, ஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த சுவாமி என்ற தீக்ஷா நாமத்துடன் **1931** மே மாதம் 22ம் தேதியில் தமக்கு வாரிசாக நியமித்தருளினார்கள். இளைய பட்டத்து ஆசார்யாளும் அதிவிரைவில் கல்வியில் மட்டுமேயன்றி சமஸ்தான நிர்வாகத்திலும் அதிகத் தேர்ச்சிபெற்று விளங்கினர். அது ஆசார்யாளுக்கு சாந்தியையும் திருப்தியையும் அளித்தது.

ஜகத்குருவின் ஆணைக்கிணங்கி மைசூர் சர்க்கார் ஓர் உயர்தர உத்தியோகஸ்தரை சமஸ்தானத்தின் நி ல ங் க ளி ன் நிர்வாகத்தை வகித்து நடத்தும்படி நியமனம் செய்தது.

ஆசார்யாள் ஏகாந்தத்தை விட்டு வெளியே வருவதேயில்லை. எப்பொழுதாவது வர நேர்ந்தால் அவர்களுடைய திவ்ய தரிசனத்துக் காகக் காத்திருக்கும் நூற்றுக்கணக்கான பக்தர்களைப் பார்த்து ஓர் புன்முறுவல் அல்லது சிரக்கம்பம் செய்வார்கள். அந்த சமிக்ஞையே அவர்களிடம் உபதேசம் கேட்பதற்கு ஒப்பான பலனை நல்கி அனை வருக்கும் சாந்தியை அளித்தது. அவருடைய கடுமையான தபஸ் ஸாலும், அந்தர்முகமான ஆ ன் ம விசாரணையினாலும் அவருடைய சரீரம் மெலிந்துவிட்டது. ஆயினும் அதில் உண்டாகும் தேஜஸ் யாவரையும் ஆட்கொண்டது.

வைத்தியக்கல்வி பெற்றவர்கள் உ ள் ளி ட் ட சில சிஷ்யர்கள் ஆசார்யாளுக்கு மூளைக்கோளாறு ஏற்பட்டிருப்பதாய்க் கருதி அதனை சொஸ்தப்படுத்தவும் முற்பட்டனர். கடைசியில் இது தீராத வியாதி என்று கைவிட்டனர். சில சமயங்களில் யாவரும் பிரமிக்கும்படி ஆசார்யாள் மிகத் தெளிவாக உரையாடுவார்கள். வைத்திய நிபுணர்கள்

சொன்ன ஹேஷ்யங்கள் பொய்த்துவிடும். அவர் உயர்ந்த ஆத்மானந்த அநுபவத்தில் இருக்கும்போது திருவாய் மலர்ந்தருளும் உபதேச மொழிகள் காலம், இடம் முதலிய வரம்புகள் கடந்தனவாக இருக்கும். அவருடைய ஆன்மா பரமான்மாவோடு இரண்டறக் கலந்து அவர் பார்க்கு மிடமெங்கும் நீக்கமற நிறைந்த பிரம்ஹத்தை நேரில் கண்டு களித்தார்கள் என்னலாம்.

**இரண்டாவது சஞ்சாரம்:**— பல சிஷ்யர்களின் பிரார்த்தனைக் கிணங்கி 1938ல் பெங்களூர் சென்று சில மாதங்கள் தங்கினுர்கள். ஆங்கு சங்கரமடத்திலிருந்த சங்கராலயத்துக்கு எதிரே ஸ்ரீ சாரதா தேவிக்கு ஓர் ஆலயம் நிர்மாணம் செய்வித்து அதில் ஆசார்யாளே இருந்து தேவியைப் பிரதிஷ்டை செய்தார்கள். அங்கிருந்து கோயம் புத்தூர் சென்று பின் காலடி அடைந்தார்கள். அங்கு பத்து மாதங்கள் தங்கினுர்கள். திருவாங்கூர் மஹாராஜாவும் அவருடைய கியாதிபெற்ற திவான் C. P. இராமஸ்வாமி அய்யரவர்களு ஆசார்யாள் காலடியில் தங்குவதற்கு வேண்டிய வசதிகள் செய்துகொடுத்தார்கள். அய்யரவர்கள் ஆசார்யாளை இரண்டுமுறை வந்து தரிசித்தார்கள்.

1940ம் ஆண்டில் ஆசார்யாள் ஸ்ரீ சிருங்கேரிக்குத் திரும்பி வந்து மறுபடியும் ஏகாந்தமாக இருக்கச் சென்றுவிட்டார்கள். அவரை யாரும் பார்க்கமுடியாமல் போனுலும் மானஸிகமாக ஆசார்யாளைப் ப்ரார்த்தனை செய்வதின் முலமே கோரிய பலனை அடைந்தவர் பலர். அத்தகைய பிரார்த்தனைகூட இல்லாமல் பலனை அடைந்தவர்களும் உண்டு. ஈண்டு ஓர் கவர்ச்சிகரமான செய்தி கூறுவாம். ஆசார்யாள் ந்ருஸிம்ஹ வனத்தில் ஏகாந்தத்தில் இருந்தபோது அவருக்கு அத்தியாவசியமான சுசுருஷைகளைச் செய்யும் ஒரு சில மடத்து ஊழியர்கள் தவிர வேறு யாரும் அவரை அணுகமுடியாது. ஆசார்யாள் உலக விவகாரங்களையே மறந்து இருந்தார்கள். தினசரிப் பத்திரிகைகளும் படிப்பதில்லை. அப்படியிருக்க 1950 டிஸம்பர் மாதத்தில் நேபாள தேச அரசர் திரிபுவனருக்கு ஓர் நிருபம் வரைந்திருக்கிறுர்கள். அப்போது திரிபுவன அரசர் தம் நாட்டைவிட்டு வெளியேறி இந்தியாவில் அடைக்கலம் புகுந்திருந்தார். பெரிய வல்லரசுகள் அவருக்கு சாதகமாக இல்லை. யாவரும் அவர் அரசபதவியைத் துறந்துவிட்டதாகவே கருதினர்,

அப்படியிருக்க ஆசார்யாளுடைய கடிதத்தில் திரிபுவனருக்கு ஆறுதல் கூறி, அவருடைய கஷ்டங்கள் மூன்று வாரத்தில் சூரியன் முன் பனி போல நீங்கிவிடும் என்றும், ஸ்ரீபசுபதிநாதர் அனுக்கிரகத்தாலும், ஸ்ரீசாரதாதேவியின் இன்னருளாலும் அரசர் தமது இராஜ்ஜியம் சென்று அரசுக்கட்டிலில் அமருவார் என்றும் கண்டிருந்தது. அவ்வாறே திரிபுவனர் திரும்ப ஆட்சிபீடத்தில் ஏறியதோடல்லாமல் நேபாள தேசத்துக்கே ஓர் புது சகாப்தத்தை ஆரம்பித்துவைத்தார். வாழ்க்கையில் பல தரத்தில் இருந்த வேறு சிலரும் இந்தவிதமான அனுக்கிரகத்துக்குப் பாத்திரமானுர்கள். இதனுல் நாம் அறியவேண்டியது என்னெயெனில் ஆசார்யாளின் உள்ளம் அந்தர்முக தியானத்தால் விரிந்து பரந்து உலகெங்கும் வியாபித்து, இருந்த இடத்திலிருந்தே யாவற்றையும் அறியும் அகண்டாகார நிலையை அடைந்து, அதனுல் உண்டாகும் கருணைப்பிரவாகத்தால் சிற்சில சமயங்களில் திரும்ப உலகப்பிரக்ஞை அடைந்து தம்மை ஆச்ரயித்தவர்களுக்கு ஆசியும் எச்சரிக்கையும் அனுப்பும் ஆற்றல் பெற்றிருந்தார் என்பதுதான்.

அநேக சிஷ்யர்கள் ஆசார்யாளை அணுகி 1952 அக்டோபரில் வரும் அவர்களுடைய அறுபதாம் ஆண்டு பூர்த்தி விழாவைக் கொண்டாட அனுமதி கோரியபோது அவர்கள் சம்மதிக்கவில்லை. இந்த விழாவுக்காக பல சிஷ்யர்களால் காணிக்கையாகச்செலுத்தப்பட்ட பணத்தைக்கொண்டு அதிருத்ரஹோமமும், ஸஹஸ்ரசண்டீ ஹோமமும் செய்யலாம் என்று தெரிவித்தபோது ஆசார்யாள் ஒப்புக்கொண்டார்கள். அதன்படியே 1953 ஏப்ரலில் அதாவது அவர்களுடைய ஷஷ்டி அப்த பூர்த்தியான சில மாதங்களுக்குப்பிறகு லோக க்ஷேமத்திற்காக மேலே குறிப்பிடப்பட்ட ஹோமங்கள் யதோக்தமாய் நடந்தேறின. நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் ஏராளமான பக்தர்கள் ஹோமத்தைப் பார்ப்பதற்கும், ஆசார்யாளை தரிசித்து ஆசிபெறுவதற்குமாக சிருங்கேரியில் வந்து குவிந்துவிட்டனர். ஆசார்யாள் “ இந்த ஹோமங்கள் ஸர்வேச்வரனுக்குத் திருப்தி அளித்தன ” என்ற செய்தியை அனுப்பிவைத்தார்கள். அதன் அறிகுறியாக யக்ஞத்தின் பூர்த்தியில் மழையும் பெய்தது.

ஹோமம் நடந்த சில வாரங்களுக்குப் பின் ஆசார்யாள் தமது ஏகாந்தத்திலிருந்து வெளியே வந்தார்கள். தமது யாமூல் அலுவல்களையும் கவனித்தார்கள். 1954 ஆகஸ்டு மாதம் 24ம் தேதியன்று ராஷ்ட்ரபதி

ராஜேந்த்ர பிரசாத் ஆசார்யாளை தரிசிக்க சிருங்கேரிக்கு வந்தார்கள். ஆசார்யாளும், பட்டத்து இளவரசும் அவரை வரவேற்றனர். அவரோடு இரு ஆசார்யர்களும் பல ஆத்மார்த்த விஷயங்களைப்பற்றி சில மணி நேரம் உரையாடினுர்கள். ராஷ்ட்ரபதியின் பவ்யமான சுபாவமும், ஆஸ்திக்யமும், பக்தி சிரத்தையும், மகான்கள் மீது கொண்டிருந்த மரியாதையும் இரண்டு ஆசார்யர்கள் உள்ளங்களையும் பரவசப்படுத்தின. அவருக்கு இருவரும் நல்லாசி வழங்கினுர்கள்.

சில வாரங்களுக்குப்பிறகு ஆசார்யாள் தன் இச்சையாலேயே உலக வாழ்வைத்துறக்க சங்கல்பம் செய்துவிட்டார்கள். பின் நடந்தவற்றை ஆராயும்போது இந்த முடிவுக்குத்தான் வரவேண்டியிருக்கிறது. 1954ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 26ம் தேதி. அன்று ஞாயிற்றுக்கிழமை. ஆசார்யாள் அதிகாலையில் இருள் விலகுமுன்பே துயில் நீத்துத் துங்கா நதியை நோக்கி நடந்தார்கள். கொஞ்சம் தொலைவில் மடத்து சிப்பந்தி ஒருவர் பின் தொடர்ந்து வந்துகொண்டிருந்தார். ஆசார்யாள் துங்கா பிரவாகத்தில் இறங்கினுர்கள். பின் தொடர்ந்த சிப்பந்தி "அங்கு மிக ஆழம்" என்று எச்சரித்தார். ஆசார்யாள் பொருட்படுத்தவில்லை. அந்த ஆழத்தில் இறங்கி சிறிது தூரம் சென்றுர்கள். ஒருதரம் மூழ்கி எழுந்தார்கள். பிராணுயாமம் செய்தார்கள். மறுபடியும் மூழ்கினுர்கள். அவ்வளவுதான். ஆசார்யாளின் சரீரத்தை வெள்ளம் அடித்துக்கொண்டு போவதை சிப்பந்தி கண்டார். அவரும் தண்ணீரில் குதித்து ஆசார்யாளை மீட்க முயன்றுர். அந்த முயற்சியில் அந்த சிப்பந்தி மூர்ச்சையானுர். அவரிட்ட கூக்குரலைக்கேட்ட ஒருவர் விரைந்தோடி வந்து இருவரையும் கரை சேர்த்தார். சிகிச்சையால் பணியாள் உயிர்பெற்றுர். ஆனுல் ஆசார்யாளுக்குச் செய்த சிகிச்சை பயனளிக்கவில்லை. ஆசார்யாளின் சரீரம் நிஷ்டையில் இருப்பதுபோல கால்களை மடக்கி பத்மாஸனத்தில் இருந்ததாகக் கூறப்படுகிறது. சிகிச்சை செய்வதற்காக கைகால்கள் நிமிர்த்தப்பட்டன. வைத்திய பரீக்ஷையில் ஆசார்யாள் தண்ணீரில் மூழ்கி, மூச்சுத்திணறி உயிர்விட்டதாக யாதொரு அடையாளமும் காணமுடியவில்லை. ஆசார்யாள் எப்போதுமே ஆரோக்யமுள்ளவராகவே இருந்தார்கள். அவர்களுடைய மறைவு வைத்திய நிபுணர்களுக்குப்புரியாத புதிராகவே இருந்தது. ஜீவதசையிலும், விதேக முக்தி நிலையிலும் அவர் வைத்தியர்களுக்கு ஓர் பெரும் புதிராகவே இருந்தார்கள்.

ஆசார்யாளுடைய இத்தகைய ஜல சமாதியைச் சிந்திக்கும்போது ஸ்ரீ இராமச்சந்திர மூர்த்தி வைகுண்டம் ஏகுமுன் சரயூ நதிப்பிரவாகத்தில் மறைந்ததும், ரிஷபயோகி காட்டுத்தீயில் பிரவேசித்ததும் நினைவுக்கு வருகின்றன. அவைபோன்று ஆசார்யாளுடைய மறைவும் ஓர் அசாதாரண அப்ராக்ருதச் செயல் என்றுதான் கூறவேண்டும்.

அவர்களுடைய சரீரம் ந்ருஸிம்ஹவனத்தில் அவரது குருநாதரின் சமாதிக்குச் சமீபத்தில் அடக்கம் செய்யப்பட்டது. தற்சமயம் அருளாட்சி நடத்தும் ஆசார்யாள் அந்த சமாதியின் மீது ஓர் அழகிய ஆலயம் அமைத்துக் கும்பாபிஷேகமும் செய்துவைத்தார்கள். ஸ்ரீசந்த்ரசேகரபாரதீ மஹாஸ்வாமிகள் மறைந்த தினம் நவராத்ரி பூஜைக்கு முதல் நாளான மஹாளயபக்ஷ அமாவாசையாகும். அது மிகப்பொருத்தமல்லவா! அவர்கள் ஸ்ரீசாரதா தேவியோடு மஹாலயம் ஆனர் என்பதற்கு இதைவிட வேறு என்ன சான்று இருக்கமுடியும்?

தாம் மறைவதற்கு முன் பல சிஷ்யர்களிடம் தமது மறைவைப்பற்றி சூசகமாகக் கூறியுள்ளார்கள். ஒரு சிஷ்யரிடம் "நீ அடுத்த தடவை சிருங்கேரிக்கு வரும்போது என் உடலைவிட்டு நான் பிரிந்துபோய்விட்டால் அதற்காக நீ வருந்தவேண்டாம். என்னை நீ நினைத்தால் நான் உன்னுடனேயே இருப்பேன்" என்று சொன்னர்.

அவர்களுடைய அருளாட்சியின் முற்பகுதியில் தமது சிஷ்யர்களுக்கும், பொது ஜனங்களுக்கும் ஆத்மார்த்த விஷயமாய்ப் பிரவசனம் செய்து வந்தார்கள். * சிறுகதைகள் மூலமும், தகுந்த உதாரணங்கள் மூலமும் ஆழ்ந்த வேதாந்தக் கருத்துக்களை எளிய முறையில் பாமரரும்

---

*ஸ்ரீசந்திரசேகரபாரதீ மஹாஸ்வாமிகளின் உபந்யாஸங்கள், உபதேசங்கள், சம்பாஷணை இவற்றைத் திரட்டித்தொகுத்து ஆங்கிலத்திலும், தமிழிலும் பல நூல்களாக ஸ்ரீ R. கிருஷ்ண ஸ்வாமி அய்யர் அவர்கள் வெளியிட்டுள்ளார். ஸ்ரீ மஹாஸ்வாமிகளின் ஒப்புயர்வற்ற விவேகசூடாமணி பாஷ்யம் ஸ்ரீமடத்திலேயே பிரசுரிக்கப்பட்டிருக்கிறது, அவர்கள் அருளிய ஸ்தோத்திரங்கள் ஸ்ரீரங்கம் ஸ்ரீவாணீ விலாஸ் பிரஸ்ஸில் அச்சிடப்பட்டுள்ளது. இந்த ஸ்தோத்திரங்கள் தமிழ் உரையுடன் ஸ்ரீசங்கர கிருபா பத்திரிகையில் வெளிவருகின்றன.*

எளிதில் புரிந்துகொள்ளும்படி உரையாடல் செய்வதைக்கண்டு சிறந்த பண்டித மேதாவிகளும் கூட ஆச்சரியப்படுவார்கள். அவர்கள் ஏகாந்தத்திலிருந்து வெளியேவரும் சந்தர்ப்பங்களில் அவரை தரிசிக்க வாய்ப்புப் பெற்ற சிஷ்யர்கள் அவருடைய முகத்தில் ஜொலிக்கும் அசாதாரணமான தேஜஸ்ஸையும், சற்றுமூடிய கண்களையும் கண்டு பக்திப்புளகாங்கிதம் கொண்டவர்களாய்த் தாங்கள் கோரிவந்த இலட்சியங்கள் நிறைவேறி விட்டதாகக்கருதி மனசாந்தியடைந்தனர்.

ஆசார்யாளிடம் வேதாந்த உபதேசம்பெற்ற பீடாதிபதிகள் நெலமாவு மடத்து ஆசார்யரான ஸ்ரீ கமலானந்த ந்ருஸிம்ஹபாரதியும், அவருடைய வாரிசும், சகடபுரத்து மடாதிபர் ஸ்ரீராமசந்திர தீர்த்தர் என்பவர்களுமாவர்.

## 35. ஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த ஆசார்யாள்

ஆங்கிலேய ஆட்சியில் நமது நீதிஸ்தலங்கள் திருத்தி அமைக்கப் படுவதற்கு முன்பு, நம்நாட்டு நீதிபதிகள் ஸ்ம்ருதி, தர்மசாஸ்திரங்களில் வல்லுனராய் சிறந்த அறிவுள்ளவர்களாக இருந்தார்கள். அவ்வாறு மைசூர் "அதாலத்" கோர்ட்டு நீதிபதியாக இருந்தவர்களில் ஒருவர் கைப்பு சீதாராம சாஸ்திரி என்பார் அவருடைய பௌத்திரர் கைப்பு ராமசாஸ்திரி என்பவர். அவர் மிகுந்த பக்திமானுகவும் சாந்த குணமுடையவராகவும் இருந்தார். அவருக்கு நலவருஷம், ஐப்பசி மாதம் கிருஷ்ணபக்ஷம் சதுர்த்தசி தீபாவளியன்று சுவாதி நக்ஷத்திரத்தில் அதாவது 1917-ம் ஆண்டு நவம்பர் மாதம் 13-ம் தேதியில் ஓர் ஆண் மகவு பிறந்தது. அதற்கு ஸ்ரீநிவாஸன் என்று நாமகரணம் சூட்டினர். கர்நாடக சங்கீதத்தில் அபாரத் தேர்ச்சிபெற்ற கீர்த்தன கர்த்தா ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள் இந்தக் குடும்பத்தின் ஓர் கிளையைச் சேர்ந்தவர் என்பதையும் ஈண்டு குறிப்பிடலாம்.

சிறு பிராயத்திலிருந்தே ஸ்ரீநிவாஸன் லௌகிகப்பற்றற்றவராயும், குடும்பத்தில் ஒட்டு இல்லாதவராயும் பஜனை செய்வதிலும், பூஜை செய்வதிலும், சமய நூல்களை ஆராய்வதிலும் ஈடுபட்டிருந்தார். ஸ்ரீசந்திரசேகர பாரதீ ஸ்வாமிகள் இவருடைய மனோநிலையை அறிந்து இவரே தமக்குப் பின் பட்டம் வகிக்கக்கூடியவர் என்று தீர்மானம் செய்ததில் ஒன்றும்

ஆச்சரியம் இல்லை. இதுவே ஸ்ரீ சாரதாதேவியின் சங்கல்பம் என்பதையும் அறிந்து அப்பொழுது பங்களூரில் நடுத்தரப்பள்ளியில் வாசித்துக் கொண்டிருந்த ஸ்ரீநிவாஸனை சிருங்கேரிக்கு அழைத்துவரச்செய்து மேல் படிப்பும், சாஸ்திரப்பயிற்சியும் கொடுக்க ஏற்பாடு செய்தார்கள். ஸ்ரீசாரதா தேவியின் சன்னிதியில் அவருக்கு உபநயனம் செய்விக்கப்பட்டது.

1931ம் ஆண்டு மே மாதம் 22-ம் தேதியன்று ஸ்ரீ சந்திரசேகரபாரதீ ஆசார்யாள் ஸ்ரீநிவாஸனுக்கு சந்நியாஸம் வழங்கி ஸ்ரீ அபிநவ வித்யா தீர்த்தர் என்ற தீக்ஷா நாமமும் சூட்டினுர்கள். பங்களூர் ஸ்ரீமடம் ஸம்ஸ்க்ருதக்கல்லூரியில் பேராசிரியராக இருந்து வந்த ஸ்ரீ **V. S.** இராமசந்திர சாஸ்திரிகளிடம் ‘ நியாயம் ’ முதலிய சாஸ்திர பாடம் கேட்டார். இருபத்திநான்கு ஆண்டுகள் ஸ்ரீ சந்திரசேகர பாரதீ மஹா ஸ்வாமிகளோடு நெருங்கிய தொடர்பும், அவர்களால் நேர்முகமாகப் பயிற்சி அளிக்கப்படும் வாய்ப்பும், அவர்களுடைய உபதேசமொழிகளைச் செவி மடுக்கும் பாக்யமும் ஸ்ரீ வித்யாதீர்த்தர் அடைந்தது பெரும் சிறப்பல்லவா ? அத்தகைய சூழ் நிலையில் ஸ்ரீ வித்யாதீர்த்தர் அதி விரைவிலேயே சகல சாஸ்திர சம்பன்னரானதுமன்றி ஆத்ம சாக்ஷாத்கார அநுபூதியும் அடைந்தார். அதோடு சிருங்கேரி சமஸ்தான நிர்வாக நுணுக்கங்களையும் நன்கறிந்தார். அவருடைய மேல்பார்வையும், ஆலோசனையுமில்லாமல் மடத்தில் எதுவும் நடக்காது. அவரும் தம் கடமையைச் செய்வதில் மிகவும் கண்டிப்பாக இருந்தாரேனும், யாவரிடத்திலும் அன்புடன் பழகுவார். அவருக்கு ஸம்ஸ்க்ருதத்தில் இருந்த அபாரபாண்டித்தியம் மிகஅற்புதமானது. அவரோடு பண்டித மேதைகள் சர்ச்சை செய்யும்போது பார்ப்பதே பரமானந்தமாக இருக்கும். அதோடு தமிழ், தெலுங்கு. கன்னடம், ஹிந்தி முதலிய மொழிகளிலும் தேர்ச்சியுண்டு.

இவர்கள் இளவரசாக இருந்தபோது ஒரு சமயம் இவர் ஸ்ரீ சச்சிதானந்த சிவ அபிநவ ந்ருஸிம்ஹபாரதீ ஸ்வாமிகள் போன்று மேன்மையும், கியாதியும் அடைவார் என்று ஸ்ரீ சந்திரசேகரபாரதீ ஸ்வாமிகள் கூறினுர்கள். இவர்களுக்கு முன்னிருந்த இரண்டு ஆசார்யார்களிடம் கண்ட ஆன்ம விகாஸத்தையும், தபஸ்ஸின் பலத்தையும், மக்கள்மீது கொண்ட பரம கருணையையும், யாவரையும் சீர்திருத்தி

மேம்படச்செய்யும் திறனேயும் இவர்களிடம் ஒருங்கே அமைந்திருப்பதை சிருங்கேரி மடத்து சிஷ்யர்கள் உணர்ந்தனர். அக்காலத்தில் உப ராஷ்ட்ரபதியாகவும், தற்காலம் ராஷ்ட்ரபதியாகவும் இருக்கும் ஸர்வபள்ளி ராதாகிருஷ்ணன் அவர்கள், ஆசார்யாளே சந்தித்து வேதாந்த விஷயமாய் உரையாடல் செய்தபோது ஆசார்யாளின் அபார ஞானத்தையும், அபூர்வ வாக்கு வன்மையையும் நேரில் கண்டு அனுபவித்து ஆனந்தமடைந்தார். 1954ல் ராஷ்ட்ரபதி ராஜேந்திரபிரஸாத் சிருங்கேரிக்கு வந்திருந்தபோது அக்காலத்தில் இளவரசாக இருந்த நமதாச்சார்யாளின் அதிசயிக்கத்தக்க புத்திக்கூர்மையையும், சீரிய வாழ்க்கையையும் கண்டு வியந்தார். ஆகவே 1931 மே மாதத்திலிருந்து 1954 செப்டம்பர் மாதம் வரை சாரதா பீடம் இரண்டு பெரிய மஹான்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது.

தமது குருநாதரின் மறைவு இளைய ஆசார்யாளுக்கு மிக்க வருத்தத்தை அளித்தது. அடுத்த மூன்று மாதங்கள் குருநாதர் சமாதியில் பூஜை நடத்துவதிலும், தபஸ் செய்வதிலும் காலம் கழித்தார்கள். அவர்களுடைய பட்டாபிஷேகம் மாமூல்படி 1954 அக்டோபர் 16ம் தேதியில் நடைபெற்று, வியாக்கியான பீடத்தில் 35வது ஸிம்ஹாஸனாதிபதியாக அமர்ந்தார்கள். இந்த வைபவத்துக்கு அநேக சிஷ்யர்களும், பல சர்க்கார் உத்தியோகஸ்தர்களும் வந்திருந்தனர். ஹரிஹரபுரத்து மடத்தின் ஆசாரியரும் வந்திருந்தார். 1955ம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் துங்காநதியின் உற்பத்தி ஸ்தானத்துக்கு யாத்திரை போனார்கள். தென்னிந்திய சிஷ்யகோடிகளின் விருப்பத்துக்கிணங்கி சஞ்சாரம் செய்யப் புறப்பட்டார்கள். 1956 மார்ச்சு 14ம் தேதியில் கலச என்ற ஊருக்கு விஜயம் செய்தார்கள். தென் கன்னட ஜில்லாவில் கொல்லூரில் ஸ்ரீமூகாம்பிகை சந்நிதியில் தங்க பில்வ தளங்களால் அர்ச்சித்து ஆராதனை நடத்தினார்கள். பின்பு தர்மஸ்தலம், மஞ்சுநாதம் மங்களூர் முதலிய க்ஷேத்ரங்கள் சென்று ஆங்காங்குள்ள மூர்த்திகளையும் தரிசித்துக் கொண்டு கண்ணனூர், கோழிக்கோடு, பாலக்காடு, சித்தூர் முதலிய ஊர்களையும் அடுத்துள்ள கிராமங்களையும் பார்த்தார்கள். குருவாயூரில் கிருஷ்ணனை தரிசித்தார்கள். சிவன் கோயில்களுக்குப் பெயர்போன திருச்சூரில் தெற்கே மடத்துத்தலைவர் ஸ்ரீநம்பூத்திரி ஸ்வாமி என்பவர் ஆசார்யாளே வரவேற்று உபசரித்தார்.

காலடியில் மூன்று மாதங்கள் தங்கி வியாஸ பூஜை, சாதுர்மாஸ்ய விரதம் நவராத்ரி பூஜை இவற்றை நடத்தினுர்கள். ஆசார்யாள் காலடியிலிருக்கும்போது ஆயிரக்கணக்கான பக்தர்கள் ஆசார்யாளின் ஆசியைப் பெற வந்தனர். அவர்களுள் திருவாங்கூர் மஹாராஜா ஸ்ரீ சித்திரைத் திருநாள் என்ற பாலவர்மராஜாவும் திருவாங்கூர் சமஸ்தான ஆலோசகரும் குறிப்பிடத்தகுந்தவர்கள். மஹாராஜா பதினுயிரம் ரூபாய் காணிக்கையாகச் செலுத்தினுர். கணேச சதுர்த்தி சமயம் ஸ்ரீ மடவழக்கப்படி ஓர் வித்வத்ஸதஸ் கூட்டினுர்கள். வந்திருந்தவர்களின் பாண்டித்யத்துக்குத் தக்கபடி தாராளமாய் சன்மானம் செய்தார்கள். இராமகிருஷ்ண மடத்துத் தலைவரின் அழைப்பிற்கிணங்கி அவர்களால் நடத்தப்படும் சங்கரர் கல்லூரியையும், இதர ஸ்தாபனங்களையும் பார்வையிட்டார்கள். கொச்சி ராஜா ஆசார்யாளை விரும்பி அழைத்துத் தன் அரண்மனையிலேயே தன் விருந்தினராக வைத்து உபசரித்தார். மஹாராஜாவின் பாண்டித்யத்தைப்போற்றி அவருக்கு “அபிநவ தர்க்க வாகீசர்” என்ற பட்டமும் வழங்கினுர்கள்.

பின்பு திருவாங்கூர் சீமையில் வடக்கே ஆல்வாயி பரூர் முதல் தெற்குக் கோடி வரை சஞ்சாரம் செய்தார்கள். திருவனந்தபுரத்தில் மஹாராஜாவாலும் கவர்னர் B. இராமகிருஷ்ணராவ் அவர்களாலும் தகுந்த மரியாதையுடன் வரவேற்கப்பட்டார்கள். ஆங்கு ஸ்ரீபத்மநாப ஸ்வாமியை தரிசித்தார்கள். கன்னியாகுமரியில் அம்பிகையை தரிசித்து தக்கோர் பலருக்கு தானம் வழங்கினுர்கள். திருநெல்வேலி ஜில்லாவில் பத்து மாதங்கள் சஞ்சாரம் செய்தார்கள். வள்ளியூர், களக்காடு, சேரன்மஹாதேவி, கல்லிடைக்குறிச்சி, கடையம், தூத்துக்குடி முதலிய பல இடங்களுக்கு விஜயம் செய்து பல ஆயிரக்கணக்கான பக்தர்களை ஆசீர்வதித்தார்கள். திருநெல்வேலி நகரத்தில் சங்கர ஜயந்தி உத்ஸவம் நடத்தினுர்கள். திருச்செந்தூரில் ஸ்ரீசுப்ரம்ஹண்ய ஸ்வாமிக்குத் தங்க பில்வத்தால் அர்ச்சித்து அவரை வழிபட்டார்கள்.

1957ம் ஆண்டில் வியாஸபூஜையையும் சாதுர்மாஸ்ய விருதத்தையும் இயற்கை வனப்பு மிகுந்த திருக்குற்ருலத்தில் நடத்தினுர்கள். குற்ருலத்திலிருக்கும் சித்தேச்வரீ பீடத்து ஆசார்யராக இருக்கும் திரிவிக்கிரம ராமானந்த பாரதீ என்பவர் ஆசார்யாளை அடிக்கடி வந்து

தரிசித்தார். அதோடு கணேச சதுர்த்தி வித்வத் ஸதஸ்ஸிலும் கலந்து கொண்டார். செங்கோட்டையில் நவராத்ரி உத்ஸவம் கொண்டாடப் பட்டது. பின்பு இராமநாதபுரம் ஜில்லாவில் ஸ்ரீவில்லிபுத்தூர், இராஜ பாளையம் முதலிய பல இடங்களுக்குச் சென்றுவிட்டு இராமநாதபுரத்துக்கு எழுந்தருளினர்கள். அங்கிருந்து நவபாஷாணம், தேவிபட்டினம் முதலிய ஊர்கள் சென்றுவிட்டு படகில் ஏறி இராமேச்வரம் சென்றார்கள்.

சிருங்கேரி மடத்து ஆசார்யர்களை மண்டபத்திலிருந்து பாம்பனுக்கு படகில் ஏற்றிச்செல்லும் உரிமையை ஓர் முஸ்லிம் தனவந்தர் குடும்பம் பரம்பரை பாத்தியமாய் அனுபவித்து வருகிறது என்பது குறிப்பிடத் தக்கது. இராமேச்வரத்தில் ஸ்ரீஇராமநாதருக்கும் ஸ்ரீபர்வத வர்த்தனி அம்பிகைக்கும் மிகச்சிறப்பாக வழிபாடு நடத்தினர்கள். தனுஷ்கோடியில் புனித நீராடி பலருக்கு தானங்கள் வழங்கினர்கள். அப்பால் சிவகங்கை, தேவகோட்டை. காரைக்குடி, கோயிலூர், பள்ளத்தூர், கண்டனூர், கோட்டையூர், குன்னக்குடி, திருப்பத்தூர், முதலிய இடங்களுக்கும் இன்னும் செட்டி நாட்டின் இதர ஊர்களுக்கும் சென்றார்கள். ஆங்காங்கு அதிவிமரிசையாய் வரவேற்கப்பட்டு பெருமளவில் உபசரிக்கப் பட்டார்கள். ஆயிரக்கணக்கான பக்தர்கள் வந்து தரிசித்து ஆசி பெற்றனர். பின்பு அறந்தாங்கி சென்று அங்கிருந்து ஆவுடையார் கோயில் என்ற பெருந்துறை போய் ஸ்ரீ ஆத்மநாதரைத் தரிசித்தார்கள். பெருந்துறையில் அங்கிருந்த சைவ மடத்துத் தம்பிரான் ஸ்வாமி ஆசார்யாளை வரவேற்றார். தஞ்சாவூர் ஜில்லாவாசிகளான பல பக்தர்கள் வந்து தரிசித்தனர். புதுக்கோட்டையில் ராஜாவின் அரண்மனையில் தங்கினர்கள். புதுக்கோட்டைக்கு அண்மையிலுள்ள பல கிராமங்களில் சஞ்சாரம் செய்துவிட்டு திருச்சிராபபள்ளி ஜில்லாவில் குளித்தலைக்கும் ஏனைய சுற்றுப்புற கிராமங்களுக்கும் சென்றார்கள். அதன்பின்பு மேலூர் வந்து அங்கிருந்து 1958ம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் மதுரைக்கு விஜயம் செய்தார்கள்.

மதுரையில் அமோகமான வரவேற்பு அளிக்கப்பட்டது. சகல விதமான ஆசார உபசாரங்களும் பெருமளவில் நடந்தன. அங்கு ஸ்ரீ சுந்தரேசரையும் ஸ்ரீமீனாக்ஷி அம்மையையும் தரிசித்தார்கள். சங்கர ஜயந்தியையும் அங்கேயே கொண்டாடினர்கள். மதுரையில் ஆயிரக்

கணக்கான மக்கள் திரண்டு வந்து ஆசார்யாளை தரிசித்தும், அவர்களுடைய பிரவசனங்களைக் கேட்டும் கிருதார்த்தரானுர்கள். பின்பு சோழவந்தான் திண்டுக்கல் முதலிய ஊர்களுக்குச் சென்று விட்டு பழநி வந்தடைந்தார்கள். ஆங்கு ஸ்ரீ தண்டபாணியைத் தரிசித்து, லோக க்ஷேமத்தைக் கோரி விரிவான முறையில் ஆராதனை நடத்தினுர்கள். பழநியிலிருந்து 1958 ஜுலை மாதம் 1ம் தேதி காலடிக்கு வியாஸ பூஜை நடத்துவதற்குச் சென்ருர்கள்.

காலடியில மூன்று மாதம் தங்கியபோது திரள் திரளாக பக்தர்கள் வந்து தரிசித்த வண்ணம் இருந்தார்கள். கேரள நாட்டு கவர்னர் B. ராமகிருஷ்ண ராவ் அவர்களும், பீஹார் நாட்டு முந்திய கவர்னர் R. R. திவாகர் அவர்களும் வந்து தரிசித்தார்கள். கணபதி பூஜை வித்வத் ஸதஸ்ஸில் பல பண்டித மேதைகள் பங்கெடுத்துக்கொண்டனர். அவர்களோடு கொச்சி மஹாராஜா ஸ்ரீ ராமவர்ம பரீக்ஷித்தும் கலந்து கொண்டார். ஸதஸ் மிக்கச் சிறந்த முறையில் நடந்தேறியது. காலடியை விட்டுப் புறப்பட்டு நல்லெபிள்ளி வழியாகக் கொல்லங்கோடு வந்தார்கள். ஆங்கு கொல்லங்கோடு மஹாராஜா தகுந்த முறையில் உபசரணை செய்தார். பின்பு பாலக்காடு வழியாகக் கோயம்புத்தூருக்கு அக்டோபர் மாதம் வந்து சேர்ந்தார்கள். தமது குருநாதர் ஸ்ரீ சந்த்ர சேகர பாரதீ மஹாஸ்வாமிகளின் ஆராதனையும் நவராத்ரி மஹோத்ஸவமும், சதசண்டீ ஹோமமும் அதி விமர்சையாக நடந்தன. இந்த வைபவங்களில் பல்லாயிரக் கணக்கான ஆஸ்திகர்கள் கலந்துகொண்டனர். உதகமண்டலத்தில் ஸ்ரீ C. P. இராமஸ்வாமி அய்யரின் விசேஷ விருந்தினராக இருந்தார்கள். அவ்விடத்தில் மைசூர் மஹாராஜா ஸ்ரீ ஜயசாமராஜ உடையார் வந்து ஆசார்யாளைத் தரிசித்தார். அங்கிருந்து பைகாரா குந்தா ஜல மின்சார நிலையங்களைப் பார்வையிட்டு விட்டு 1958 டிசம்பரில் நீலகிரி, கோயம்புத்தூர் ஜில்லாக்களில் பல கிராமங்களில் சஞ்சாரம் செய்தார்கள்.

இந்த சஞ்சார காலத்தில் ஆசார்யாளை பல மகாராஜாக்களும், கவர்னர்களும் தென்னுட்டு மந்திரிகளும் ஆங்காங்கு வந்து தரிசித்தனர். ஸம்ஸ்கிருத மொழியின் அபிவிருத்திக்காக இந்திய சர்க்கார் வகுத்த திட்டத்தைப்பற்றி ஆசார்யாளை ஆலோசனை கேட்க ஸம்ஸ்க்ருத கமிஷன் வந்து பேட்டி கண்டது.

சென்ற இடமெல்லாம் நமது புராதன ஆலயங்களைப் புனருத் தாரணம் செய்யவேண்டிய அவசியத்தையும், அவற்றைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பையும், அவற்றில் சாஸ்த்ரீய ரீதியில் பூஜைகள் நடத்தவேண்டிய முக்கியத்துவத்தையும் மக்களின் மனதில் ஆழப் பதிய வைக்கும் தோரணையில் ஆசார்யாள் பிரசங்கங்கள் செய்தார்கள். நமது சநாதன கலாச்சாரம் நமது ஆலயங்களையும் சமய ஸ்தாபனங் களையுமே ஆதாரங்களாகக் கொண்டு வளர்ந்தது என்று அடிக்கடி கூறி அறிவுறுத்துதலில் ஆசார்யாளுக்குச் சலிப்புத் தட்டியதேயில்லை. அச்வத்தபுரத்திலும் தென் கன்னடத்தைச் சேர்ந்த உள்ளல் என்ற இடத்திலும் ஸ்ரீ சங்கரரின் உருவங்களைப் பிரதிஷ்டை செய்தார்கள். சிவகங்கையில் ரத்ன கர்ப கணபதியைப் பிரதிஷ்டை செய்தார்கள். விரவநல்லூரில் புதிதாகக் கட்டப்பட்ட மடத்தில் ஸ்ரீ சாரதாதேவியைப் பிரதிஷ்டை செய்தார்கள். திருச்சிராப்பள்ளி கோட்டையிலிருக்கும் வரத வேங்கடேசப் பெருமாள் ஆலயத்துக்கு ஓர் லக்ஷ்மீ யந்த்ரம் அனுப்பி வைத்தார்கள். வைகாநஸ சம்பிரதாயப்படி ஆராதனை நடக்கும் அக்கோயிலில் 1956 மே மாதம் நடந்த ஸம்புரோக்ஷணத்தின்போது இந்த யந்த்ரம் ஸ்ரீ வேங்கடேசப்பெருமாளின் கர்ப்ப கிருஹத்திலேயே பிரதிஷ்டை செய்யப்பட்டது. அரிமலம் என்ற ஊர் மக்கள் அங்குள்ள சிவாலயத்தின் கும்பாபிஷேகத்தை ஆசார்யாளின் ஆலோசனை கேட்டும் அவர்கள் முன்னிலையிலும் நடத்திக் கிருதார்த்தரானார்கள். இன்னும் அநேக இடங்களில் ஆலய உத்ஸவங்களிலும், வழிபாடுகளிலும் கலந்து கொண்டார்கள். ஆசார்யாளின் ஸாந்நித்யமே, அந்த உத்ஸவங் களுக்கும், வழிபாடுகட்கும் புனிதமளித்தது என்னலாம்.

ஆசார்யாள் கோயம்புத்தூருக்கு விஜயம் செய்ததின் ஞாபகார்த்த மாக ஓர் சங்கரமடம், ஸ்ரீசாரதாதேவி சந்நிதியுடன் இணைக்கப்பட்டதாய்க் கட்டப்பட்டிருக்கிறது. அதற்கு 1959-ஆம் பிப்ரவரி-மீ 9உ ஸ்ரீ C. P. இராமஸ்வாமி அய்யர் அஸ்திவாரக்கல் நாட்டினார். இம்மடத்தில் ஓர் பெரிய கூடமும், வெளியூர் வாசிகள் வந்தால் தங்குவதற்கு அறைகளும் கட்டப் பட்டிருக்கின்றன. தாராபுரத்திலும், ஈரோடிலும் நகரமன்றத்தாரால் வரவேற்புரை வாசித்து அளிக்கப்பட்டன. ஈரோடில் மஹாசிவராத்ரி பூஜையை நடத்தினார்கள். பவானியில் முகாம் செய்தபோது மேட்டூர்

அணைக்கட்டைப் பார்வையிட்டார்கள். மேட்டூர் நகரத்தில் மின்சார இலாகா இன்ஜினியர்களும், உத்தியோகஸ்தர்களும், ஸ்தலவாசிகளும் சேர்ந்து ஆசார்யாளுக்குப் பிரமாதமான வரவேற்பு அளித்தார்கள். அதோடு தொழிற்சாலை, அணைக்கட்டு, மின்சார நிலையம், முதலியவற்றை யும் சுற்றிக்காட்டினர். காவேரியின் வலது கரையிலுள்ள கிராமங்களின் வழியாக 1959ம் ஆண்டு மார்ச்சு மாதம் கரூர் விஜயம் செய்தார்கள்.

### *ஆசார்யாளின் சஞ்சாரத்தின் தொடர்ச்சி

**1959 மார்ச்சு முதல் 1962 டிஸம்பர் முடிய**

1959ம் ஆண்டு மார்ச்சு மாதம் இறுதிவரை கரூரில் தங்கினார்கள். ஏப்ரல் மாதத்தில் நெரூரில் சதாசிவ ப்ரம்மேந்திராள் சமாதியை தரிசித்துப் பூஜை செய்தார்கள். பின்பு திருச்சிராப்பள்ளி வந்து, அங்கு ஸ்ரீ சங்கர ஜயந்தி வித்வத் ஸதஸ் நடத்தினார்கள். திருச்சியிலிருந்து ஸ்ரீரங்கம், பிக்ஷாண்டார்கோவில், திருவாரூர், மன்னார்குடி மாயூரம் தர்மபுரம், சீர்காழி, காட்டூர், வைத்தீச்வரன்கோவில் முதலிய ஊர்களில் சஞ்சாரம் செய்தார்கள். தர்மபுரத்தில் திருக்கயிலாய பரம்பரை தர்மபுர ஆதீனம் 25-வது பட்டம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞான சம்பந்த பரமாசாரிய சுவாமிகளால் வரவேற்கப்பட்டு உபசரிக்கப் பட்டார்கள். வேதாந்த மடத்தலைவரும், சித்தாந்த மடத்தலைவரும் சந்தித்து அளவளாவியது ஒரு விசேஷ நிகழ்ச்சி. பின்பு ஆசார்யாள் சிதம்பரத்தையடைந்தார்கள். அங்கிருந்து நெய்வேலி சென்று பார்வை யிட்டுவிட்டு காவேரி நதி கடலில் சங்கமமாகும் காவிரிப்பூம்பட்டினத்தில் சமுத்திரஸ்னானம் செய்தார்கள். அதன்பின் கும்பகோணத்தில்

---

** இதன் ஆங்கில முதல் நூலாசிரியர் ஸ்ரீ K. R. வெங்கடராம அய்யர் தனது ஆங்கில நூலை 1959 மார்ச்சு 8ந்தேதியிலேயே வெளியிட்டுவிட்டாராதலின் கரூர் விஜயத்திற்குப்பிந்திய ஆசார் யாளின் சஞ்சாரங்கள் அதில் சேரவில்லை. சிருங்கேரியில் நடந்த கும்பாபிஷேகத்தின் நினைவாக வெளியிடப்பட்ட மலரில் 1962 டிஸம்பர் வரை சஞ்சாரத்தின் விவரம் பிரசுரம் செய்யப்பட்டிருக் கின்றது. அதுவும் இம்முதல் நூல் ஆசிரியராலேயே எழுதப் பட்டதாகக்கருத இடமுண்டு. ஆகையால் ஈண்டு 1959 மார்ச்சு முதல் 1962 டிஸம்பர் முடிய ஆசார்யாளின் சஞ்சார விவரணம் மேற்படி மலரிலிருந்து சுருக்கமாக எடுத்து எழுதப்பட்டிருக்கிறது.*

ஸ்ரீ கும்பேச்வரரை தரிசித்துவிட்டு தஞ்சாவூர் வந்து சேர்ந்தார்கள். ஆசார்யாள் சென்றவிடங்களிலெல்லாம் அமோகமான வரவேற்புகள் நடைபெற்றன.

தஞ்சாவூரிலிருந்து அய்யம்பாளையம், முசிரி முதலிய இடங்கள் சென்று வியாஸ பூஜைக்கு ஸ்ரீ ராமஸமுத்திரம் வந்தார்கள். ஆசார்யாளின் ஆதரவாலும் திவ்ய அநுக்ரஹத்தாலும் "அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி" என்ற பெயரால் ஓர் ஸ்தாபனம் நிறுவி ஆஸ்திக்யத்தைப் பரப்ப "ஸ்ரீ சங்கர க்ருபா" என்ற மாதாந்தரப் பத்திரிகை பிரசுரம் செய்ய ஏற்பாடு செய்யப்பட்டது. விநாயக சதுர்த்தி சமயம் வழக்கம்போல் வித்வத் ஸதஸ் நடைபெற்றது. ஆசார்யாள் சஞ்சாரம் செய்த ஏனைய ஊர்களில் துறைபூர், திருக்கோவலூர், கடலூர், விழுப்புரம், ராசிபுரம், பவானி என்பவை சில. கோயம்புத்தூரில் சங்கர மடத்தைப் புதுப்பித்துக் கட்டியிருந்ததைத் திறந்துவைத்தார்கள். கரூரில் இருக்கும் சங்கர மடத்தில் ஸ்ரீ ராஜ ராஜேச்வரி திருவுருவத்தைப் பிரதிஷ்டை செய்தார்கள். திருமணலியூர், நாமக்கல், திருச்செங்கோடு வழியாக சேலத்துக்கு விஜயம் செய்தார்கள். சேலத்தில் ஓர் கட்டடமும் அதைச் சேர்ந்த மனையும் சங்கர மடத்துக்காக தானம் செய்யப்பட்டது. சேலத்திலிருந்து தர்மபுரி, ஹோசூர், கிருஷ்ணகிரி, திருப்பத்தூர், வேலூர், திண்டிவனம், புதுச்சேரி, திருவண்ணாமலை, ராணிப்பேட்டை, சித்தூர், குடிபண்டா ( கோலார் ஜில்லா ) பாக்கியபள்ளி, கதிரி ( சித்தூர் ஜில்லா ) இந்துப்பூர், பெனுகொண்டா, அனந்தபூர் முதலிய இடங்களில் விஜய யாத்திரை செய்துவிட்டு சிவராத்ரி பூஜைக்கு ஹம்பி (விஜயநகரம்) வந்துசேர்ந்தார்கள். ஹம்பியில் சிருங்கேரி மடத்தின் கிளை மடம் ஒன்று இருக்கின்றது. ஹம்பியில் இருக்கும்போது விருபாக்ஷி மடத்துத்தலைவர் வந்து தரிசித்தார்.

அப்பால் ஹொசப்பேட்டை, சந்தூர், கர்நூல், ஸ்ரீசைலம், அனந்தபூர், பல்லாரி, முனிராபாத்து, ஹுலாகி, நாராயணபேட்டை, மஹபூப்நகரம் வழியாக ஹைதராபாத்துக்கு விஜயம் செய்தார்கள். அங்கு மூன்று வாரம் தங்கினார்கள். பெருந்த பணச்செலவில் ராஜா ஸ்ரீ வேங்கடராவ் லிம்பேகர் என்பவரால் மிக அழகாக கட்டப்பட்ட சங்கர மடத்தில் ஸ்ரீ சாரதாதேவி, ஸ்ரீசங்கரர் திருவுருவங்களைப் பிரதிஷ்டை செய்தார்கள். சங்கர ஜயந்தியும், வித்வத் ஸதஸ்ஸும் மிகவிமரிசையாய்

நடந்தேறின. நூற்றுக்கணக்கான பிராம்மணச் சிறுவர்களுக்கு இலவச உபநயனமும், பிரம்மோபதேசமும் அளிக்கப்பட்டன. அடுத்து, யதுகிரி, வாரங்கல், பத்ராசலம், கோதாவரி தீரத்தில் சில கிராமங்கள், பித்தாபூர், விஜயவாடா, அனந்தாவரம், கொல்லூர், ஓங்கோல், நெல்லூர் முதலிய இடங்களில் சஞ்சாரம் செய்தார்கள். காக்கிநாடாவில், இதற்குமுன் பார்த்தறியாத அவ்வளவு பெரிய முறையில் வித்வத்ஸதஸ் நடந்தது. கடைசியாக 1960ம் ஆண்டு ஜுலை மாதம் 7ம் தேதி ஆசார்யஸ்வாமிகள் சென்னைக்கு விஜயம் செய்தார்கள்.

சென்னை நகர் ஆசார்யாளுக்கு அளித்த வரவேற்பு சொல்லத் தரமல்ல. தியாகராயநகரில் சாதுர்மாஸ்ய விருதம் அனுஷ்டித்தார்கள். ஆசார்யாள் சென்னையில் தங்கியிருக்கும்போது ராஷ்ட்ரபதி ராஜேந்திர பிரஸாத் சென்னைக்கு வந்து தரிசித்து பாதபூஜையும் நடத்தினர். ராஷ்ட்ரபதியும், ஆசார்யாளும் பல ஆத்மீக விஷயமான உரையாடல் செய்தார்கள். ஆசார்யாள் அவருக்கு "ராஷ்ட்ரரத்ன" என்ற பிருது வழங்கினர்கள். சென்னை கவர்னர் விஷ்ணுராம் மேதியும், கேரள கவர்னரும், அமெரிக்க தூதர் எல்ஸ்வொர்த்பங்கர் என்பாரும், அநேக பிரமுகர்களும், மந்திரிகளும் ஆசார்யாளை தரிசித்துக் கிருதார்த்தர் களானர்கள். சென்னையில் நடந்த விநாயகசதுர்த்தி வித்வத்ஸதஸ்ஸிற்கு. இந்தியாவின் பல்வேறு பாகங்களிலிருந்து சிறந்த பண்டிதர்கள் பலர் வந்து பங்கெடுத்துக்கொண்டனர். ஆசார்யாள் ராஜா அண்ணுமலைபுரத்தில் தங்கியிருந்தபோது சிவகங்கை மடத்து சுவாமிகள் வந்து பாதபூஜை செய்தார்கள். அவ்வாறே சகடபுரத்து மடத்து சுவாமிகளும் வந்து தர்சனம் செய்தார். அங்கு நவராத்ரி பூஜையும், நவராத்ரி தர்பாரும், சண்டி ஹோமமும் மிகச்சிறந்த முறையில் நடந்தேறின. பல ஆஸ்திக மக்கள் கண்டுகளித்தனர்.

தியாகராயநகரிலிருக்கும் சிவ-விஷ்ணு ஆலயத்தில் ஸ்ரீ நடராஜரின் திருவுருவம் ஸ்தாபித்துக் கும்பாபிஷேகம் செய்தார்கள். அப்பால் ஆந்திர ப்ரதேச மந்திரி சந்திரமௌளியின் வேண்டுகோளை அங்கீகரித்து அகில இந்திய வித்வத்ஸதஸ் திருப்பதியில் நடந்ததற்குத் தலைமை தாங்கினர்கள். திருப்பதியில் சில நாட்கள் தங்கினர்கள். அங்கிருந்து காளஹஸ்தி, திருத்தணி, திருவள்ளூர் மார்க்கமாகச் சென்னை வந்து

சேர்ந்தார்கள். சென்னையில் எட்வார்டு எலியட்ஸ் ரோட்டில் உள்ள "சுதர்மா" என்ற பங்களாவில் தங்கினார்கள். ஜார்ஜ்டவுனில் பழைய சங்கர மடம் புதுப்பிக்கப்பட்டது. பக்தர்களின் பிரார்த்தனைக்குச் செவி சாய்த்து தியாகராயநகர் வேங்கட நாராயணரோடு 9ம் லக்கக் கட்டடத்தில் சங்கர மட கிளை ஒன்று நிறுவினார்கள். ஆசார்யாள் 31-1-1961ல் காஞ்சிபுரம் சென்று அங்கிருக்கும் சிருங்கேரி சங்கர மடத்தில் மூன்று நாட்கள் தங்கி ஸ்ரீஏகாம்ரேச்வரர் காமாக்ஷி வரதராஜர் ஆலயங்களை தரிசித்தார்கள். பின்பு பக்ஷி தீர்த்தம், மஹாபலிபுரம் இவற்றைப் பார்த்துவிட்டுத் திரும்ப சென்னை வந்தார்கள். அவ்வருஷத்திய மஹாசிவராத்ரி பூஜை திருவல்லிக்கேணியில் நடந்தது.

சென்னையை விட்டு ஆந்திரதேச சஞ்சாரத்துக்கு 5—3—61ல் புறப்பட்டார்கள். அம்பத்தூர், நாயுடுபேட்டை, நெல்லூர் வழியாக விஜய யாத்திரை செய்தார்கள். ஸ்தல ஆஸ்திகர்களின் வேண்டுகோளின்படி குண்டூரில் சங்கரமடம் கட்டுவதற்கு அஸ்திவாரக்கல் நாட்டினார்கள். சங்கரஜயந்தி உத்ஸவம் விஜயவாடாவில் நடந்தது. அப்பொழுது அநேக ஏழைப் பிராம்மணச் சிறுவர்களுக்கு தர்ம உபநயனம் செய்வித்தார்கள். ஆங்கு வித்வத் ஸதஸ்ஸும் நடந்தது. கொல்லூரில் நடந்த வித்வத்ஸதஸ்ஸுக்குத் தலைமைதாங்கி அதில் கலந்துகொண்ட பண்டிதர்களுக்குத் தகுந்த சன்மானம் வழங்கினார்கள். விஜயவாடாவுக்குத் திரும்பி வந்தபோது, நகரமக்கள் அங்குள்ள மடத்தை ஆசார்யாளிடம் சமர்ப்பித்தார்கள். பிறகு மச்சிலிபந்தர், ஸ்ரீகாக்குளம், குடிவாடா குஞ்சாவரம் வழியாகத் தெனாலி அடைந்தார்கள். அவ்விடத்தில் "பினபாடு வித்யாசங்கரபாரதீ" என்பவர் ஆசார்யாளை தரிசித்துத் தான் அதுவரை நிர்வகித்துவந்த சங்கரமடத்தை ஆசார்யாளிடம் ஒப்படைத்தார். அப்புறம் ஆசார்யாள் ரேப்பள்ளி, சீகலா, நாகார்ஜுனசாகர் முதலிய இடங்களில் சஞ்சாரம் செய்துகொண்டிருந்தபோது "தண்டு ஸ்ரீபென்தய்யா" என்பவர் ஆசார்யாளிடம் வந்தார். அவர் ஆரிய வைசிய மண்டலியின் பிரதிநிதி. அவருக்கு மடத்தைப் பற்றி சில மாறுதலான அபிப்பிராயம் இருந்துவந்தது. ஆசார்யாளிடம் அவற்றைப் பற்றிக் கேட்டுச் சமாதானம் அடைந்தவராய் ஆசார்யாளுக்கு பாதகாணிக்கையும் செலுத்தினர். ஆசார்யாளும் அவரை ஆசீர்வதித்தார் பின்பு ஆசார்யாள் ஹைதராபாத்துக்குத் திரும்பினார்கள்.

3-7-61ல் ஆசார்யாள் ஹைதராபாத்திலிருந்து புறப்பட்டு குண்டூர் சென்று அங்கு தம்மால் முன்பு அஸ்திவாரக்கல் நாட்டப்பட்ட ஆலயம் கட்டி முடிந்திருந்ததில் ஸ்ரீ சங்கரரின் திருவுருவத்தைப் பிரதிஷ்டை செய்தார்கள். அதுசமயம் ஆந்திரப்ரதேச அமைச்சர் ஸ்ரீ சந்திரமௌளி ஆசார்யாளுக்கு வெள்ளியாலான ஓர் ஸ்ரீ சாரதா விக்ரஹத்தையும், அழகிய வேலைப்பாடுகள் செய்யப்பட்ட ஓர் சந்தனமரப் பேழையையும் அளித்தார். அகில பாரத சங்கர ஸேவா ஸமிதியின் கிளை ஒன்று நிறுவி, "ஸ்ரீ சங்கர கிருபா" என்ற மாதாந்திர சஞ்சிகையின் தெலுங்கு பிரசுரம் ஒன்று வெளியிட ஏற்பாடுகள் செய்யப்பட்டன. அப்பத்திரிகையும் நல்ல முறையில் நடந்து வருகின்றது. அப்பால் நரசராவ்பேட்டை வழியாக ஸ்ரீ சைலத்துக்கு விஜயம் செய்தார்கள். ஆங்கு ஆந்திரப் பிரதேச சர்க்காரின் சார்பில் **1116** ரூபாய்கள் ஆசார்யாளுக்கு வழங்கப் பட்டது. ஆசார்யாள் அங்குள்ள ஸ்ரீ மல்லிகார்ஜுனரையும், ஸ்ரீ ப்ரமராம்பாளையும் தரிசித்து ஆலயத்துக்கு 1000 ரூபாய் நன்கொடை அளித்தார்கள். கடப்பையில் சிருங்கேரி மடத்தின் கிளையான புஷ்பகிரி பீடத்து சுவாமிகள் ஆசார்யாளை வரவேற்று உபசரித்தார்.

பின்பு ஏலஹங்கா, தர்மாவரம், முதலிய ஊர்கள் மார்க்கமாக ஆசார்யாள் பெங்களூரை அடைந்தார்கள். அங்கு மைசூர் மஹாராஜாவால் வரவேற்கப்பட்டார். மைசூர் சர்க்காரின் முதல் அமைச்சரும், வேறு சில அமைச்சர்களும், பிரதம நீதிபதியும் வந்து ஆசார்யாளை தரிசித்து ஆசி பெற்றனர். மறுநாள் மைசூர் மஹாராஜா ஸ்ரீ ஜயசாமராஜ உடையார் மைசூர் பிரதேச மக்களின் சார்பாக ஓர் வரவேற்பு உரை வாசித்து அளித்தார். பெங்களூரிலிருக்கும் சங்கரமடத்தில் வியாஸபூஜையும், சாதுர்மாஸ்ய விரதமும் கோலாகலமாகக் கொண்டாடப்பட்டன. ஆங்கு புஷ்பகிரி மடத்து சுவாமிகள் ஆசார்யாளிடம் வேதாந்த உபதேசம் பெற்றார். நாட்டின் பல பாகங்களிலிருந்து வந்த பண்டிதர்கள் அடங்கிய ஒரு வித்வத் ஸதஸ்ஸும் நடந்தது. அதில் உடுப்பி பெஜாவர் மடத்து அதிபரும் கலந்துகொண்டார். அவருக்கு விசேஷ மரியாதைகள் வழங்கப் பட்டன. நவராத்ரி பூஜையும், சதசண்டீஹோமமும், சிறப்பாக நடந்தன. பெங்களூர்வாசிகளின் உபயோகத்துக்காக இரண்டு லக்ஷ ரூபாய்த் திட்டத்தில் ஓர் கல்யாண மஹால் கட்டுவதற்கு ஆசார்யாள் அஸ்திவாரக் கல் நாட்டினார்கள். அகில பாரத சங்கர ஸேவா ஸமிதியின் கிளை ஒன்று



நிறுவி கன்னட மொழியில் "ஸ்ரீ சங்கர கிருபா" சஞ்சிகை வெளியிட ஏற்பாடாயிற்று. பெங்களூரின் விஸ்தரிப்புகளான சங்கரபுரம், மல்லேசுவரம், ராஜாஜிநகர் முதலிய பகுதிகளில் எழுந்தருளி மக்களுக்கு ஸத்யத்தையும், தர்மத்தையும் கடைப்பிடித்து வாழ்க்கை நடத்தவேண்டிய அவசியத்தைப்பற்றி விரிவுரையாற்றினர்கள். அக்காலம் உபராஷ்ட்ரபதியாகவும், இப்போது ராஷ்ட்ரபதியாகவும் இருக்கும் "ஸர்வபள்ளி" ராதாகிருஷ்ணன் அவர்கள் ஆசார்யாளை வந்து தரிசித்தார். பெங்களூரை விட்டுப் புறப்படுவதற்கு முன்பு, பெங்களூர் பொதுஜனங்கள் சார்பாக் ஓர் புகழுரைப்பத்திரம் வாசித்து அளிக்கப்பட்டது.

ருத்ர பட்டணத்தில் நடைபெற ஏற்பாடாகியிருந்த அதிருத்ர மஹாயக்ஞத்தில் கலந்துகொள்வதற்காக 13—12—61ல் பெங்களூரை விட்டுப் புறப்பட்டு ராம்நகர் சென்னப்பட்டணம், கிருஷ்ணராஜபேட்டை வழியாகச் சென்று, மைசூர் சர்க்கார் அமைச்சர் H. K. வீரண்ணகௌடா என்பவரின் பிரார்த்தனைக்கு இணங்கி மத்தூர் என்ற இடத்தில் மூன்று தினங்கள் தங்கி பின்பு ருத்ரபட்டணம் வந்துசேர்ந்தார்கள். 20-12-61 முதல் 30—12—61 முடிய ஆசார்யாளின் முன்னிலையில் அதிருத்ர யக்ஞம் மிக விமரிசையாய் நடந்தது. லக்ஷக்கணக்கான மக்கள் வந்து யாகத்தைப் பார்த்தும், ஆசார்யாளை தரிசித்தும், அவர்களுடைய அரிய உபதேசங்களைச் செவிமடுத்தும் கிருதார்த்தரானார்கள். ருத்ர பட்டணத்தை விட்டுப புறப்பட்டு நஞ்சங்கூடு போகும் வழியில் குன்னனூர், சாளக்கிராமம், பெட்டிதாபுரம், ஹுன்ஸூர், முதலிய இடங்களில் தங்கி நஞ்சங்கூடு வந்துசேர்ந்தார்கள். அங்கு ஸ்ரீகண்டேச்வரருக்கு சிருங்கேரிமட பத்ததிப்படி பூஜை நடத்தி உத்ஸவ மூர்த்தியை வீதியுலா எழுந்தருளப்பண்ணி ஆசார்யாளும் கூடவே சென்றார்கள்.

18-1-62ல் மைசூருக்கு விஜயம் செய்தார்கள். நகர எல்லையிலேயே மஹாராஜாவால் பூர்ணகும்ப மரியாதையுடன் வரவேற்கப்பட்டார்கள். அச்சமயம் "ஊர்மிளா" என்று நாமம் சூட்டப்பட்ட ஓர் யானைக் குட்டியை மஹாராஜா உபயமாக அளித்தார். ஆசார்யாளைத் தங்கச் சிவிகையில் எழுந்தருளப்பண்ணி ஊர்வலமாக அரண்மனைக்கு அழைத்து வந்து அரசவம்ச வழக்கப்படி தமது குடும்ப சகிதம் பாதபூஜை செய்தார். ஆசார்யாள் அரச குடும்பத்தினருக்கு ஸ்ரீசந்திரமௌளீச்வரர் பெயராலும்,

ஸ்ரீசாரதாதேவியின் பெயராலும் நல்லாசி வழங்கினுர்கள். அரண்மனேயின் பல்வேறு பாகங்களேயும் பார்வையிட்டு அரண்மனேயிலிருந்த அனேவருக்கும் பிரசாதம் அளித்து அனுக்ரஹம் செய்தார்கள். பின்பு மைசூரில் இருக்கும் சங்கராலயம் வந்து சேர்ந்தார்கள். ஒரு வாரம் தினந்தோறும் ஆசார்யாள் ஸத்விஷயமான உபந்யாஸம் செய்தார்கள். பெருவாரியான மக்கள் திரளாக வந்து ஆசார்யாளின் உபதேச மொழிகளேச் செவிமடுத்து மகிழ்ந்தார்கள். அ ஷ் ட கி ர ஹ சேர்க்கையின் தோஷநிவர்த்திக்காக சாமுண்டேசுவரி மலேயில் சந்திரமௌளீச்வர பூஜையும் பிராம்மண சந்தர்ப்பணேயும், ஏழைகளுக்கு அன்னதானமும் செய்யப்பட்டன.

## நவபாஷாணம் நவக்ரஹமஹாயக்ஞம்

சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குரு மஹாஸ்வாமிகளின் ஆக்ஞையின்பேரில் அவர்களின் பரிபூர்ண அ நு க் ர ஹ பலத்தால் அஷ்டக்ரஹங்களின் சேர்க்கையால் உண்டாகும் தோஷம் நீங்க ராமநாதபுரம் ஜில்லா, தேவி பட்டணம் என்னும் நவபாஷாண க்ஷே ந்திரத்தில் 1962 ஜனவரி 26தேதி முதல் பிப்ரவரி 3ந்தேதி முடிய நவக்ரஹ மகாயக்ஞம் மிகவும் விரிவான முறையில் கோலாகலமாக நடைபெற்றது. ராமநாதபுரம் ஸேதுபதி மன்னர் அவர்களின் தலேமையில் அமைக்கப்பட்ட நிர்வாகக்கமிட்டி எல்லா ஏற்பாடுகளேயும் சிறப்பாகச் செய்திருந்தனர். சண்டிஹோமம் முதலான அநேகம் ஹோமங்களும் உபந்யாஸங்களும் நடைபெற்றன. கடல் நீரிலுள்ள ஸ்ரீ ராமரால் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ள நவக்ரஹ மூர்த்திகளுக்கு அபிஷேகம் நடந்து யக்ஞம் பூர்த்தியடைந்தது.

மைசூரிலிருந்து புறப்பட்டு திருமக்கூடலு நாசிபூர் என்ற இடத்தை தமது வரவால் புனிதப் படுத்திவிட்டு 2—2—1962ம் தேதி நரசிப்பூரி லிருந்து புறப்பட்டு சாமராஜநகர், குண்டலப்பேட்டை, ஸ்ரீரங்கபட்டணம் வழியாக மாண்டியா என்ற ஊருக்கு விஜயம் செய்தார்கள். அங்கு புதிதாக நிர்மாணம் பண்ணப்பட்ட ஆலயத்தில் ஸ்ரீசங்கரரின் திரு உருவத்தைப் பிரதிஷ்டை செய்தார்கள். மறுபடியும் பெங்களூர் வந்து சிவராத்திரி பூஜை நடத்திவிட்டு 6—3—62ல் சிந்தாமணி ராணிப்பேட்டை வழியாக சென்னேக்கு விஜயம் செய்தார்கள். 12—3—62ல் அடையாறில் புதிதாகக் கட்டப்பட்ட ஸ்ரீஅனந்தபத்மநாபஸ்வாமி ஆலயத்தின்

கும்பாபிஷேகத்தை முன்னின்று நடத்திவைத்தார்கள். ஜார்ஜ்டவுனில் புனருத்தாரணம் செய்யப்பட்ட சங்கரமடத்தைத் திறந்துவைத்தார்கள்.

சென்னையை விட்டுப் புறப்பட்டு கோயம்புத்தூர் சென்று பேரூரில் புதிதாகக் கட்டப்பட்ட ஆலயத்தில் பஞ்சமுக கணபதி பிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகம் நடத்திவைத்தார்கள். இந்த ஆலயத்தை நிர்மாணம் செய்தவர் மைசூர் கிருஷ்ணய்யர் என்பவர். அவர் அந்த பஞ்சமுக கணபதி ஆலயத்தையும், நிர்வாகத்தையும் சிருங்கேரி மடத்துக்கே அளித்து விட்டார்கள்.

பிறகு காலடி சென்று அங்கு ஆசார்யாளின் ஆதீனத்துக்கு வந்த சங்கர கல்லூரியை அபிவிருத்தி செய்வதற்காக ஆசார்யாள் ஓர் மஹா சபையை அவசரமாகக் கூட்டினார்கள். காலடியில் ஆசார்யாளின் ஆக்ஞையை சிரமேற்கொண்டு அநேக பக்தர்கள் கூடினர். ஒவ்வொருவரும் நன்கொடை வழங்கினர். திருவாங்கூர் மகாராஜா 25.000 ரூபாய் அளித்தார். எந்த விதத்தில் கல்லூரியை அபிவிருத்தி செய்யவேண்டுமென்பதைப்பற்றி ஆலோசனை கூறிவிட்டு சேலம் வந்து சேர்ந்தார்கள். அங்கு கல்யாண மண்டபத்தைத் திறந்துவைத்து விட்டு பெங்களூருக்கு வந்து சேர்ந்தார்கள்.

6-4-62 முதல் 18-4-62 வரை பெங்களூரில் தாமதித்தார்கள். இந்த நாட்களில் பெங்களூரில் கோடை கிருஷ்ண ஸா அண்ட் பிரதர்ஸ் என்பவர்களால் நிர்மாணம் பண்ணப்பட்ட ஸ்ரீ சுப்ரமண்யஸ்வாமி ஆலய கும்பாபிஷேகம் நடைபெற்றது. பின்னால் சில இடங்களில் விஜய யாத்ரை செய்தார்கள். ச்ரவண பெலகுளா என்ற இடத்தில் க்ஷமணமத ஸ்வாமியால் உபசரிக்கப்பட்டார் என்பது குறிப்பிடத்தகுந்தது. ஹாசன் என்ற ஊரில் ராவ்பகதூர் குருபக்த திலக ஸ்ரீ நஞ்சுண்டய்யா அவர்களும் அவருடைய குமாரர்களும் தங்களுக்குச் சொந்தமான "குருஜோதி" என்ற ஓர் கட்டடத்தை சங்கரமடமாக ஏற்றுக்கொள்ளும்படி ஆசார்யாளை வேண்டிக்கொண்டார்கள். ஆசார்யாளும் அவர்களுடைய பக்தி சிரத்தையை மெச்சி அக்கட்டடத்தை ஏற்றுக்கொண்டு அவர்களுக்கு ஆசி வழங்கினார்கள்.

பின்பு பல இடங்களில் சஞ்சாரம் செய்துவிட்டு தும்கூர் வந்தபோது ஸித்த கங்கா சிவகுமாரஸ்வாமி என்பவரால் உபசரிக்கப்பட்டார்கள்,

பேலூரில் போலீஸ்டேஷன் எல்லைக்குள் அமைக்கப்பட்டிருந்த கணபதி ஆலயத்துக்குக் கும்பாபிஷேகம் நடத்திவைத்தார்கள். அவ்வூர் சிவாலயத்தில் ஸ்ரீ சங்கரருடைய திருவுருவம் அமைத்துக் கும்பாபிஷேகம் செய்வித்தார்கள். அதன்பின் சில ஊர்களுக்குச் சென்றுவிட்டு கிக்காவுக்கு வந்தார்கள். அங்கு ஸ்ரீ சாரதாம்பாளுக்கும், ஸ்ரீ ரிஷ்யசிருங்கருக்கும் பூஜா வழிபாடுகள் செய்துவிட்டு 9-7-62ம் தேதி காலை 7-20 மணிக்கு சிருங்கேரி வந்து சேர்ந்தார்கள்.

ஆறரை ஆண்டுகள் வெளியூர்களில் விஜய யாத்திரை செய்து கொண்டிருந்த ஆசார்யாள் திரும்ப சிருங்கேரியை அடைந்தபோது அவ்விடத்து மக்களின் குதூகலம் சொல்லத்தரமல்ல. சிருங்கேரியில் மஹா சந்நிதானங்களை வரவேற்க பெங்களூர் மேயர் ஸ்ரீ V. S. கிருஷ்ண அய்யரும், டிபுடி கமிஷனரும், இன்னும் பல உத்தியோகஸ்தர்களும் வந்திருந்தார்கள். ஆசார்ய மஹா சந்நிதானம் சிருங்கேரியில் நுழைந்த உடனே வானம் பூ மழை பெய்தது. அது ஜகத்குரு மஹா சந்நிதானங்களை வரவேற்பதுபோலும், ஆசார்யாளின் இன்னருள் வர்ஷிப்பதுபோலும் இருந்தது. 17-7-62ல் சாதுர்மாஸ்ய விருதத்தை சிருங்கேரியிலேயே அனுஷ்டித்தார்கள்.

சிருங்கேரி வியாக்கியான பீடத்தின் 35வது ஆசார்யாளாக அமர்ந்திருக்கும் நமது ஜகத்குரு ஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த மஹா சுவாமிகளைப் பற்றி எவ்வளவு புகழுரை சொன்னாலும் அடங்காது. அவர் ஓர் மஹான். ஓர் ஸித்த புருஷர். கல்வியில் மேதை. கூர்த்தமதியில் ஈடுஇணையற்றவர். அவர்கள் ஓர் சமஸ்தானாதிபதியாக இருந்தபோதிலும் அவர்களுடைய அளவிறந்த அன்பினாலும் சீரிய பண்பினாலும் யாவரிடமும் ஜாதி, மத பேதமன்னியில் ஸகஜமாகப்பேசிப் பழகுவார்கள். அதனால் எல்லோருடைய மரியாதை கலந்த பக்தியை கவர்ந்துகொண்டு விடுவார்கள். ஜகத்குரு மஹாஸ்வாமிகள் தர்க்கம், மீமாம்ஸை, வேதாந்தம் முதலிய சாஸ்திரங்களில் ஒப்புயர்வற்ற தேர்ச்சியுடையவர்கள். அவர்களுடைய குருபக்திக்கு எல்லை கிடையாது. சென்றவிடமெல்லாம், மக்களின் பண்பை உயர்த்துவதே தமது லக்ஷ்யமாகக்கொண்டு தர்மானுஷ்டானத்தின் முக்கியத்துவத்தைப்பற்றியே அறிவுரை கூறுவார்கள், நமதாசார்யாளுக்கு தெலுங்கு, கன்னடம், தமிழ், ஹிந்தி முதலிய

மொழிகளில் தேர்ச்சியுண்டு. மக்களை ஆஸ்திக வழியில் ஈடுபடுத்தி அவரவருடைய ஸ்வதர்மத்தைக் கடைப்பிடித்து, பிறரை இகழாமலும், துன்புறுத்தாமலும், அன்பு செலுத்தி வாழ்வதே வாழ்க்கையின் லக்ஷியம் என்பதை அவர்கள் சஞ்சாரம் செய்த இடங்களிலெல்லாம் அறிவுறுத்தத் தவறியதில்லை, அவர்களுடைய முகப்பொலிவும், காந்தம்போல் ஈர்க்கும் சக்தியும் வேறெங்கும் காணமுடியாது.

**கோவா விஜயம் :—** சிருங்கேரியில் சில தினங்கள் தாமதித்துவிட்டு மறுபடியும் தமது விஜய யாத்திரையைத் துவக்கினார்கள். ஷிமோகா, சிக்மகளூர், கன்னட ஜில்லாக்களில் சுற்றுப்பிரயாணம் செய்தார்கள், 1962 டிஸம்பரில் கோகர்ண க்ஷேத்திரத்தில் ஜகத்குரு ஸ்வாமிகள் இருந்தபோது கோவாவிலிருந்து ஓர் தூதுகோஷ்டி வந்து, ஆசார்யாளை கோவாவுக்கு விஜயம் செய்யும்படி பிரார்த்தித்தது. ஆசார்யாளும் கோவாவுக்கு வருவதாக ஒப்புக்கொண்டார்கள். கோகர்ண க்ஷேத்திரத்தில் ஸ்ரீ மஹாபலேச்வரருக்கும், ஸ்ரீ பார்வதீ தேவியாருக்கும் மிகச்சிறப்பாக வழிபாடு நடத்தினார்கள். அதுசமயம் 20,000 பக்தர்கள் கூடியிருந்து தரிசித்தார்கள். சீனாவின் ஆக்ரமிப்பில் நமது சைன்யங்களுக்கு வெற்றி கொடுக்கும்படி பிரார்த்தித்தார்கள்.

பின்பு கோவாவுக்குப் புறப்பட்டார்கள். கோவா பிரதேசத்தில் ஆசார்யாள் முதன்முதலாக விஜயம் செய்த இடம் பார்த்தகளி என்பது. ஆங்கு கௌடசாரஸ்வத பிராமணர்களின் குருவான ஸ்வாமி துவாரகநாத் மகராஜ் அவர்களால் கௌட மடத்திலேயே வரவேற்கப்பட்டு மிகவும் உபசரிக்கப்பட்டார்கள். பின்பு ஆசார்யாள் மர்த்தகோவான் என்ற ஊர் சென்றார்கள். அங்கு மக்கள் பெரும் திரளாகக் கூடி மஹா சந்நிதானங்களை வரவேற்று ஊர்வலம் நடத்திப் பாதபூஜையும் செய்தார்கள். அவ்விடத்திய மக்களுக்குத் தென்பிராந்திய மொழிகள் ஒன்றுமே தெரியாது. ஜகத்குரு அவர்கள் அம்மக்களுக்கு தமக்கே தனி உரியதான பாணியில் ஹிந்தியில் பிரவசனம் செய்து மக்களை ஆச்சரியத்தில் மூழ்கடித்தார்கள்.

கோவாநகரத்தை 1962-ம் ஆண்டு டிஸம்பர் மாதம் 18-ம் தேதி அடைந்தார்கள். இந்த தேதி மிகவும் குறிப்பிடத்தக்கது. கோவாச்சீமை விடுதலை அடைந்தது 1961 டிஸம்பர் 19-ம் தேதி. அன்று கிடைத்தது

அரசியல் விடுதலை. கோவா பிரதேசம் போர்த்துகீசியர் வசம் போனது 1510ம் ஆண்டில். அப்பொழுதிருந்து அச்சீமை பெரும்பான்மை ரோமன் கத்தோலிக் கிருஸ்தவ பாதிரிகளின் பிரசாரத்தால் 16, 17ம் நூற்றுண்டுகளில் ஓர் கிருஸ்தவப் பிரதேசமாகவே இருந்து வந்தது. ஆயினும் சிருங்கேரி சமஸ்தானத்தின் 19வது பீடாதிபதி இரண்டாம் புருஷோத்தம பாரதீ ஆசார்யாள் (1479–1517) கோவா சீமையில் சஞ்சாரம் செய்திருக்கிறுர்கள். அதனுல் அக்காலத்திலிருந்து அச்சீமை பெயரளவில் சிருங்கேரி மடத்தையே குருபீடமாக மதித்து வந்தது. விடுதலையடைந்த முதல் வருஷம் பூர்த்தியான அன்று ஜகத்குரு ஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த மஹாஸ்வாமிகள் விஜயம் செய்ததால் கோவா மக்களுக்கு சமயத்துறையிலும் ஓர் புனருற்பவம் கிடைத்ததாக கருதலா மல்லவா ? இதுவரையில் அஜ்ஞான இருளில் ஆழ்ந்து அந்நிய அரசியல், அந்நிய மதம் இவற்றில் சிக்கியிருந்த மக்களுக்கு ஓர் விழிப்பு ஏற்பட்டு ஆஸ்திகத் துறையிலும் முன்னேற ஆசார்யாளின் விஜயம் மிகவும் உதவியது என்னலாம். சாதாரண கிராம வாசிகளும், கிருஷித்தொழில் செய்பவர்களும், எழுத்து வாஸனையே இல்லாதவர்களுமாயிருந்த "தேச பண்டாரிகள்" "ஆகாலி கௌடர்கள்"போன்ற வகுப்பினர்களும்கூட ஆசார்யாளின் தரிசனத்தாலும். உபதேசமொழிகளாலும், ஆறுதல் அடைந்தார்கள். அன்னவர்கள் தாம் ஓர் புத்துயிர் பெற்றதாகவே கருதினுர்கள்.

கிருஸ்தவ ஆதிக்கத்தால் பராமரிப்பற்றுக்கிடந்த ஆலயங்கள் யாவும் ஆசார்யாளின் வரவினுல் புனிதமடைந்தன. கோனுக்கோனு என்ற இடத்தில் ஓர் லிங்கத்திருவுருவத்தை "லக்ஷ்மீ நாராயணன்" என்று பெயரிட்டு வழிபட்டு வந்தார்கள். இது என்ன அறியாமையா? ஐக்கிய மனப்பான்மையா? எதுவும் சொல்ல இயலாது. "சிவாய விஷ்ணுரூபாய சிவரூபாய விஷ்ணவே" என்ற சுலோகத்தின் கருத்து இங்கு செயல் முறையில் அனுஷ்டிக்கப்பட்டிருக்கிறது என்னலாம். ஒவ்வொரு ஹிந்து ஆலய நிர்வாகிகளும் ஆசார்யாளைத் தம்தம் கோவில் களுக்கு எழுந்தருளுமாறு போட்டிபோட்டுக்கொண்டு பிரார்த்தித்தனர். சென்ற இடமெல்லாம் பாதபூஜைகள் நடந்தன. ஆசார்யமஹாஸ்வாமிகள் கோவாவை விட்டுப்புறப்பட்டபோது மக்கள் ஏகோபித்து தாயைப் பிரிந்த கன்று போல் கதறி மறுபடியும் கோவாவுக்கு விஜயம் செய்யும்படி

கண்ணீர் மல்கிப் பிரார்த்தித்தனர். இத்தகைய அப்ராக்ருதமான கவர்ச்சியை வேறெங்கு காண முடியும்?

**சிருங்கேரியில் கும்பாபிஷேகம்:—**

1963ம் ஆண்டு பிப்ரவரி-மார்ச்சு மாதங்களில் நடந்தேறிய கும்பாபிஷேக மஹோத்ஸவத்தை வர்ணிப்பது மிக சிரமசாத்தியமான காரியம். எவ்வளவு எழுதினாலும் தகும். ஆலயங்களில் நடந்த உத்ஸவவைபவங்களை சொல்லுவதா, வேதோக்தமாய்ச் செய்யப்பட்ட யாகயக்ஞங்களைக் கூறுவதா, கும்பாபிஷேகங்களின் விமர்சைகளை உரைப்பதா, நடந்த பிரசங்கங்களின் மகிமைகளை எடுத்தோதுவதா, வந்திருந்த சுமார் ஒரு லக்ஷம் ஜனத்திரளைக் குறிப்பிடுவதா, குழுமிய பண்டிதர்கள், வித்வான்கள், யதிகள், மற்றும் பல தனவந்தர்கள், உத்தியோகஸ்தர்கள், மகாராஜாக்கள், இவர்களைப்பற்றிய விவரங்களைக் கொடுப்பதா, பிரசுரிக்கப்பட்ட வெளியீடுகளைப்பற்றி எழுதுவதா, யாவற்றிற்கும் மேலாக கும்பாபிஷேக நிர்வாகக் குழுவினர் செய்திருந்த ஏற்பாடுகளின் திறனைப் புகழ்வதா, சர்க்காரின் ஒத்துழைப்பை வியந்தோதுவதா என்று திகைப்பதல்லால் முழுதும் விவரிக்க இடமும் போதாது. ஆற்றலும் இல்லை. ஏதோ கூடுமானவரை சுருக்கமாகக் கூறுவோம்.

கும்பாபிஷேகத்தை முன்னிட்டு பிப்ரவரி மாதம் 5ந்தேதி ஸ்ரீ சாரதாலயத்தில் உத்ஸவம் ஆரம்பமானது. ஸ்ரீ சாரதாதேவியின் உத்ஸவமூர்த்தி ஏழு தினங்கள் ஊர்வலமாக எழுந்தருளப்பண்ணப் பட்டது. பிப்ரவரி மாதம் 10ந்தேதி ஸ்ரீ சாரதாம்பாளுக்கு ஜகத்குரு மஹா சந்நிதானம் அவர்கள் விசேஷ ஆராதனை நடத்தினார்கள். 11ம்தேதி ரதோத்ஸவம் நடைபெற்றது. ஜகத்குரு மஹாஸ்வாமிகள் தங்கப் பல்லக்கில் எழுந்தருளி, பிரமாதமாக தீபாலங்காரங்கள் செய்யப்பட்ட ரதத்தின் முன் தெருக்களில் பவனி வந்தார்கள். 12ம்தேதி துங்கா நதியில் தெப்போத்ஸவம் விமரிசையாக நடந்தது. இதுபோலவே பிப்ரவரி மாதம் 18ம்தேதி தொடங்கி ஏழு தினங்கள் ஸ்ரீமலஹாநிகரேச்வரருக்கு உத்ஸவம் நடந்து, 24ம்தேதி ரதோத்ஸவமும், 25ம்தேதி தெப்போத்ஸவமும் நடைபெற்று முடிவடைந்தது.

பிப்ரவரி மாதம் 23ம்தேதி நடந்த சிவராத்ரி பூஜை குறிப்பிடத் தகுந்தது. ஜகத்குரு மஹாசந்நிதானம் அவர்களே இரவு முழுவதும்

ஜாமம்தோறும் ஸ்ரீ சந்திரமௌளீச்வரருக்கு அபிஷேக ஆராதனைகள் நடத்தினார்கள்.

நான்கு தினங்கள் ஹோமம் ஜபம் ஸம்புரோக்ஷண சம்ஸ்காரங்கள் நடந்தபின் பிப்ரவரி 28ம் தேதி நடுப்பகலில் ஜகத்குரு ஆசார்யாளே ஸ்ரீமலஹாநிகரேச்வரருக்கு கும்பாபிஷேகம் செய்தார்கள்.

இந்த மாதிரியே ஸ்ரீ சாரதா - ஸ்ரீ சங்கராலயங்களிலும், தமது குரு ஸ்ரீ சந்திரசேகரபாரதீ சுவாமிகளின் அதிஷ்டானத்திலும் ஜப, ஹோம, ஸம்புரோக்ஷண ஸம்ஸ்காரங்கள் செய்தபின் மார்ச்சு மாதம் 3ம் தேதி ஞாயிற்றுக்கிழமை இம் மூன்று ஆலயங்களுக்கும் கும்பாபிஷேகம் செய்தார்கள்.

பிப்ரவரி மாதம் 27ம் தேதி புதன் கிழமை கணபதி ஹோமம் நடத்தி பூர்வாங்கங்களுடன் ஸஹஸ்ரசண்டீ மஹாயக்ஞத்தை ஆரம்பித்து வைத்தார்கள். யாகசாலை பந்தலுக்குள் நூறு ரித்விக்குகள் இருந்தனர். வெளியே பந்தலில் நூற்றுக்கணக்கான வேத விற்பன்னர்கள் கூடி யிருந்து நான்கு வேதங்களையும் கோஷித்தனர்.

ஜகத்குரு மஹாசுவாமிகள் ஆரம்பத்தில் அறிவுரை ஒன்று நிகழ்த் தினார்கள். அதன் சாரம்:— "ஸ்ரீ துர்க்கா, ஸ்ரீ லக்ஷ்மி, ஸ்ரீ சரஸ்வதி தேவிகளின் சமஷ்டியான ஸ்ரீ சண்டீதேவிக்கு உலகக்ஷேமத்தைக்கோரி இந்த மஹாயக்ஞம் நடத்தப்படுகிறது. அம்பிகைக்கு உகந்தது ஹ்ருதய பூர்வமான பக்தியே யாகும். சிரத்தையும், ஆசாரமும் இல்லாத எந்தக் காரியமும் உருப்படாது. நாட்டின் எல்லாப்பகுதிகளிலிருந்தும் ஆஸ்திகப்பெருமக்கள் இங்கு குழுமியுள்ளனர். தமிழ் நாட்டிலிருந்து பெருவாரியான பக்தர்கள் வந்துள்ளார்கள். இம்மாபெரும் கூட்டத்தில் ஒவ்வொருவருக்கும் தனித்தனி வசதி செய்வது சாத்தியமில்லை என்பதை உணர்ந்து அவர்கள் சந்தர்ப்பத்தை அநுசரித்து நடந்து கொள்வார்கள் என்று நாம் நம்புகிறோம். இவ்வூர் வாசிகள் இங்கு வந்துள்ள அதிதி களுக்கு மகிழ்ச்சியுடன் உபசாரம் செய்வார்கள் என்றும் நம்புகிறோம். இந்த மஹாயக்ஞத்தில் நீங்கள் யாவரும் உங்கள் சொந்த காரியமாக பாவித்து அதில் பங்கு கொள்ளவேண்டும். வரவேற்புக்குழு செய் திருக்கும் ஏற்பாடுகளில் ஏதாவது குற்றம் குறையிருந்தாலும் நீங்கள் பொருட்படுத்த மாட்டீர்கள் என்று நினைக்கிறோம்".



ந்ருஸிம்ஹவநத்தில் ப்ரத்யேகமாக அமைக்கப்பட்ட பெரிய பந்தலில் சண்டியக்ஞம் நடைபெற்றது. அந்தப்பிரதேசம் முழுவதும் எங்கு பார்த்தாலும் ஜபமும், பாராயணமும், வேதகோஷமும் முழங்கிக் கொண்டிருந்தன. மார்ச்சு மாதம் 3ம்தேதி பகல் 2 மணி சுமாருக்கு ஜகத்குரு மஹாஸந்நிதானம் அவர்களின் முன்னிலையில், ஹோமகுண்டத்தில் ஆவிர்பாவம் செய்யப்பட்ட ஸ்ரீமஹா சண்டிதேவிக்கு பூர்ணாஹுதி சமர்ப்பிக்கப்பட்டது. மஹாஸந்நிதானங்களோடு மைசூர் மகாராஜாவும் இருந்தார்.

இந்த வைபவங்கள் யாவும் அன்று இரவு நடந்த ஸ்ரீசாரதாதேவியின் ரதோத்ஸவத்தோடு சிறப்பாக முடிவுற்றன. ஜகத்குரு மஹாஸந்நிதானங்களும் "அட்டபலகி"யில் ஆரோகணித்து ரதத்தோடு பவனிவந்தார்கள்.

சண்டியக்ஞம் நடந்த பந்தலுக்கு சற்று மேற்கே மற்றொரு சிறிய பந்தலில் வித்யாரண்யபுரம் அக்கிரகாரத்தைச் சேர்ந்த ப்ரம்மஸ்ரீ ஸ்ரீ சோமேச்வர நாராயண என்பவரால் பிப்ரவரி மாதம் 25ம்தேதி முதல் மூன்று தினங்கள் நக்ஷத்திர இஷ்டியும், அதன்பின் சாதுர்மாஸ்ய யக்ஞமும் நடத்தப்பட்டது.

ஹோமங்களுக்குப்பின் ஸுவாஸினிகள் குமாரிகள் பிராம்மணர்கள் ஆகியோருக்கு சந்தர்ப்பணை நடந்தது. பிரதானதினமாகிய மார்ச்சு மாதம் 3ம்தேதியன்று அன்னக்கொடி உயர்த்தி ஜாதிமத பேதமில்லாமல் வந்திருந்தவர்கள் யாவருக்கும் வெவ்வேறு பந்தல்களில் சாப்பாடு வழங்கப் பட்டது. முஸ்லிம் மக்கள் வசிக்கும் பகுதியில் அவர்களுக்கு பிரத்யேக விருந்தும் அளிக்கப்பட்டது.

மார்ச்சுமாதம் 4ம் தேதியன்று இந்த வைபவங்களில் பங்கெடுத்துக் கொண்ட ரித்விக்குகள் வேதசாஸ்திரவிற்பன்னர்கள் யாவரும் பிரத்யேகமாக அமைக்கப்பட்ட பந்தலில் குழுமியிருக்க ஜகத்குரு மஹாஸந்நிதானங்கள் அவர்களுக்கு உபதேச மொழி வழங்கினார்கள். அதன் சாரம் :—

"லக்ஷக்கணக்கான நக்ஷத்திரங்கள் இருந்தாலும் சந்திர சூரியர்களே மிகப்பிரகாச முடையவர்களாகத் தோன்றுவதுபோல, உலக மக்களை ஆத்மீக, சமய, ஸநாதனத் துறைகளில் ஈடுபடுத்திய பல மஹநீயர்கள்

நம் நாட்டிலும், பிறநாடுகளிலும் தோன்றி வழிகாட்டியிருந்தபோதிலும், ஸ்ரீ சங்கரபகவத்பாதாள் ஒருவரே தமது வாழ்க்கையாலும், உபதேசத்தாலும், அரியநூல்களாலும் மக்களின் மனதில் சாஸ்வதமான ஆஸ்திக்ய அறிவை வேரூன்றச் செய்தவராவர் என்பதில் சந்தேகமில்லை. இனிப்புப் பலகாரங்கள் பல தயார் செய்கின்றோம். அவை ஒவ்வொன்றிலும் நிரந்தரமாய் ஊடுருவி இருப்பது சர்க்கரையே. அதுபோன்றே பிரபஞ்சத்தில் தோன்றி, நின்று அழியும் சகல நாமரூப பேதங்களுக்கு ஊடே அவற்றிற்கு ஜீவாதாரமாக இருப்பது ப்ரம்மம் ஒன்றே என்ற பேருண்மையை நமக்கு ஸ்ரீ சங்கரர் காட்டியிருக்கிறார். உலகத்தில் இருக்கும் சகலமான சர அசரங்கள் யாவும் ஒரு திட்டமிட்ட தர்மநியதியில் நடக்கின்றன. அதுபோல மனிதனும் தர்மத்தைக் கடைப்பிடித்து ஒழுகுதல் வேண்டும். தர்மம் என்பது தனிப்பட்ட ஒரு மனிதனுலோ, அல்லது பெரும்பான்மை மக்களின் அங்கீகாரத்தாலோ நிலைநிறுத்தப் பட்டதல்ல. அது வேதத்தையே அடிப்படையாகக்கொண்டது. தர்மத்தின் நடைமுறை தற்கால சூழ்நிலைகளைக்கொண்டு ஆராயற்பாலதன்று. ஸ்ரீ சங்கரர் இந்த வேத அடிப்படையிலேயே தர்மத்தை போதித்தார். ஏனைய சமய தீர்க்கதரிசிகள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வழிபாட்டு முறையையே கூறிப்போந்தனர். ஆனால் ஸ்ரீ சங்கரரோ, மக்களின் அறிவுக்கும், சூழ்நிலைகளுக்கும், பக்குவத்துக்கும் ஏற்ப ஆறு மதங்களை உருவாக்கினர். இந்த ஷண்மதங்களும் இறுதியில் சாதகன் பிரம்மத்தை அடைவதற்கு சாதனங்களே. பிரம்மம் என்பது "ஸத்யம், ஞானம், அனந்தம்" என்று வேதம் கோஷிப்பதுபோன்று சாஸ்வதமானதும், அறிவின் சமஷ்டியாயும், எங்கும் நிறைந்ததுமானது. அதற்கு நாமம், ரூபம், இடம், காலம் என்ற வரைகள் கிடையாது, அது சுத்த சைதன்யம் அதை சாதாரண மக்கள் மனதில் அநுஸந்தானம் செய்ய இயலாது. ஆகையால் சாமான்னியரும் தியானம் பண்ணுவதற்கும் வழிபடுவதற்கும் யோக்கியமாய் நாமமற்றதற்கு நாமமும், ஸர்வ வியாபிக்கு ஆலயங்களும். ரூபமற்றதற்கு ரூபமும், அவ்வவற்றிற்கு வழிபாட்டு முறைகளும் ஏற்படுத்தியதின் காரணமாக யாவரும் பிரம்மத்தையறிந்து, ஆனந்தத்தில் அழுந்தி இறுதியில் அதோடு இரண்டறக் கலக்க ஹேதுவானவைகளே இந்த ஆறு சமய சித்தாந்தங்களும். வழிபாட்டுக்கு மிகஇன்றியமையாதது பக்தியும் சிரத்தையும். இவையன்றி செய்யப்படும் எந்த வழிபாடும்

பயனளிக்காது" என்ற முறையில் விரிவாகவும், உணர்ச்சியுடனும், அழகாக உபதேசித்துப் பின் சண்டீ பாராயணத்தின் மகிமையை எடுத்துக் கூறினர்கள். சண்டீ வழிபாடு பெரும்பாலும் தந்த்ர சாஸ்திரத்தைச் சேர்ந்ததானுலும் அது வேதத்துக்குப் புறம்பானதல்ல, என்று கூறினர்கள். பின் பிராம்மணர்களின் க ட மை யை எடுத்துரைத்தார்கள். ஒவ்வொரு பிராம்மணனும் வேத அத்யயனம் செய்தவராக இருத்தல் அவசியம் என்பதை மிக்க அழுத்தமாக வலியுறுத்தி பிரசங்கித்தார்கள். முடிவில் "ஸ்ரீ சாரதாதேவியும், ஸ்ரீ சந்திரமௌளீச்வரரும் இங்கு குழுமியுள்ள யாவருக்கும் அருள்பாலிப்பார்களாக" என்று ஆசீர்வதித்தார்கள். அதன்பின் ரித்விக்குகளுக்கு ரூபாய் 25 முதல் 100 வரை தரவாரியாக சன்மானம் வழங்கினர்கள். பலருக்கு வஸ்த்ரம் அளிக்கப்பட்டது. சிலருக்கு பொன்னுடை, சால்வைபோன்ற மரியாதைகளும் செய்யப்பட்டன. அவர்களின் பிரயாணச்செலவும் அளிக்கப்பட்டது.

இந்த வைபவங்களில் கலந்துகொண்டு சிறப்பித்த பெரியார்களில் கு றி ப் பா க மைசூர் மஹாராஜா, டாக்டர் C. P. ராமஸ்வாமி அய்யர், ஸ்ரீ வீரண்ணகௌடர், சிவகங்கை, ஹரிஹரபுரம் மடங்களின் அதிபர்கள், மசூலிபட்டணம் காயத்ரீ பீடாதிபதி, ஸ்ரீ காசி சச்சிதானந்த ஸரஸ்வதி, ஸ்ரீ பாஷ்யஸ்வாமிகள், ஸ்ரீசங்கரானந்தர், அவருடைய சிஷ்யர் ஸ்ரீ வித்யாரண்யபாரதீ, ராஜா வேங்கடராவ் லிம்பேகரும், அவருடைய மனைவி ராணி லிம்பேகரும், இலஞ்சி வள்ளல் திரு I. A. சிதம்பரம் பிள்ளை இன்னும் பல ஓய்வுபெற்ற நீதிபதிகள் முதலியவர்கள் ஆவர்.

மார்ச்சு மாதம் 1ந்தேதி டாக்டர் ராஜேந்திர பிரசாத் காலம் சென்ற சமாசாரம் கேட்டு அதை ஓர் துக்கதினமாகக் கருதி, அவசியமாய் நடந்துகொண்டிருந்த ஹோம ஜபதபங்களைத்தவிர மற்ற அலுவல்கள் நிறுத்தப்பட்டன. அன்று மாலை கூடிய கூட்டத்தில் ஜகத்குரு மஹா சந்நிதானங்கள் ராஜேந்திரபிரசாத்தின் மறைவுக்கு தமது அநுதாபத்தைத் தெரிவித்து அன்னுருடைய குணாதிசயங்களைக்கூறி வெகுவாகப் புகழ்ந்தார்கள். மார்ச்சு மாதம் 2ந்தேதி மகாநாடுகள் நடந்தன. முதலில் தர்மாதிகாரிகளின் மகாநாடு, பின்பு சிஷ்யர்களின் மகாநாடு இதில் சங்கர கிருபா (தமிழ் பதிப்பு) ஆசிரியர் பிரம்மஸ்ரீ K. R. வெங்கடராமய்யர் சிறந்ததொரு சொற்பொழிவாற்றினர். ஏனையோரும் பேசினர்கள். கன்னடம், தமிழ்,

ஹிந்தி, ஆங்கிலம் முதலிய மொழிகளில் உரைகள் நிகழ்ந்தன. தமிழில் பேசியவர் இலஞ்சி வள்ளல் திரு I. A. சிதம்பரம் பிள்ளையவர்கள். அவர் ஆசார்யாளின் விஜய யாத்திரையை சைவசமயாச்சார்யர்களின் யாத்திரைக்கு ஒப்பிட்டு, ஆசார்யாள் சென்றவிடமெல்லாம் தமது சீரிய வாழ்க்கையாலும், அன்பு ததும்பும் உரையாடல்களாலும், உபதேச மொழிகளாலும் மக்களின் மனதைக் கவர்ந்ததோடல்லாமல் சமயப் பற்றையும் ஆஸ்திகத்தையும் வேரூன்றச் செய்து வருகிறார்கள் என்றார்.

பின்பு கும்பாபிஷேக மலர் வெளியீடு நிகழ்ச்சி நடந்தது. சங்கர கிருபா பதிப்பாசிரியர் ஜகத்குருவின் விஜய யாத்திரையை ஆங்கிலத்தில் எழுதி கும்பாபிஷேக மலருக்கு ஓர் அநுபந்தமாக வெளியிட வேண்டும் என்ற கருத்தைத் தெரிவித்தார். சில அன்பர்கள் ஜகத்குருவின் சென்னை விஜயத்தை விரிவாக எழுதி பிரசுரம் செய்யவேண்டுமென்றார்கள். இந்த இரண்டு கருத்துகளும் ஒன்று சேர்த்து ஒரே புஸ்தகமாக வெளியிட ஓர் குழு ஒன்று நிறுவி அதற்கு ப்ரம்மஸ்ரீ K. R. வெங்கடராமய்யர் பொதுப்பதிப்பாசிரியராகவும், ஸ்ரீ K. R. R. சாஸ்திரியும், ஸ்ரீ K. சங்கர நாராயணய்யரும், பொதுவாக பிரசுரத்துக்கு வேண்டிய ஏற்பாடு செய்யவும், ஸ்ரீ P. S. சுப்ரமண்ய அய்யரும், ஸ்ரீ சட்டநாதய்யரும் படங்களும் விளம்பரங்களும் சேர்ப்பதற்கும் நியமிக்கப்பட்டார்கள்.

பின்பு டாக்டர் C. P. ராமஸ்வாமி அய்யர் கும்பாபிஷேக மலரை வெளியிட்டு நீண்டதொரு உரை நிகழ்த்தினர். ஆதி சங்கரரின் அபார சக்தி, அறிவு, அவர் நமக்கு விட்டுப்போன நூல் செல்வங்கள், அவர் வழியில் வாழையடி வாழையாக வந்த ஆசார்ய பரம்பரையின் மகிமைகள் தற்போது அருளாட்சி நடத்தும் மஹா சந்நிதானங்களின் பெருமைகள் தனக்கும் மடத்துக்கும் ஏற்பட்ட தொடர்பு, தான் ஸ்ரீ சந்திரசேகரபாரதீ சுவாமிகளிடம் உபதேசம் பெற்றது, இன்னும் பல்வேறு விஷயங்கள் அடங்கியதாக அவர் சொற்பொழிவு இருந்தது

பின்பு பாஷ்ய ஸ்வாமிகள் என்ற ஸ்ரீ சச்சிதானந்த தீர்த்த ஸ்வாமிகளால் தமிழ் உரையுடன் ஸம்ஸ்கிருத சுலோகங்களாக இயற்றப்பட்ட "ஸ்ரீ ஜகத்குரு சரிதாம்ருதம்" என்னும் ஸ்ரீ சந்திரசேகரபாரதீ மஹா ஸ்வாமிகளின் திவ்ய சரித்திரத்தின் முதல் பாகத்தையும், மசூலிபட்டணம்

ஸ்ரீ காயத்ரீ பீடாதிபதி ஸ்ரீ வித்யாசங்கர ஸ்வாமிகள் எழுதிய ஸம்ஸ்கிருத காவியமான ஸ்ரீ சந்திரசேகரபாரதீ ஸ்வாமிகளின் வாழ்க்கை வரலாற்றை யும் ஜகத்குரு மஹா சந்நிதானங்களே வெளியிட்டு அருளினுர்கள்.

ஸ்ரீ ஜகத்குரு மஹாசந்நிதானம் அவர்கள் முடிவுரை நிகழ்த்திக் கூறியதின் சாரம் :—

“நாம் கோதாவரி தீரத்திலிருந்து கன்யாகுமரி முடிய சஞ்சாரம் செய்திருக்கிறோம். பல்வேறு தரத்து மக்களோடும், பல பாஷைகள் பேசுகிறவர்களோடும், இன்னும் உடையிலும்கூட வித்யாசமுள்ள பல மக்களோடும் தொடர்பு கொண்டோம். ஆயினும் ஒரே ஒரு அம்சம் யாவரிடத்திலும் ஒன்ருக இருக்கக்கண்டோம். அதுதான் மக்களின் அன்பு. நமது மதம் யாவரையும் ஒற்றுமைப் படுத்தியிருக்கிறது. நாட்டின் பலபகுதிகளில் வசித்தாலும், அரசியலில் கருத்து வேற்றுமைகள் இருந்தாலும், பேசும் மொழிகள் வெவ்வேருக இருந்தாலும் சமயத் துறையில் யாவரிடமும் ஒற்றுமையையே கண்டோம். பல்வேறு பாகுபாடுகளில் ஒற்றுமையைக் காண்பதே நமது சமயத்தின் அடிப் படைக் கொள்கை. இங்கு நடந்த கும்பாபிஷேகமும், ஸஹஸ்ரசண்டீ மஹா யக்ஞமும் பல்வேறு சிஷ்யர்களை, பல்வேறு திசைகளிலிருந்து இங்கு வரும்படி செய்து ஆந்திரர், தமிழர், கேரளத்தார், கர்னுடகத்தார் இன்னும் வேறு சீமைகளினின்றும் வந்த மக்களை ஒருமைப்படுத்தியதே நமது சமயத்தின் அடிப்படைக் கொள்கைக்கு நிதர்சனமான சான்ருகும். சிறப்பாக மைசூர் மஹாராஜாவும், டாக்டர் C. P. ராமஸ்வாமி அய்யரும் யாவரோடும் சகஜமாகப்பழகி தர்மநெறியில் யாவரும் சகோதரர் என்பதை நிரூபித்து விட்டார்கள்”. பின்பு அன்று வெளியிடப்பட்ட நூல்களைப் பற்றி பிரஸ்தாபித்து விட்டு “இறைவன் உங்கள் யாவரையும் ரக்ஷிக்கட்டும்” என்று ஆசிவழங்கி முடித்தார்கள்.

ஸ்ரீ P. S. சுப்ரமண்ய அய்யர் நன்றி உரை கூறினுர். ஆசார்யாள் மறுபடியும் விஜய யாத்திரையை ஆரம்பிக்க வேண்டுமென்றும், அது மக்களின் நெஞ்சகமான நிலங்களுக்கு தண்ணீர் பாய்ச்சி வளப்படுத்து வது போன்று இருக்குமென்றும் சொன்னுர்.

துங்காநதிக்கரையிலிருந்து வடக்குத் தலைவாசல்வரை மக்கள் திரண்டு ஜன சமுத்திரம்போல் காட்சியளித்தது. சொற்பொழிவுகளை

நிச்சப்தமாகவும் ஆர்வத்துடனும் கேட்டார்கள். ஒலிபெருக்கி சிறந்த முறையில் அமைந்திருந்தது. சாரதாலயத்தின் முகப்புப் பந்தலில் சிறப்புச் சொற்பொழிவுகள் நாள்தோறும் நடந்தன. சொற்பொழி வாற்றியவர்களில் சிலரைக் குறிப்பிடலாம். ஸ்ரீ V. S. ராமச்சந்திர சாஸ்திரிகள், ஸ்ரீ கிருஷ்ண ஜோஷி, ஸ்ரீ சுந்தரச்ரௌதிகள், ஸ்ரீ P. ராமதாஸ், ஸ்ரீ R. கிருஷ்ணஸ்வாமி அய்யர், ஸ்ரீ அண்ணுவிராமன், ஸ்ரீ கி. வா. ஜகந்நாதன், ஸ்ரீ K. V. சுப்பரத்னம் முதலியோர்.

ஜகத்குருவின் சந்நிதியில் ஆந்திர பண்டிதர்களுக்கும், தமிழ்நாட்டு பண்டிதர்களுக்கும் வேத பாராயண போட்டி நடந்த நிகழ்ச்சி குழுமி இருந்த பல்லாயிரம் ஆஸ்திகர்களுக்கு நல்விருந்தாய் இருந்தது. இந்த வைபவங்களில் கலந்துகொண்டவர்கள் சுமார் ஒரு லக்ஷம் மக்கள் இருக்கலாம். பல்வேறு ஊர்களிலிருந்து வந்தவர்கள், பல்வேறு கலாசாரம் உடையவர்கள், பல்வேறு மொழி பேசுபவர்கள், இவர்கள் அனைவரும் ஒருமித்து ஒருவரோடொருவர் சகஜமாய்ப் பழகியது நமது ஜகத்குரு மஹாசந்நிதானங்களின் காந்தம் போன்ற ஈர்ப்பு சக்தியே யாகும். அவர்கள் ஒவ்வொருவர் உள்ளத்திலும் புகுந்து அனைவரையும் ஒன்றுசேர்த்து பக்தியிலும் அன்பு நெறியிலும் ஈடுபடுத்தினர்கள் என்பது மிகையாகாது.

## கோடிநாமார்ச்சனமஹோத்ஸவம்

சிருங்கேரி கும்பாபிஷேகத்திற்குப்பின் நமது ஆசார்யாள் அங்கேயே வாஸம் செய்து கொண்டு யாவருக்கும் அருள் பாலித்து வந்தார்கள். சில மாதங்கள் சென்ற பின் நம் நாட்டு மக்கள் படும் துன்பங்கள் எல்லாம் விலக தெய்வத்திருவருள் கிடைப்பதற்காக சிருங்கேரியில் விளங்கும் ஸ்ரீ சாரதாதேவிக்கு ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தைக்கொண்டு கோடிநாமார்ச்சனை நடத்த ஸங்கல்பித்தார்கள் இது தெரிந்து பாரத நாட்டு மக்கள் யாவரும் மிகுந்த பக்தி சிரத்தையுடனும் உத்ஸாகத்துடனும் இதில் ஈடுபட்டனர் 1964 ஜனவரி 16உ குருவாரத்தன்று ஆரம்பிக்கப் பட்டு பிப்ரவரி 20உ குருவாரம் முடிய மிகுந்த விமரிசையுடனும் விதிப் படியும் கோடி நாமார்சனமகோத்ஸவம் நடைபெற்றுது. மைசூர் மஹாராஜா தமது குடும்பத்துடன் வந்து தரிசித்தார். இதையொட்டி சேங்காலிபுரம் ப்ரஹ்ம ஸ்ரீ அநந்தராம தீக்ஷிதர் அவர்களின் பாகவத

ஸப்தாஹப்ரவசனமும், அநேக பண்டிதர்களின் உபந்யாஸங்களும், ஸங்கீத நிகழ்ச்சிகளும் நடைபெற்றன. "விஷ்ணு அலங்காரப்ரியர், சிவன் அபிஷேகப்ரியர், அம்பாளோ 'நாமபாராயணப்ரீதா' அர்ச்சனை செய்ய வசதி இல்லாதவர்கள் பாராயணம் செய்தால் கூட போதும், அவள் அவ்யாஜகருணா மூர்த்தி, அக்ஞாநத்வாந்ததீபிகை" என்று ஆசார்யாள் உபதேசித்தார்கள். 150க்கு மேற்பட்ட உபாஸகர்கள் இதில் பங்கு கொண்டு அங்கமாக கணபதி ஹோமம், லலிதா ஹோமம் முதலியவற்றையும் நடத்தினர் பூர்ணாஹுதி சமயம் ஸ்ரீ மஹாஸ்வாமி களுடன் மஹாராஜாவும் ஹரிஹரபுரம் மடாதிபதிகளும் மற்றும் பல யதீச்வரர்களும் பல்லாயிரக்கணக்கான பக்தர்களும் ஸுவாஸினிகளும் குழுமியிருந்தனர். அர்ச்சனைகளில் பக்தர்கள் பங்கு கொண்டனர். ஆயிரக்கணக்கான பக்தர்கள் ( கடல் கடந்த நாடுகளிலிருந்தும்கூட ) காணிக்கைகளைச் செலுத்தினர். ருத்விக்குகளுக்கு ரூ. 20000ம் வித்வான்களுக்கு ரூ. 5000ம் ஸம்பாவனை அளிக்கப்பட்டது. சால்வை களும் சாதராக்களும் சிலருக்கு வழங்கப்பட்டன. ஸ்ரீ சாரதாம்பிகையின் ஊர்வலத்துடன் உத்ஸவம் பூர்த்தியடைந்தது.

ஸ்ரீ ஜகத்குரு மஹாஸந்நிதானங்களின் தேஜோமயமான முக மண்டலத்தை முதன் முதல் தரிசிப்பவர்களுக்கு இயல்பாகவே ஓர் பணிவும் சிறிது அச்சமும் கூட ஏற்படும். ஆனால் அடுத்த விநாடியில் ஆசார்யாளின் அன்பு ததும்பும் புன்முறுவலும் அமிருதமொழியும் அச்சத்தை அகற்றிவிடும். சிறுகச் சிறுக ஆசார்யாளின் அறிவின் பிரகாசத்தாலும், அவர்களின் செயல்களாலும் ஈர்க்கப்பட்டு தரிசிக்க வந்தவர்கள் தற்போதமிழந்து தம்மையே அர்ப்பணித்துவிடுவார்கள். அதுவும் அவரவர் பக்குவத்துக்குத் தகுந்தபடியேதான் அமையும். இன்னலுற்றுச் சென்றவர் இன்பமுற்றுத் திரும்புவர். ஆன்மீயத் துறையில் விருப்புற்று வருகிறவர்கள் அத்துறையில் தீவிர வேட்கையும் விகாஸமும் அடைவர். தம்மை தரிசிக்க வரும் பல்லாயிரக்கணக்கான மக்களிடம், ஜாதி, குலம், வகுப்பு மதம், கல்வி என்ற பாகுபாடுகள் யாதுமின்றி சகஜமாக உரையாடுவார்கள். யாருமே ஆசார்யாளிடம் அந்நிய பாவத்துடன் இருக்கவேண்டிய அவசியமே கிடையாது. ஆசார்யாள் தங்கள் அன்பில் ஜாதி சமய வரம்புகளைக் கடந்து நிற்பவர்கள்,

தற்காலத்தில் பரவி வரும், பகுத்தறிவின் பெயரால் முளைத்துள்ள சமவாதம், சம உரிமை, தேசீயம், வகுப்புவாதம் போன்ற இதர கட்சிப் பிரதி கட்சி வாதங்களின் மத்தியில் ஆசார்யாளின் ஆத்யாத்மிக உபதேச மொழிகள், ‘‘சகல ஜிவர்களிடமும் வசிப்பது ஒரே பரம்பொருள்’’ என்ற உண்மையை வலியுறுத்தி ‘‘ஸம்க்ஞானம்’’ என்ற அடிப் படையில் பரஸ்பர அன்பினாலும் ஒருவரை ஒருவர் நன்கு புரிந்து கொள்வதால் மட்டுமே சமய சமுதாய சீர்திருத்தம் ஏற்பட்டு யாவரும் ஒற்றுமையாய் வாழச் செய்யும் என்ற முறையில் அமைந்தவை. தற்காலத்தில் நிலவிவரும் ‘‘சில சீர்கேட்டுக்கு’’ எதிராக ஆசார்யாள் உபதேசிப்பது ; நம்முள் ஒவ்வொருவரிடமும் தெய்வீக சக்தி அமர்ந் திருக்கின்றது. அதனை ஒவ்வொருவரும் ஸ்வதர்மத்தைக் கடைப் பிடிப்பதினாலும் பிறர் தர்மத்தை இகழாமையாலும் அபிவிருத்தி செய்து வளர்க்கலாம். முதலில் தன்னைத் திருத்திக்கொண்ட பின்பே தனது சமுதாய சூழ்நிலையைத் திருத்த முயலவேண்டும் என்று கேட்டவர் மனதில் பதியும்படி பலமுறை உபதேசிப்பார்கள்.

ஆசார்யாளின் விஜய யாத்திரையில் ஆலயங்களை தரிசிப்பது மட்டுமல்லாமல், ஆங்காங்கு அமைந்துள்ள கல்வி நிலையங்களையும் பார்வையிடுவார்கள். உதாரணமாக மதுரையிலிருக்கும் போது, மதுரைக் கல்லூரி, அழகப்பசெட்டியார் கல்லூரி, முதலியனவற்றைப் பார்வை யிட்டார். காலடியில் சங்கர கல்லூரியைப் பார்த்த விஷயம் முன்பே கூறப்பட்டது. அம்மட்டேயன்றி ஆங்காங்குள்ள, தொழிற்சாலைகள், தர்மஸ்தாபனங்கள் பொதுநலசேவா ஸ்தானங்கள், முதலியவற்றையும் பார்வையிடுவது ஆசார்யாளின் வழக்கம். எங்கெல்லாம் அறிவு அபிவிருத்திக்கும், வாழ்க்கையின் சீரமைப்புக்கும் பிரயத்தனங்கள் செய்யப்படுகின்றனவோ ஆங்கெல்லாம் நமதாசார்யாள் விஜயம் செய்வார்கள். அவர்களுடைய புனிதமான சாந்நித்தியமே, நமது லௌகிக வாழ்க்கைக்கும், ஆன்மீய வாழ்க்கைக்கும், இருந்துவரும் பெரும்பிளவை நினைவூட்டி நம்மை இறைவன் சேவையில் ஈடுபடச் செய்யும்.

அவர்கள் விஜயம் செய்யும் இடங்களில் அளிக்கப்படும் வரவேற்பில் சமூகத்தில் எல்லாவகுப்பினரும் பங்கெடுத்துக்கொள்வார்கள். பாலக்காடு

திருச்சூர், திருநெல்வேலி, பாளையங்கோட்டை, தூத்துக்குடி, விருதுநகர், அருப்புக்கோட்டை, தேவகோட்டை, மதுரை, பெரியகுளம், கோபி செட்டி பாளையம், கோயம்புத்தூர் முதலிய இடங்களில் நகராண்மை மன்றத்தார் வரவேற்புரை வழங்கினர். இவைகளில் எல்லா வகுப்பினரும், சமயத்தவரும் கலந்து கொண்டனர். அநேக நகரங்களிலும், கிராமங்களிலும், ஆயிரக்கணக்கான மக்கள் புடைசூழ புஷ்பாலங்காரம் பண்ணப்பட்ட தங்கப் பல்லக்கில் ஆசார்யாளை எழுந்தருளச் செய்து ஊர்வலங்கள் பிர்ம்மாண்டமான அளவில் நடந்தன. ஊர்வலத்தில் வரும் ஜனத்திரளில் ஒரு பக்கம் வேத ஒலி முழங்கும், மற்றொரு பக்கம் பஜனை இசை கேட்கும். திடீரென்று "ஜே! சங்கர்! ஜே! ஜகத்குரு!" என்று உணர்ச்சி வேகத்தில் கிளம்பும் பேரொலி வானைப் பிளக்கும். இதற்கு ஒரு சாம்யம் சொல்லவேண்டுமானால் ரோமாபுரியில் போப்பாண்டவர் பவனி வரும்போது "போப்பாண்டவர் வாழ்க" என்று கோஷமிடும் காட்சியை வேண்டுமானால் ஒப்பிடலாம். ஆசார்யாள் தமது ராஜ்ய பிருதுகள் அனைத்தையும் சிருங்கேரியிலேயே விட்டுவிட்டு, மோட்டார் வாஹனங்களில் இடத்துக்கு இடம் துரிதமாக சஞ்சாரம் செய்கிறார்கள். அவர்கள் செல்லும் இடங்களிலெல்லாம் அவர்களின் அருளொளி வீசி மக்களுக்கு ஓர் சாந்தியை அளிக்கின்றது. விவேக சூடாமணியில் 39வது சுலோகம் ஞாபகத்துக்கு வருகின்றது.

"ஸம்ஸாரசாகரத்தைக் கடந்தவராதலால் அவருடைய சாந்தமும், நிதானமும் ஒப்பற்று விளங்குகின்றன. இளவேனிற்காலம் போல அவருடைய உபதேச மொழிகள், விடுதலையையும், சந்தோஷத்தையும், அமைதியையும், அருளையும் நல்குகின்றன".

---

# பத்தாம் அத்தியாயம்
## சமஸ்தான நிருவாகம்

சிருங்கேரி சமஸ்தானம் 14ம் நூற்றுண்டில் ஸ்ரீ பாரதீகிருஷ்ண தீர்த்தர் ஸ்ரீ வித்யாரண்யர் இவர்கள் காலத்தில் விஜயநகர சாம்ராஜ்ய மன்னர்களாக இருந்த முதலாவது ஹரிஹரர், முதலாவது புக்கர், இரண்டாவது ஹரிஹரர் இவர்களால் தானம் செய்யப்பட்ட நிலங்களை அடிப்படையாகக் கொண்டு உருவாயது. முதலாவது ஹரிஹரர் 1346ல் செய்த தான சாஸனப்படி கிடைத்த நிலம்தான் முதல் பூதானம் என்பது நேயர்களுக்கு நினைவிருக்கலாம். அவருக்குப்பிறகு அரசாண்ட மன்னர்களும், ஆங்கில சர்க்கார் நிருவாகஸ்தர்களும் கூட சிருங்கேரியின் சமஸ்தான பதவியை அங்கீகரித்ததுமட்டுமின்றி அதனைக் காப்பாற்றியும் வந்தனர். அரசியல் குழப்பங்கள் தென்னுட்டில் தலைவிரித்தாடியபோது சில துஷ்டர்கள் சமஸ்தானத்திற்குச் சொந்தமான நிலங்களையும், கிராமங்களையும், ஆக்ரமித்துக் கைப்பற்றியபோது அரசர்களும், மேலதிகாரிகளும் உதவிக்கு வந்து, சமஸ்தானத்தின் பாத்தியங்களுக்குப் பாதுகாப்பு அளித்தனர்.

சமஸ்தானத்துக்குச் சொந்தமான நிலங்கள் 1653ம் ஆண்டுக்கு முன் பல தடவைகளில் பரிசீலிக்கப்பட்டன. 1653ல் அக்காலத்தில் சமஸ்தானுதிபதியாகவிருந்த ஆசார்யாளின் ஆக்ஞையின்பேரில் சிவப்ப நாயக்கர் நிலங்களை அளந்து, நான்குமால் நிர்ணயம் பண்ணி, இனும்தார் களுக்கும், வாரதார்களுக்கும், குத்தகைதார்களுக்கும் ஏற்பட்ட நிலங் களின் விஸ்தீரணங்கள் ஸ்திரமாக்கப்பட்டன. பிரிட்டிஷ் கமிஷன் நில சர்வே செட்டில்மெண்டு செய்ய ஆரம்பித்தபோது அக்காலத்தில் சமஸ்தான பீடாதிபதியாக அருளாட்சி புரிந்த ஜகத்குரு ஸ்வாமிகள் இந்த செட்டில்மென்டால் இனும்தார்களும், குத்தகைதார்களும் நன்மை யடையலாம் என்றும் வீண் வியாஜ்ஜியங்களுக்குத் தேவையிருக்காது என்றும் கருதியே சமஸ்தான நிலங்களை சர்வே செய்யச் சம்மதித் தார்கள். 1887ம் ஆண்டில் மைசூரிலிருந்த சர்வே அதிகாரியை எந்த விதமான செட்டில்மெண்டு செய்வது உசிதம் என்று ஆராய்ந்து ரிப்போர்ட்டு அனுப்பும்படி மேலிடத்திலிருந்து தாக்கீது வந்தது. அதை அனுசரித்து ஜகத்குரு ஸ்வாமிகளைக் கலந்தபோது அவர்கள் நிலங்களை

20

சாகுபடி செய்கிறவர்களுக்கு விட்டு விட்டு அந்நிலங்களின் தீர்வையை நிர்ணயித்து அதைப் பணமாகவோ, தானியமாகவோ சமஸ்தானத்துக்குச் செலுத்தும்படி ஏற்பாடு செய்யலாம் என்று அபிப்பிராயப்பட்டார்கள். 1888ம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் இனும்தார்களும், வாரதார்களும் நன்மையடைவதை உத்தேசித்து, ஜகத்குருஸ்வாமிகள் மடம் சம்பந்தப் பட்ட வரையில் தீர்வையைத் தானியமாகக் கொடுப்பதையும் விட்டுக் கொடுத்தார்கள்.

ஸ்ரீ ஜகத்குரு ஆசார்யாளின் ஆணைப்படியே 1897ம் ஆண்டு டிஸம்பர் 12ம் தேதியில் மைசூர் சர்க்கார் இந்திய சர்க்காரின் அனுமதியைப் பெற்று "சிருங்கேரி ஜாகீர் இனும் செட்டில்மென்டு ரெகுலேஷன்" என்ற சட்டத்தை இயற்றியது. அதன்கீழ் பிறப்பிவிக்கப்பட்ட விதிகளும், அறிக்கைகளும் மைசூர் ராஜ்யமும், இந்திய சர்க்காரும் சிருங்கேரி சமஸ் தானத்தின் பாத்தியதைகளையும், அந்தஸ்தையும் பாதுகாக்க எடுத்துக் கொண்ட அக்கரையைக் காட்டுகின்றன. 1900ம் ஆண்டில் நடத்தப் பட்ட சர்வே செட்டில்மென்டுப்படி ஏற்பட்ட நிலைமை யாதெனில்:— சாகுபடி செய்பவர்கள் குடிவாரதார்களாகக் கருதப்பட்டனர். அவர் களுக்கு நிலத்தின்மீது சர்வசுதந்திர பாத்தியமும் அளிக்கப்பட்டது. அவர்கள் நிலங்களை விற்கவோ, பந்தகப்படுத்தவோ கூடும். அவர்களின் வாரிசுகள் அந்நிலங்களைக் குடும்ப சொத்தாக பாவித்து அனுபவிக்கலாம். தர்காஸ்து மூலம் நிலங்கள் ஜாரி செய்யப்படுவது "மைசூர் நிலத்தீர்வை" சட்டத்தின் ஷரத்துகள்படி அமுலாக்கப்பட்டது. சமஸ்தானம் கூலி யாட்கள் வைத்து நிலசாகுபடி செய்வதில்லை. நிலசுவான்தார்கள் யாரும் அப்புறப்படுத்தப்படவுமில்லை.

காடுதிருத்திப் பாக்குக்கன்றுகள் சாகுபடி செய்த விவசாயிகளுக்கு சமஸ்தானம் பண உதவி செய்ததாயும், அவைகள் பலனுக்கு வந்த வுடனே அந்நிலங்களை அந்தந்த விவசாயிகளுக்கு ஜாரி செய்ததாகவும் பழய தஸ்தாவேசுகளிலிருந்து அறியமுடிகின்றது. ஏழை விவசாயி களுக்கு உணவும் உடையும் வழங்கப்பட்டன. பணமாகவோ, தானிய மாகவோ தீர்வை வசூல் செய்யும் பழய திட்டம் கைவிடப்பட்டது. அதற்கு பதிலாக நிலஸ்வாந்தார்களிடமிருந்து "கந்தாயம்" அல்லது மேல்வாரம் மட்டும் பணமாகவே சமஸ்தானம் வசூலித்தது. இது சட்டப்படி தீர்வை

யாகாது. நிலங்களை விவசாயிகளுக்குக் கொடுக்கும்போது சமஸ்தானம் எந்தவிதமான ஈடுதொகையும் வாங்கவில்லை. ஜகத்குரு ஸ்ரீசச்சிதானந்த சிவ அபிநவ ந்ருஸிம்ஹ பாரதீ சுவாமிகளால் தன்னிச்சையாகவே செய்த இந்த ஏற்பாடு விவசாயிகளுக்கு விடுதலையளித்து, அவர்களை நிலசுவான் தார்களாக்கியது. சமஸ்தானத்தின் நிலத்தீர்வை நிருவாகம் மைசூர் நிலத்தீர்வை சட்டப்படி அமுலில் வந்தது.

பூச்சிகளாலும், கிருமிகளாலும் நஷ்டப்படுத்தப்படும் தோப்பு நிலங் களுக்கு ரூபாய்க்கு நாலணு வஜா செய்யப்பட்டது. சமஸ்தானத்தின் இனும் நிலங்களாக வகுக்கப்பட்ட யாக்குமரத் தோப்புகளின் வருமான மும், நெல் வயல்களின் வருமானமும், ஆலயங்களுக்காகத் தனித்தனியே வசூலிக்கப்படும் வரத்தொகைகளும் வெவ்வேருகவே சமஸ்தான தஸ்தா வேசுகளில் கணக்குவைக்கப்பட்டிருந்தன. 1941ம் ஆண்டில் ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரபாரதீ சுவாமிகளின் விருப்பப்படி மைசூர் சர்க்கார் தரிசு நிலங்களை ஜாரி செய்து அவற்றைப் பெறுவோருக்கு தனிப்பட்டாக்கள் கொடுக்கப்பட்டன.

பொதுநலஸேவைகள் :— சமஸ்தானத்தின் செலவுகளில் பெரும்பான்மை, அதாவது சராசரி ஒன்றேகால் லக்ஷம் ரூபாய்வரை பொதுநலத்துக்குச் செலவிடப்படுகின்றது. இவைகளில் கல்வி, கலாச்சார அபிவிருத்தி, உணவு அளித்தல் இவைகளுக்கு ஒரு லக்ஷம் ரூபாய் செலவு செய்யப்படுகின்றது. கிராம அபிவிருத்தி, நீர்பாசன வசதிகளைப் பழுதுபார்த்தல், போக்குவரத்து ரஸ்தாக்களைச் செப்பனிடுதல்போன்ற மற்ற செலவுகளையும் சமஸ்தானம் ஏற்றுக்கொண்டிருக்கின்றது.

1841—42ல் ஸ்ரீ ஜகத்குரு மஹா சந்நிதானம் அவர்கள் சிவில் கிரிமினல் அதிகாரத்தோடு கூடிய ஓர் அமீல்தாரை நியமித்து சட்ட நிருவாகத்தை மைசூர் சர்க்கார் பாணியில் அமைக்க ஏற்பாடு செய்தார்கள். தற்காலத்தில் சட்ட நிருவாகத்தை சர்க்காரே ஏற்றுக் கொண்டுவிட்டது. ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகர பாரதீ ஸ்வாமிகள், சமஸ்தானத்தின் நிலத்தீர்வை முதலிய நிருவாகத்தைக் கண்காணிப்ப தற்கு மைசூர் சர்க்காரில் உயர்தர உத்தியோகம் பார்க்கும் ஒருவரை நியமிக்க விரும்பினுர்கள். அதன்படியே சிக்மகளூர் ஜில்லா டிபுடி

கமிஷனரின் மேல்பார்வையில் ஓர் உயர்தர உத்தியோகஸ்தர் நிலநிருவாக அதிகாரியாக நியமிக்கப்பட்டார். இந்த நிருவாக ஸ்தாபனத்தின் செலவுகள் முற்றும் சமஸ்தானமே ஏற்றுக்கொண்டது.

1947ல் சமஸ்தான நிலஅடமான வங்கி (**Bank**) ஒன்று ஸ்தாபித்து குடிகளுக்கு குறைந்த வட்டியில் விவசாயக் கடன் கொடுத்துதவ ஏற்பாடு செய்யப்பட்டது. மானங்காத்த பூமிகளை சாகுபடி செய்யும் விவசாயிகளுக்கு மழையில்லாத காலத்தில் தீர்வை வஜா அளிக்கப்பட்டது. சர்க்காரால் கொடுக்கப்படும் "தக்காவி"க் கடன்களோடு ஆலய நிலங்களை அபிவிருத்தி செய்ய பிரத்தியேகக் கடன்களும் கொடுக்கப்பட்டன.

1887ல் சிருங்கேரி ஸ்தலம் ஓர் முனிசிபாலிடியாக அமைக்கப்பட்டது. அது சிருங்கேரி டிபுடி அமீல்தார் மேலபார்வையில் வைக்கப்பட்டது. சமஸ்தானம் வரி வசூலிப்பதை நிறுத்திக்கொண்டது. சுங்கவரி வசூலிக்கும் அதிகாரம் நகராண்மைக் கழகத்துக்குக் கொடுக்கப்பட்டது. அவ்வருமானத்தில் பாதி சமஸ்தானத்துக்கும் மற்ற பாதி நகராட்சி மன்றத்துக்குமாகப் பிரித்துக்கொள்ளப்பட்டது. 1893க்குப் பின்னுல் சமஸ்தானம் தனக்குக்கிடைத்த பாதியையும் விட்டுக்கொடுத்து, அதைக் கொண்டு ஓர் ஆஸ்பத்திரி அமைக்கவும், சுகாதாரநல அபிவிருத்திக்கு செலவிடவும் அனுமதித்தது. 1927ம் ஆண்டு ஜனவரியிலிருந்து சமஸ்தானத்தைச் சேர்ந்த பெரும்பான்மை கிராமங்கள் பஞ்சாயத்து நிருவாகத்துக்கு, வந்தன. கடூர் (சிக்மகளூர்) ஜில்லா போர்டின் நிருவாகத்துக்கு, போக்குவரத்து சாதனங்கள், ரஸ்தாக்கள், சுகாதாரம், கல்வி, பொருளாதார அபிவிருத்தி முதலியவற்றை சமஸ்தானம் ஒப்புவித்தது. ஆயினும் அவற்றிற்குத் தகுந்த நன்கொடையும் அவ்வப்போது சமஸ்தானம் வழங்கி வந்தது.

கல்வி அபிவிருத்தி:—ஆரம்பப் பள்ளிகளிலும் மத்தியதரப் பள்ளிகளிலும் சிருங்கேரி சமஸ்தான எல்லையிலுள்ள மாணவர்களின் எண்ணிக்கை கொப்பாத் தாலூகாவை விடவும், மைசூர் சீமையை விடவும் அதிகப்படியாகவே இருந்தது. நகராண்மைக்கழக உயர்நிலைப் பள்ளிக்கு சமஸ்தானம் ஓர் நல்ல பெரிய கட்டடம் கொடுத்ததோடல்லாமல் 28,000 ரூபாய் நன்கொடையும் சமஸ்தானம் வழங்கியது.

சிருங்கேரி சமஸ்தானததின் பொதுநலத்திட்டங்கள் மற்றெந்த முன்னேற்றமடைந்த பிரதேசங்களோடும் ஏற்றத்தாழ்வு இல்லாமல் திகழ்ந்தது. பிரபுத்வ அதிகார நிலை (Feudalism) அங்கு என்றும் இருந்ததில்லை. கொஞ்சமிருந்த மத்தியகால நிருவாக நிலையும் ஒழிக்கப்பட்டுவிட்டது.

புதிதாக இயற்றப்பட்ட மைசூர் பிராந்திய சட்டம் "ஜாகீர்" திட்டத்தை நீக்கியது. முந்திய ஆண்டுகளின் வருமான சராசரித் தொகையை "தஸ்திக்" அலவன்ஸாக ஜகத்குருவுக்குக் கொடுப்பதாக திட்டம் வகுக்கப்பட்டது. ஏதாவது ஸேவை முந்திச்செய்ததற்காகவோ இனிமேல் செய்யப்படுவதற்காகவோ ஒரு தனிப்பட்ட நபருக்குப் பரிசாக அளிக்கப்பட்ட மானியங்களை உடையவர் என்பதுதான் "ஜாகிர்தார்" என்பதன் பொருள். இந்தப்பொருளில் ஸ்ரீ ஜகத்குரு அவர்களை ஓர் ஜாகிர்தாராகக்கருத இடமில்லை. அவர்கள் வசத்திலிருந்த பூஸ்திதிகள் அவர்களை ஆச்ரயித்த அரசர்களால் பக்தி விஸ்வாசத்தோடு ஸமர்ப்பிக்கப் பட்டவைகளே ஒழிய ஆசார்யாளிடமிருந்து எந்த ஸேவையையும் எதிர் பார்த்துச் செய்யப்பட்டவையல்ல. அதுவுமன்னியில் இந்த தானங்கள் ஆசார்யர்களின் சொந்த அனுபோகத்துக்காகவுமல்ல. ஜகத்குரு மஹா சந்நிதானங்கள் லௌகிகக் கவலையின்றி ஆத்யாத்மிகத் துறையில் மக்களை முன்னேற்றமடையச் செய்யவும், அவர்களுடைய பரிவாரங் களின் சம்ரக்ஷணைக்காகவும், அவர்களை அண்டியிருக்கும் யதிகள், வித்யார்த்திகள், பண்டிதர்கள், இன்னும் மற்ற மடத்து ஊழியர்களின் பராமரிப்புக்காகவும், கல்வி ஸ்தாபனங்கள், ஆலயங்கள் இதர தர்ம ஸ்தாபனங்கள் இவற்றை நிர்வகித்து வருவதற்காகவுமே கொடுக்கப் பட்டவை. இந்தச் சட்டத்தின் விளைவு எதுவாயினும், மடத்தின் சிஷ்ய கோடிகள், சர்க்கார் சிருங்கேரி சமஸ்தானத்தின் புனிதத்தன்மையையும், கௌரவத்தையும், மேன்மையையும் காப்பாற்றும் என்று எதிர்பார்க் கிறார்கள். ஜனநாயக அரசாங்கத்தில் நாம் இருப்பதால் சமஸ்தானத்தின் கண்ணியத்தையும், சம்பிரதாயத்தையும் காப்பாற்றவும், அதோடு இணைக்கப்பட்ட ஸ்தாபனங்களின் முன்னேற்றத்தில் அக்கரைகொண்டு உழைக்கவும் நாம் ஒவ்வொருவரும் கடமைப்பட்டுள்ளோம் என்பதை மறந்துவிடக்கூடாது,

காலஞ்சென்ற பிரதமர் நேருஜீ அவர்கள் ஸ்ரீ சங்கரரைப்பற்றி எழுதியிருப்பதை நேயர்கள் கவனித்துக்கொண்டுவர விரும்புகின்றோம். அதாவது "ஸ்ரீ சங்கரர் தமது ஆற்றலாலும், தோற்றத்தாலும் இக்கால மக்களின் உள்ளத்திலும்கூட ஓர் அதிசயமான உணர்ச்சியை உண்டு பண்ணியிருக்கிறார். மேலும், வடக்கு, தெற்கு, மேற்கு, கிழக்கு, என்ற நாற்றிசைகளிலும் நான்கு பெரிய மடங்களை நிறுவி அறிவுத்துறையிலும், ஆன்மியத்துறையிலும், சமயத்துறையிலும், சமுதாயத்துறையிலும், பாரததேசம் முழுவதும் ஒரே நாடு என்ற ஒற்றுமையை உண்டாக்க முயன்றிருக்கிறார். அக்காலத்திலேயே பாரத நாட்டின் ஒற்றுமையை உணர்ந்து அதற்கு அடிகோலியிருக்கிறார்". இவ்வாறு புகழப்பட்ட ஸ்ரீ சங்கரரின் ஞாபகத்தில் ஊர்ஜிதப்படுத்த நாம் இதுவரை என்ன செய்திருக்கிறோம் என்று ஒவ்வொருவரும் சிந்தித்துப் பார்க்கவேண்டும். இந்நான்கு மடங்களும் நேருஜீ சொன்னதுபோல "தற்கால ஹிந்து சமயத்தத்துவங்களின் கேந்திர ஸ்தானங்கள். அவை நமது பாரம்பரிய மான தேசியச் செல்வங்கள். அவற்றை அலக்ஷியம் செய்வது நம்மையே அழித்துக்கொள்வதுபோலத்தான்.

சிருங்கேரி சமஸ்தானம் 47 கிராமங்கள் அடங்கிய 44 சதுர மைல் விஸ்தீரணமுள்ளதாக இருந்தது. (இந்த கிராமங்களில் 23 சிருங்கேரித் தாலூகாவிலும், 24 ஏனைய மைசூர் பிராந்தியத் தாலூகாக்களிலும்) இந்த கிராமங்களிலுள்ள நிலங்களின் மொத்த விஸ்தீர்ணம் 47,442 ஏக்கர்கள். அவற்றில் 30,786 ஏக்கர் புஞ்சை. 16,636 ஏக்கர் நஞ்சை. மேலும் இவற்றில் 3,217 ஏக்கர் மைனர் இனாம் நிலங்கள். 660 ஏக்கர் தீர்வை விதிக்கப்பட்ட தரிசுகள். இனாம் நிலங்கள் என்பவை தேவதாயம், பிரம்மதாயம் என்ற இருவகுப்பையும் சேர்ந்தவை.

---

# பதினொன்ருவது அத்தியாயம்.

## ஆலயங்களும் அதிஷ்டானங்களும்.

14வது நூற்ருண்டுக்குமுன் ஆசார்யர்களும் அவர்களுடைய சிஷ்யர்களும் சிருங்கேரி, சிம்ஹபுரம், வஸிஷ்டாச்ரமம், கிக்கா, கலசா, என்று இப்பொழுது வழங்கும் இடங்களைச்சுற்றி ஆச்ரமங்களை அமைத்துக்கொண்டு வாழ்ந்தனர். அத்தகைய ஆச்ரமங்கள் சில க்ஷமண கேந்திரங்களிலும், பாசுபத சைவ கேந்திரங்களிலும்கூட அமைந்திருந்தன. இரண்டாவது ஹரிஹரர் என்பவர் "சிருங்கபுரம் தர்ம" பீடத்துக்கு ஓர் மத்திய மடாலயமும், பிராமணர்களுக்கு ஓர் அக்கிரஹாரமும் இருக்க வேண்டும் என்று கருதியதின் பயனுக சிருங்கேரி அக்ரஹாரமும், வித்யாரண்யபுர அக்கிரஹாரமும் உருவாயின. ஸ்ரீ மலஹானிகரேச்வரரையும், ஸ்ரீ சாரதாதேவியையும் வழிபடுகின்றவர்களாயும், வேதசாஸ்திரோக்தமாய் பூஜாக்கிரியைகளைசெவ்வனே செய்பவர்களாகவுமிருந்த பிராம்மணோத்தமர்களுக்காகவே இந்த அக்கிரஹாரங்கள் அமைக்கப்பட்டன.

இவ்வாறு அமைக்கப்பட்ட அடிப்படையிலிருந்துதான் இப்போது இருக்கும் சிருங்கேரி நகரம் உயர்ந்தோங்கி வளர்ந்தது. அது கொப்பா என்ற ஊருக்குத் தென்கிழக்கே துங்கா நதியின் இடது கரையில் அமைந்திருக்கின்றது. இந்நகரின் முக்கியமான தெரு நீண்டு ஒரு சிறு குன்றைச்சுற்றி வளைந்துள்ளது. இக்குன்றின் சிகரத்தில் ஸ்ரீமலஹானிகரேச்வரர் ஆலயம் அமைக்கப்பட்டிருக்கின்றது. துங்கா நதியின் கரை ஓரமாகத்தான் மடத்தின் பிரதான கட்டடங்கள் இருக்கின்றன. பழய கட்டடங்களும், புதிதாகக் கட்டப்பட்ட சந்திரமௌளீச்வரத் தொட்டியும் இங்குதான் உள. பாடசாலைகள், புத்தக நிலையம், சமஸ்தானத்தின் அலுவலகம் யாவும் இக்கட்டிடங்களில் இருக்கின்றன. இந்த வட்டாரத்துள் சமஸ்தானத்தின் முக்கியமான ஆலயங்களும் அதிஷ்டானங்களும் இருக்கின்றன. விதேக முக்தியடைந்த ஆசார்யர்களுடைய சமாதிகளுக்கு அதிஷ்டானங்கள் என்று பெயர். இவைதவிர பல சிஷ்ய யதிகளின் சமாதிகளும் உள. இந்த அதிஷ்டானங்களில் சில பிராம்மணக் குடும்ப வீடுகளுள்ளும் இருக்கின்றன. மொத்தம் சிறிதும் பெரியதுமாக 120 சமாதிக்கோயில்கள் இருக்கின்றன. அவற்றோடு ஓர் க்ஷமணரின்

ஆலயமும்கூட இருக்கின்றது. மடாலய விடுதிகளுக்கு வடக்கே யாத்ரிகர்கள் தங்கும் விடுதியும் இருக்கின்றது.

நதியின் எதிர்கரையில் காடாக இருந்ததைத் திருத்திய 'ந்ருஸிம்ஹ வனம்' என்றழைக்கப்படும் இடத்தில்தான் ஸ்ரீ ஜகத்குருவின் ஆச்ரமம் அமைந்துள்ளது. இந்த ஆச்ரமத்தில் ஆண்டுக்கு எட்டு மாதங்கள் ஆசார்யாள் தங்குவார்கள். ஆச்ரமத்துக்குச் சமீபமாக ஸ்ரீ சச்சிதானந்த சிவ அபிநவ ந்ருஸிம்ஹபாரதீ ஸ்வாமிகளின் அதிஷ்டானமும் அதை அடுத்து ஸ்ரீ சந்திரசேகரபாரதீ ஸ்வாமிகளின் அதிஷ்டானமும் இருக்கின்றன.

மடத்தின் பூஜைப்பேழைகளில் அநேக திவ்ய விக்ரஹங்களும், பிம்பங்களும் உள. அதாவது பாணலிங்கங்கள், சாளக்கிராமங்கள், யந்த்ரத்தகடுகள், இவற்றோடு விக்ரஹங்களும் இருக்கின்றன. இவற்றில் பிரதானமானவை, ரத்னகர்ப்ப கணபதி திருவுருவமும், ஸ்ரீ சந்திர மௌளீச்வரர் என்ற ஸ்படிக லிங்கமும், ஸ்ரீ சக்ரமும் ஸ்ரீ சாரதா விக்ரஹமுமாகும்.

ஆசார்யாளின் பூஜாபீடத்திலிருக்கும் கணபதியின் திருவுருவம் பெரும்பான்மை ஸ்படிகத்தாலும் மத்தியில் ரத்னக்கல்லாலும் ஆனது ஆகையால் அதற்கு ரத்னகர்ப்ப கணபதி என்று பெயர். இந்த மூர்த்தி பிரணவத்தின் ஸ்தூல உருவமாக வழிபடப்படுகின்றார். இவர் ஸர்வ விக்னங்களையும் தீர்த்து ஞானத்தை நல்குபவர்.

ஆதிசங்கர பகவத்பாதாள் கைலாசத்திலிருந்து சந்திரமௌளீச்வர ஸ்படிகலிங்கத்தைக் கொண்டுவந்தார் என்பது ஐதிஹ்யம். இந்த லிங்கத்தின் சிரோபாகம் ஸ்வயம்பிரகாசமாக சந்திரன்போன்று தண்ணொளி வீசுகின்றது. இந்த மாதிரி வேறு எந்த லிங்க உருவத்திலும் காணமுடியாது. சந்திர பிரகாசம் ஞானத்தையும் ஆனந்தத்தையும் காட்டுகின்றது. லிங்கம் என்ற சொல்லுக்கு அடையாளம், அறிகுறி என்பது பொருள். ஈண்டு ஆத்ம சாக்ஷாத்காரம் பெற்ற ஞானிகளின் ஹ்ருதய குஹையில் பிரகாசிக்கும் திவ்ய ஜோதியையே குறிப்பதால் அதற்கு லிங்கம் என்ற பெயர் வழங்குகின்றது. லிங்கத்தை உருவம் என்றோ அருவம் என்றோ சொல்லமுடியாத அருவுருவத்திருமேனி.

அதன் அமைப்பில் எது ஆரம்பம் எது முடிவு என்று குறிக்கமுடியா தாகையால் ஆதியந்தமற்ற பரம்பொருளைக் காட்டுகின்றது. ஸ்படிகத் துக்கு இயல்பாக நிறம் ஒன்றும் இல்லை. ஆனால் அது எந்த வஸ்துவைச் சார்ந்து இருக்கின்றதோ அதன் வண்ணத்தை எடுத்துக்கொள்ளும் இயல்பை உடையது. ஆகையால் நாமரூபமற்ற ப்ரம்மம் மாயையின் லீலையால் நானாவித நாமரூப பேதங்களையுடைய பல உருவங்களை அடியாரை ஆட்கொள்வான் வேண்டி எடுத்துக்கொள்ளும் என்ற அரிய தத்துவத்தையும் இந்த ஸ்படிகலிங்கம் அறிவுறுத்துகின்றது.

நிஷ்கள ப்ரம்மத்தின் பல சகளமூர்த்தங்களில் தக்ஷிணாமூர்த்தி என்பதொன்று. அத்திருவுருவம் எல்லையில்லா ஞானத்தையும், வரம் பற்ற ஆனந்தத்தையும் குறித்து நிற்கின்றது. பிரகாசம் பொருந்திய தூய வெண்ணிறத் திருமேனியும், ஸம்ஸார விருக்ஷத்தைக் காட்டும் கல்லால் நிழலில் அமர்ந்தும், காலவரையற்ற சாஸ்வதமான ஞானத்தின் உருவகமாய் இருக்கும் சந்திரனைச்சூடிய ஜடா மகுடமும், நான்கு திருக் கரங்களும், அவற்றில், ம்ருத்யுவை நிவர்த்திக்கும் அடையாளமான அமிர்தகலசமும், வித்யையைக் குறிக்கும் புஸ்தகமும், ஜபமாலையும். ஜீவப்ரம்ம ஐக்யத்துக்கு அறிகுறியான சின்முத்ரையும் உடையவராகக் காட்சி அளிக்கின்றார். அவர் "சுத்த வித்யா ப்ரதாயகம்" என்றபடி மேதா, ப்ரக்ஞா என்று கூறப்படுகின்ற ஆத்மபோதத்தை அடியார் களுக்கு நல்கும் கருணாமூர்த்தியாகையாலே அவரை "மேதா தக்ஷிணா மூர்த்தி" என்று அழைக்கின்றோம். என்றும் மூப்படையா இளமை யாகவே இருக்கும் இவருடைய பாதகமலங்களில்தான் ஸ்ரீ சங்கரரும் ஏனைய மஹான்களும் உள்ளனர்.

இதே தத்துவத்தை உணர்த்தும் மற்றொரு திருவுருவமே ஸ்ரீ சாரதா தேவியாகும். அகளமான பிரம்மத்தை "ஸர்வ லோக ஜனனி"யாக பெண்பாலில் வைத்து வணங்குகின்றோம். ஸ்ரீ சாரதாம்பாளும், ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியைப்போலவே அம்ருதகலசம், புஸ்தகம், ஜபமாலை, சின்முத்திரை ஆகியவற்றை தமது திருக்கரங்களில் உடையவளாக இருக்கின்றாள். அம்பாளின் கையிலிருக்கும் ஜபமாலையின் மணிகள் பிரபஞ்ச காரணமான தத்துவங்களின் உருவகங்களேயாகும். அவளே

பிரம்ஹம். மற்ற எல்லா தேவித்திருவுருவங்களும் அவளுடைய அம்ச விபூதிகளாக அவளின் குணங்களில் ஒவ்வொன்றை அதிட்டித்து நிற்பன. அவளே திரிமூர்த்திகளான பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் என்பவர்களும், அவரவர்களுடைய சக்திகளான சரஸ்வதி, லக்ஷ்மி, உமா என்பவர்களும், வாமா ஜ்யேஷ்டா, ரௌத்ரீ என்பவர்களும், இச்சாஞானக் கிரியாசக்திகளும் ஏனையவுமாவாள். அவர்கள் அனைவருக்கும் அப்பால் இருப்பவளும் அவளே. ஸ்ரீ சாரதாதேவியின் பிரபாவத்தை மனதினுல் கூட எண்ண இயலாது.

அண்டாண்டம் பிரம்மாண்டம் என்ற இரண்டின் தொகுதியான பிரபஞ்சத்தையும், அப்பிரபஞ்சத்தின் காரண வஸ்துவையும் ஒருங்கே அறிவுறுத்தும் "ஸ்ரீ சக்கரத்தின்" மீது அம்பாள் ஆரோகணித்திருக்கிருள். ஸ்ரீ சக்ரமானது கீழ் நோக்கிய முக்கோணங்கள் ஐந்தும் மேல் நோக்கிய முக்கோணங்கள் நான்கும் சேர்வதால் உண்டாயது. மேல் நோக்கிய நான்கு முக்கோணங்கள் சிவாத்மகம் என்றும் கீழ்நோக்கிய ஐந்து முக்கோணங்கள் சக்தியாத்மகம் என்றும் கூறுப. ஸ்ரீ சக்ரத்தின் மத்தியிலிருக்கும் பிந்து ஸ்தானத்தில் நிஷ்களசிவமான காமேச்வரும் அவருடைய விமர்ச அல்லது சகள நிலையான காமேச்வரியும் அபின்னமாய், அர்த்தநாரியாய் வீற்றிருக்கின்றனர். இந்த இரண்டு வகையான ஒன்பது கோணங்களும் சேர்வதால் உண்டாகும் 43 முக்கோண ஸ்தானங்களில், பிரபஞ்ச தத்துவங்களையும், மனோ விருத்திகளையும் குறிக்கும் "யோகினிகள்" என்று கூறப்பட்ட பல்வேறு சக்திகள் அமர்ந்திருக்கின்றனர். அவர்களுக்கு ஆவரண தேவதைகள் என்று பெயர். ஏனெனில் அவர்கள் நிருபாதிக ஸம்வித்ரூப ப்ரம்மத்தை மறைத்து, நாமரூபமுடைய மனஸ், ஒலி, உருவம் முதலிய விகாரங்களையுடைய பஞ்ச பௌதிக பிரபஞ்சத்தைத் தோற்றுவித்து பூர்ணமான வஸ்துவை அபூர்ணமாயிருப்பதுபோல் பிரமை உண்டாக்குவதால், அவர்கள் "ஆவரண" சக்திகள் அல்லது மறைப்பு சக்திகள் என்று அழைக்கப்படுகின்றார்கள். இந்த ஆவரண தேவதைகளும், சூரியனிலிருந்து கிரணங்கள் கிளம்புவது போல, தேவியினின்றுமே தோன்றுகிறார்கள். ஸ்ரீசக்ர பூஜையில் இந்த ஆவரண தேவதைகள் யாவரும் அம்பாளிடத்தே ஐக்கியமாவதாகக் கருதப்படுகின்றது. அதாவது சாதகன் தனது சகல விருத்திகளையும் வென்று மேலேறி பைந்தவஸ்தானத்திலிருக்கும் தேவியோடு ஐக்கிய

மாகின்றான் என்பதுதான் தாத்பர்யம். பைந்தவஸ்தானத்திலிருக்கும் தேவியே பரப்ரம்ம சொரூபிணியாதலால் அவளிடத்தே பிரகாசவிமர்ச நிலைகள் ஒன்றுபட்டு ஏகமாகிவிடுகின்றன. பிரகாசாம்சம் என்பது பிரம்மத்தின் அகள நிலை. விமர்சாம்சம் என்பது பிரம்மத்தின் சகள நிலை. ஒன்றினின்று ஒன்று தோன்றி திரும்பவும் இரண்டும் அத்விதீய மாய் ஒன்றுபட்டுவிடுவதால் அம்பாளை "பிரகாச-விமர்ச-பரப்ரம்ம-சொரூபிணி"யாக வணங்குகின்றோம். அம்பாளே பிரம்மானந்தம் என்ற பராம்ருத சக்தி

ஸ்ரீ சக்ரத்தின் பைந்தவஸ்தானத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ லலிதாம்பிகை அல்லது ஸ்ரீ ராஜராஜேச்வரி என்ற பரதேவதை ஸ்ரீ சாரதாம்பாளின் மற்றொரு மூர்த்தமேயாகும். ஸ்ரீ ராஜராஜேச்வரிக்கும் நான்கு திருக்கரங்கள். அவைகளில் பின்னிரண்டு கரங்கள் பாசம் அங்குசம் என்பவைகளைத் தாங்கியிருக்கின்றன. முன்னிரு கரங்களில் இக்ஷு கோதண்டமும் பஞ்ச புஷ்ப பாணங்களும் இருக்கின்றன. இவை களில் பாசம் என்பது 'ராகம்' என்ற விருப்பையும், அங்குசம் என்பது 'குரோதம்' என்ற வெறுப்பையும் குறிப்பன. மனஸ்தத்வம் கரும்பு வில்லாலும், ஞானேந்திரிய பஞ்சகம் புஷ்ப பாணங்களாலும் குறிப் பிடப்படுகின்றன. ஸ்ரீ சக்ர பூஜையால் சாதகன் பிரவிருத்தி மார்க்கத்தில் லௌகிக சுகங்களை அடைவதுடன் நிவர்த்தி மார்க்கத்தில் ராகத்துவேஷங் களையும், மன இந்திரியங்களையும் வென்று ஜிதேந்திரியனாய் ஜீவன்முக்தி எய்துகிறான். இந்த முறையில் ஜீவப்ரம்ம ஐக்கிய ஞானம் உண்டா வதைப் பிரகடனம் பண்ணும் சாஸ்திரத்துக்கு ஸ்ரீ வித்யை என்று பெயர்; அதாவது ஸ்ரீ வித்யையே பிரம்ம வித்யை.

ஞானமூர்த்தியாகிய ஸ்ரீ சங்கரர், ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி அல்லது ஸ்ரீ சாரதாதேவியின் அம்சாவதாரமாகையால் இந்த இரண்டு மூர்த்தங் களுக்கும் முக்யத்துவம் அளிக்கப்படுகிறது.

சிருங்கேரி ஆஸ்தானத்தில் வழிபடப்படும் இன்னொரு திருவுருவம் ஸ்ரீ லக்ஷ்மீந்ருஸிம்ஹருடையது. பரம்பொருளை உருவமாகச் சித்தரிப் பதில் இதுவும் ஒருவிதம். சிங்கமுகமும் மனிதஉடலும் கொண்டது. சிங்கமுகம் பரமாத்மாவையும், மனித உடல் ஜீவாத்மாவையும் குறித்து இரண்டும் ஐக்கியமாவதையே இவ்வுருவம் காட்டுகின்றது.

ந்ருஸிம்ஹமூர்த்தி விராட்புருஷனின் ஸங்கர்ஷண அம்சம். ஸம்-கர்ஷணம் என்றால் யாவற்றையும் ஒருங்கே ஒடுக்கிக்கொள்ளுதல் என்று பொருள். அவர் ஜீவாத்மாவைப்பற்றியிருக்கும் மலங்களை அல்லது தோஷங்களை அழித்துத் தன்னுடன் ஒடுக்கிக்கொள்கிறார். இந்த மல தோஷங்களின் உருவகமே ஹிரண்ய கசிபு என்ற அசுரேந்திரன்.

ந்ருஸிம்ஹ மூர்த்தியின் உருவத்தில் உள்ள ஒடுக்கிக்கொள்ளும் அல்லது ஸம்ஹாரம் செய்யும் தன்மையைக் காட்டும் சைவ அம்சங்கள் குறிப்பிடத்தக்கவை. மூவரில் ருத்ரன் என்ற சிவனே ஸம்ஹார கர்த்தா வாதலால் ஸங்கர்ஷண மூர்த்தியான ந்ருஸிம்ஹர் உருவத்தில் சிவனின் சின்னங்கள் இருப்பது இயல்பே. ஸத்வகுணத்தைக்காட்டும் வெண்ணிற மும், முக்கண்களும், விருத்திகள் யாவும் ஒடுங்கிய நிலையைக்காட்டும் யோகாஸனமும், மனஸ் தத்துவத்தைக் குறிக்கும் "பினாகமும்" இருக் கின்றன. பினாகம் என்பது விராட்புருஷனின் மனஸ் தத்துவம், அது காலதத்துவத்தில் செயல்படுகின்றது. ஆயினும் அதை அதிக்கிரமிக்க விடாமல் அடக்கிவைத்திருக்கும் தன்மையை பினாகத்தைக் கையில் வைத்திருப்பது குறிக்கின்றது. அதோடு சக்ராயுதமும், அபயவரத முத்ரைகள் காட்டும் திருக்கரங்களும் உள. சக்ராயுதம் என்பது ஓர் பிரகாசமான சக்கரம் போன்றது. அது "ஸத்"தின் ஒழுங்காகவும், அதிவேகமாகவும் சுழலும் "ருதம்" என்ற பரமசக்தியைக் காட்டுகின்றது. அதுவே பிரம்மாண்டத்தின் அதிவேகமான சுழலை அடக்கி ஆளுகின்றது. அவர் பக்கத்தில் வீற்றிருக்கும் லக்ஷ்மி அவருடைய பூதி அல்லது சக்தியின் உருவகம். அவருடைய சிரஸுக்குமேல் குடைபோலத் தனது ஆயிரம் படமுடிகளை விரித்துக்கொண்டிருக்கும் "அனந்தாழ்வான்" என்ற பாம்பு பிரம்ம சைதன்யத்தின் விகாஸப்பட்டு விரியாத அவ்யக்த நிலையைக் காட்டுகின்றது. யாவும் ஒடுங்கினும் அவர் எஞ்சியிருப்பார் ஆதலின் அவருக்கு "சேஷன்" என்று பெயர். விராட்புருஷனின் சொருபத்தைக் குறிக்கும் இன்னொரு சின்னமே சாளகிராமம் என்பது. அது அருவுமல்லாமல் உருவுமல்லாமல் அருவுருவமாய் இருப்பது.

சிருங்கேரி பீடத்தில் வழிபடப்படும் மூர்த்திகள் யாவற்றிற்கும் தத்துவ விளக்கம் கூறுவதற்கு இடவசதி இல்லை. கூறியவரையில் இவற்றை ஸ்தாபித்த ஆதி சங்கரரின் குறிக்கோள் ஸகுணோபாஸனை

யிலிருந்து படிப்படியாய் சாதகன் நிர்குணோபாஸனை செய்ய ஹேது வாகும் என்பதுவேயாகும். அவருடைய பரம்பரையில் வந்த பின்வழித் தோன்றல்கள் இந்த சீரிய லக்ஷ்யத்தை மறக்காமல் உலகத்தின் க்ஷேமத்தைக் கருதி சகுண மூர்த்தங்களுக்கு பூஜா உபசாரங்கள் செய்து வருகிறார்கள். இனி சிருங்கேரி மடத்தைச்சேர்ந்த ஆலயங்களை ஆராய்வோம்.

## I. ஸ்ரீ சாரதா தேவி ஆலயம்

ஆதியில் சிருங்கேரி மடம் ஸ்தாபிக்கப்பட்ட காலத்திலிருந்தே ஸ்ரீ சாரதா தேவி அம்மடத்தின் அதிதேவதையாக இருந்து வருகின்றாள். முதன் முதலில் ஸ்ரீ சங்கரரால் ஓர் பாறையில் வரையப்பட்ட ஸ்ரீ சக்ரத்தின்மேல் சந்தன மரத்தாலாகிய ஸ்ரீ சாரதா தேவியின் திரு உருவத்தை உள்ளடக்கிய ஆலயம் மிகச் சிறிதாகவேயிருந்தது. பின்னால் மேற்குக் கடற்கரைச் சீமை, மலநாடு சீமைகளில் பரவியிருந்த சிற்ப பாணியில் ஓர் பீடம் போன்ற அடிதளத்தின் மீது மரத்தால் செய்யப் பட்டு கோபுரம் போன்ற உருவமைந்த ஓர் ஒட்டுக் கட்டடம் ஸ்ரீ பாரதீ தீர்த்த சுவாமிகளாலும், ஸ்ரீ வித்யாரண்ய சுவாமிகளாலும் ஸ்ரீ சாரதா தேவியின் ஆலயமாக அமைக்கப்பட்டது. முன்பிருந்த சந்தண மரத்தாலாகிய திருவுருவத்துக்கு பதிலாக இப்போது இருக்கும் ஸ்வர்ண விக்ரஹம் பிரதிஷ்டை செய்யப்பட்டது. ஸ்ரீ சச்சிதானந்த பாரதீ சுவாமிகள் II (1705-41) அவர்களால் சாரதா நவராத்திரி உத்ஸவம் மிக விரிவான முறையில் விமரிசையாகவும் மிகுந்த வைபவங்களுடனும் நடத்த ஆரம்பிக்கப்பட்டது. அதுவே இன்றும் ஸ்ரீ சாரதா ஆலயத்தின் பிரதான உத்ஸவமாக இருந்து வருகின்றது. 1791ல் பரசுராம பாபு என்பவன் தலைமையில் மஹாராஷ்டிரக் கொள்ளைக்காரர்கள் சிருங்கேரியைக்கொள்ளையடித்து ஸ்ரீசாரதா ஆலயத்திலும் விக்ரஹத்தைப் பெயர்த்து ஆலயத்தின் நகைகள், பாத்திரங்கள் முதலியவற்றைத் திருடிச் சென்று விட்டனர். கூடிய விரைவிலேயே திப்பு சுல்தான் அளித்த பணத்தால் ஸ்ரீ சச்சிதானந்த பாரதீ சுவாமிகள் III ஆலயத்தை ஜீர்ணோத்தாரணம் செய்து அம்பாளையும் பிரதிஷ்டை செய்தார்கள். ஸ்ரீ சச்சிதானந்த சிவ அபிநவ ந்ருஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகள் செட்டி

நாட்டிலிருந்து சில்பிகளை வரவழைத்து இப்போது இருக்கும் மெருகேற்றிய கருங்கல் கோயிலை கட்டுவிக்க ஏற்பாடு செய்தார்கள். 1916ம் ஆண்டில் ஸ்ரீ சந்திரசேகர பாரதி சுவாமிகள் இந்த ஆலயம் கட்டி முடிந்ததும் மஹா கும்பாபிஷேகம் செய்து வைத்தார்கள்.

இக்கோயில் " திராவிட " அதாவது தமிழ்நாட்டுப் பாணியில் அமைக்கப்பட்டிருக்கின்றது. நான்கு திசைகளிலும் வாயில்கள் உள்ளன. கிழக்கு வாயில் வழியாக உள்ளே பிரவேசித்தோமானால் பீடதளங்கள் மேல் எழுப்பப்பட்ட இரண்டு மண்டபங்களைக் கடந்து செல்வோம். சற்று உயர்ந்த நவரங்க மண்டபம் அல்லது மஹாமண்டபத்தில் இரண்டு வரிசையாய் நான்கு நான்கு பெரும் தூண்கள் உள்ளன. இவற்றிலுள்ள சில்பங்களில் குறிப்பிடத்தகுந்தவை நான்கு. அவை அஷ்டபுஜ துர்க்கை மஹிஷாசூர மர்த்தனியாகக் காட்சி அளிக்கின்றாள். இரண்டாவது ராஜராஜேச்வரியின் திருவுருவம். மூன்றாவது டமருகமும் மானும் ஏந்திய பின்னிருகரங்களும், அபயவரத முத்திரைகள் காட்டும் முன்னிரு கரங்களுமுடைய மஹேச்வரியின் திருவுருவம். நான்காவதாக ஜபமாலையும் பத்மமும் தாங்கிய பின்னிரு கரங்களும், அபயவரத முத்திரைகள் காட்டும் முன்னிருகரங்களுமுடைய தேவியின் திருவுருவம். சந்நிதியின் வெளியே இரண்டு துவாரபாலகிகள் நிற்கின்றனர். ஓர் குறுகிய சுகநாசி கர்ப்பகிருகத்துக்கு இட்டுச்செல்கின்றது. மிகத்தூய வாழ்க்கையும், ஆழ்ந்த பக்தி சிரத்தையும், ஒப்பற்ற மந்த்ர ஸித்தியும் உடையவர்களாய்த் திகழ்ந்த ஆசார்ய பரம்பரையினரால் வழிபடப்பட்டதன் காரணமாக கர்ப்பகிருஹத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ சாரதாதேவி அத்புத சக்தி வாய்ந்தவளாய், சேவார்த்திகளின் உள்ளத்தில் பக்தியும், அருளும், சாந்தியும் நிலவச்செய்கின்றாள். மனப்பூர்வமாய் சேவிக்கும் பக்தர்கள் அனைவரும் அவளுடைய அனுக்ரஹத்தைப் பூரணமாக அடைகின்றார்கள் என்பது பிரத்தியக்ஷம்.

மூலஸ்தானத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீ சாரதாம்பிகையும், வெளித் தூண்களில் இருக்கும் துர்க்கையும் ராஜராஜேச்வரியும் நிர்குணப் பிரம்மத்தின் மூன்று ஸகுண நிலைகளேயாகும். ஸ்ரீ சாரதாதேவி ஸர்வலோக ஜனனி நிர்குணப்பிரம்மத்தின் சமஷ்டிருபமாய் முக்குணங்களைக் கடந்த

வளாய் சச்சிதானந்தரூபிணியாய் இருக்கின்ருள். மற்றிருவரும் வியஷ்டி ரூபங்கள்.

பிராகாரத்தில் ஸ்ரீ கணேசருக்கும், ஸ்ரீ புவனேச்வரிக்கும் சந்நிதிகள் இருக்கின்றன. வெள்ளியாலும், செம்பினுலும் ஆய உத்ஸவப்படிவங்கள் பல உள. இவை உத்ஸவ காலங்களில் ஊர் சுற்றுலா வருவதற்குப் பயன்படுத்தப்படுகின்றன. தற்சமயம் 35வது பட்டமாக அருளாட்சி நடத்தும் ஜகத்குரு மஹாசந்நிதானம் அவர்கள் கோயிலின் முகப்பு வாசலில் மலநாட்டுப் பருவமழையால் பாதிக்கப்படாத முறையில் ஓர் அழகான கோபுரம் எழுப்பி 1963ல் கும்பாபிஷேகமும் நடத்தி வைத்தார்கள்.

இவ்வாலயத்தின் முன்பு 35 அடி உயரமுள்ளதாயும், உச்சியில் ஓர் மனித உருவம் கைகளைக் கட்டிக்கொண்டு நிற்பதுபோல அமைந்ததாயும் உள்ள ஓர் தீபஸ்தம்பம் உளது.

## 2. *ஸ்ரீ வித்யா சங்கரர் ஆலயம்*

கி. பி. 1338க்குச் சரியான சக வருஷம் 1260ல் பஹுதான்ய ஆண்டில் இந்த ஆலயம் நிர்மாணிக்கப்பட்டதாகச் சொல்லுவது மரபு. இது ஓர் தனிச்சிறப்பு வாய்ந்த அமைப்பு. முழுதும் கல்லால் கட்டப்பட்டு சாளுக்கிய பாணியும், திராவிடப்பாணியும் சேர்ந்ததொரு அமைப்பு. விமானத்தின் உருவமும் சுகநாசிக்கு மேல் இருக்கும் மேற்கோப்பும் சாளுக்கிய பாணியைக் காட்டுகின்றன. விமானம் தட்டுத்தட்டாக ஒன்றன்மேல் ஒன்று அமைக்கப்பட்டிருப்பதும், முன்மண்டபத்தி லிருக்கும் தூண்களின் அமைப்பும் திராவிடப்பாணியைக் காட்டுகின்றன. துங்காநதியின் ஓர் திருப்பத்தில் அடியில் மேடை போன்ற தளத்தின் மீது கட்டப்பட்ட இந்த ஆலயம், பக்கத்துக்குன்றுகளிலிருந்தும் சரிவுகளி லிருந்தும் பார்ப்பதற்கு மிகக் கவர்ச்சிகரமான காட்சியை அளிக்கின்றது. மேற்கு கிழக்கு கோடிகளில் அரைவட்டமாய் நீண்டசதுர வடிவில் இவ் வாலயம் நிர்மாணம் பண்ணப்பட்டிருக்கின்றது. கோயிலின் உள்புறம் மேற்குப் பாதியில் கிழக்குப்பார்த்து சுகநாசியோடு கர்ப்பகிருஹம் இருக் கின்றது. சுகநாசியின் இருபக்கங்களிலும் தெற்கே வித்யா கணபதி

ஸந்நிதியும், வடக்கே மஹிஷமர்த்தனி ஸந்நிதியும் இருக்கின்றன. அவை ஒவ்வொன்றுக்கும் முன்பக்கம் அர்த்தமண்டபங்களும் உள. கர்ப்பக் கிருஹத்தின் மற்ற மூன்று பக்கங்களிலும் சரஸ்வதி ஸமேத பிரம்மாவுக் கும், லக்ஷ்மீ ஸமேத விஷ்ணுவுக்கும், உமா ஸமேத மஹேச்வரருக்கும் ஸந்நிதிகள் இருக்கின்றன. ஆக இந்த ஐந்து ஸந்நிதிகளும் அம்பாளுக்கு பஞ்சாயதனமாகின்றன. கிழக்குப்பார்த்த மூன்று ஸந்நிதிகளை ஒட்டி தென் வடலோடிய பகுதியே ஏனைய இரண்டு ஸந்நிதிகளுக்கும் பிரதக்ஷிண பிராகாரமாக அமைந்துள்ளது.

ஆலயத்தின் கிழக்குப் பாதியில் ஓர் மண்டபம் அமைக்கப் பட்டிருக்கின்றது. இதில் 12 கல் தூண்கள் இருக்கின்றன. அவை ஒவ்வொன்றும் ஒரே கல்லாலாகிய பெரிய தூண்கள். ஒவ்வொன்றும் பலரக வேலைப்பாடுகள் அமைந்தவை. சதுரமான அடிபாகமும், மத்தி யில் சில்ப வேலைப்பாடுகளும் மேலே கனமான கொடுங்கைகள் கொண்டனவாக தமிழ் நாட்டுப் பாணியில் செய்யப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு தூணிலும் வரிசைக் கிரமமாக மேஷம் முதல் மீனம் முடிய ஒவ்வொரு ராசியின் உருவம் செதுக்கப்பட்டிருக்கின்றது. சூரியன் மேஷ ராசியில் இருக்கும்போது சூரிய உதய காலத்தில் சூரிய கிரணம் மேஷராசி செதுக்கப்பட்ட தூணில் படியும். இவ்வாறு ஸௌர மாதங்கள் ஒவ்வொன்றிலும், அந்தந்த ராசித் தூண்களிலேயே உதய சூரிய ரஸ்மி படிகின்றது. தரையில் ஓர் பெரிய வட்டம் செதுக்கப் பட்டிருக்கின்றது. அதன் மத்தியிலிருந்து கோடுகள் பிரிந்து சென்று நிழல் படுகின்ற திசைகளைக் காட்டுகின்றன. இந்தத் தூண்களின் முன் பக்கங்களில் பெரிய அளவில் யாளி உருவங்கள் செதுக்கப் பட்டிருக்கின்றன. அவற்றின் திறந்த வாய்களுக்குள் வெளியே எடுக்க முடியாத கல் பந்துகள் உருண்டுகொண்டிருக்கின்றன. இம் மாதிரியான சில்ப வேலைகள் தென்னிந்தியாவில் விஜய நகர நாயக்கர் காலங்களில் நிர்மாணம் பண்ணப்பட்ட பல கோயில்களில் உள.

இந்த மண்டபத்தின் மேல்தளம் மத்தியில் சற்று உயர்ந்ததாயும் பக்கங்களில் வெளிச்சம் உள்ளே புகக்கூடிய ஜன்னல்கள் உடையதாக வும் ஆலயத்தின் கர்ப்பகிருஹ சுகநாசிக்கு மேல்வரை நீண்டும் இருக் கின்றது. தூண்களுக்கும், வெளித்திருமதில்களுக்கும் இடையே இருக்

கும் இடத்தின் மேல்தளம் இரண்டு தட்டுகளாகக் கட்டப்பட்டுள்ளது. ஒரு தளம் கீழும் ஒரு தளம் சற்று உயர்ந்தும் இருக்கின்றன. சுக நாசிக்குமேல் உள்ள தளம் மூன்று தட்டுகளாக ஒன்றின்மேல் ஒன்ருக அமைந்திருக்கின்றது. அவற்றில் கீழ்தளம் கோபுரத்தின் அடிபாக எழுதகத்தைச்சுற்றி பிராகாரம் முழுவதும் மூடியிருக்கின்றது. மத்திய மேல் தளம் எட்டு சதுரடி விஸ்தாரமுள்ளதாய் மிகச் சிறந்த சில்ப வேலைகள் செய்யப்பட்டதாக இருக்கின்றது. அதன் மத்தியில் ஐந்து விரிந்த இதழ்களோடு ஓர் தாமரை மொட்டு தொங்கிக்கொண்டிருப்பது போல சித்தரிக்கப்பட்டிருக்கின்றது. அதன் நான்கு மூலைகளிலும் நான்கு கிளிகள் அதனைக் கொத்திக்கொண்டிருப்பதுபோல் அமைக்கப் பட்டிருக்கின்றது. இந்த மத்திய பிரிவில் எட்டு சதுர மாடங்கள் சுற்றியிருக்கின்றன. இவை யாவும் ஹொசளகால சிற்பப் பாணியில் அமைந்த நவரங்க மண்டபமாகும்.

இவ்வாறு மேல் தளத்தால் மூடப்பட்ட மண்டபத்துக்கு கிழக்கிலும், வடக்கிலும், தெற்கிலும் மூன்று தலைவாசல்கள் உள்ளன. அவற்றிற்கு நேராக ஆலயத்தின் உள்ளே செல்வதற்கு வடக்கு, தெற்கு, மேற்குப் பக்கங்களிலும் வாசல்கள் உள்ளன. இம்மூன்று உள் வாசல்களும் மேலே சொன்ன மஹேச்வரன், விஷ்ணு, பிரம்மா இவர்களின் சந்நிதி களைப் பார்த்து இருக்கின்றன. சுவற்றின் மற்ற பாகங்கள் தனித்தனி பகுதிகளாய், சுவற்றில் பாதி பதிக்கப்பட்ட தூண்களால் பிரிக்கப்பட்டு அப்பகுதிகளில் பல நுணுக்கமான சில்ப வேலைப்பாடுகள் செதுக்கப் பட்டிருக்கின்றன. கிழக்கு வாசல் இரண்டு அடுக்குகளாய் அமைந்த படிக்கட்டுகளை உடையதாய் இருக்கின்றது.

சுகநாசிக்குமேல், மேல்தளத்தில் சற்று உயர்ந்ததாய் ஓர் சிறு அறையும் அதன்மேல் கப்பலின் அடிபாகத்தைக் கவிழ்த்ததுபோன்ற அமைப்பும் அவ்வறையின் முன்பக்கத்து நிலையில் "*கீர்த்தி முகத் துடன் கூடியவளைவும் அமைக்கப்பட்டிருக்கின்றன. கீர்த்திமுகத்துக்குக் கீழும் சிற்றறைக்குச் செல்லும் வாசலில் ஓர் மாடம் இருக்கின்றது. இந்த

---

*கீர்த்திமுகம் என்பது ஆலயங்களில் திருவாசிக்குமேல் யாளியின் முகம்போல பெரிய கண்களும் நீண்ட பற்களும் உடைய அமைப்பு.

மாடம் சுகநாசியின் இரண்டாவது மாடியைக் குறிக்கின்றது. இந்த அறை விமானத்துக்கு அந்தராளமாக அமைந்திருக்கின்றது. இந்த அறையோடு சேர்ந்த விமானம் மாடியின்மீது உள்ள ஓர் சந்நிதிபோன்று தோற்றமளிக்கின்றது. விமானத்தின் உள்புறம் உட்குழைவுள்ள வெளியாக இருக்கின்றது. விமானத்தின் உள்கூடு குறுக்கும் நெடுக்குமாகக் கட்டப்பட்ட விட்டங்களால் தாங்கப்படுகின்றது. விமானத்தின் சிகரம்வரை இந்த உள்கூடு இருக்கின்றது. வெளியிலிருந்து பார்ப்பவர்களுக்கு இந்த விமானம் மூன்று அடுக்குகளாய், ஏறக்குறைய சதுர வடிவாய்க் காட்சி அளிக்கின்றது. ஒவ்வொரு அடுக்கிலும், தென்னாட்டு கோபுரங்களுக்கு இருப்பதுபோன்று திட்டி வாசல்கள் உள்ளன. அவை மூலம் விமானத்தின் உள்கூட்டுக்கு வெளிச்சம் வருகின்றது. மூன்றாவதான மேல்தட்டின் நான்கு மூலைகளிலும் நான்கு நந்திகள் இருக்கின்றன.

விமானத்தின் சிகரம் ஓர் கொப்பறையைக் கவிழ்த்தது போன்று அரை உருண்டையாக உள்ளது. நான்கு திசைகளிலும் கீர்த்திமுகங்கள் இருக்கின்றன. அவற்றிற்கு மேல் உலோகத்தாலாய ஸ்தூபி இருக்கின்றது. இந்த ஸ்தூபியில் வழக்கமாக வைக்கப்படும் பட்டிகையும் மஹா பத்மமும் பிரதான கலசத்தைத் தாங்கியிருக்கின்றன. விமானத்தின் மேல் பாகத்தின் வெளிப்பகுதி முழுவதும் மேலிருந்து கீழ்நோக்கிய தகட்டுக் கற்களால் வரி வரியாக அமைக்கப்பட்டிருக்கின்றது. வெளிச் சுவற்றிலுள்ள ஆறுவாசல்களிலும் இரு பக்கங்களிலும் துவாரபாலகர்கள் இருக்கின்றனர். இந்த ஆறு ஜதை துவாரபாலகர்களில் இரண்டு ஜதை சைவபரமாயும், இரண்டு ஜதை வைஷ்ணவ பரமாகவும் மற்ற இரண்டு ஜதை சாக்த பரமாகவும் அமைக்கப்பட்டிருக்கின்றன. வாசல்களின் நிலைகளில நெட்டுக்கற்களில் நதிதேவதையும், மேல் சட்டத்தில் கஜலக்ஷ்மியும் செதுக்கப்பட்டிருக்கின்றன. சுகநாசி வாசலில் அதிகார நந்தியும் பிருங்கியும் இருக்கின்றனர்.

ஆலயத்தின் அடிதளம் ஆறு கொரநாசு **(Cornice)** களுக்குள் அடங்கிய ஐந்து பட்டைகள் சில்ப வேலைப்பாடு அமைந்ததாய் இருக்கின்றது. இந்த பட்டைகளில் **(friezes)** கீழிருந்து மேல்வரிசையாக குதிரைகளும், ஒட்டகங்களும், யானைகளும் சிங்கங்களும், யாளிகளும், யக்ஷர்களும், புராண வரலாறுகள், குள்ளர்கள் (பூதகணங்கள்) என்று

ஐந்துவிதமான சில்ப நுணுக்கமமைந்த உருவங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. புராணவரலாற்று பட்டை ஒன்றில் ஸ்ரீசங்கரரும், அவருடைய நான்கு சிஷ்யர்களும் இருக்கிறார்கள். சில பட்டைகளில் கிராதார்ஜுனக் கதை வரிசையாகச் சித்தரிக்கப்பட்டிருக்கின்றது. இந்த ஐந்து பட்டைகளுக்கு மேல்புறம் தலைவாசலுக்கும் மேல் சக்கரங்கள் போன்ற அலங்கார வேலைப்பாடு செதுக்கப்பட்டிருக்கின்றது.

சுவற்றின் பெரிய மாடங்களில் தேவ உருவங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. அவைகளில் இந்திரன், நின்ற உருவத்தில் சிவபெருமான், வியாசர், பிரஜாபதிகள், ஸிம்ஹ வாஹன துர்க்கை, சிவலிங்கத்தை வழிபடும் இராமர், சனைச்சரன், மிருத்யுதேவர், சித்ரகுப்தன், யமன், லக்ஷ்மியோடு கூடிய ந்ருஸிம்ஹர், கருடன், ஹனுமான், பிரம்மாவும் வாணியும், உமாமஹேச்வரர், தக்ஷிணாமூர்த்தி, காயத்ரீ, கல்கி, புத்தர், கோபிகைகளோடு கூடிய வேணுகோபாலன், பலராமர், இராமர், லக்ஷ்மணர், சீதை, பரசுராமர், வாமனர், ஹிரண்யகசிபுவை ஸம்ஹாரம் பண்ணும் தோரணையில் உக்ர ந்ருஸிம்ஹர், தரணீவராஹர், கூர்மமூர்த்தி, மத்ஸ்யமூர்த்தி, அர்த்தநாரி, காலஸம்ஹாரமூர்த்தி, சோமாஸ்கந்தர்,, திரிபுராரி, சந்திரசேகரர், காமதஹனமூர்த்தி, நடராஜர், ஸ்ரீகண்டர் வீரபத்திரர், சந்திரன், கஜஸம்ஹாரமூர்த்தி, ஹயக்ரீவர், அன்னபூர்ணா, பார்வதீ, லக்ஷ்மீ, ஸரஸ்வதி, குபேரன், பைரவர், பிருங்கி, வியாஸரோடு சங்கரர், நிருத்த கணபதி, ஷண்முகர், முதலிய நுணுக்கவேலைபாடமைந்த உருவங்கள் பொறிக்கப்பட்டிருக்கின்றனர்.

ஈண்டு கொடுக்கப்பட்டிருக்கும் ஒவ்வொரு மூர்த்தியின் தத்துவத்தை விளக்குவதற்கு இடமில்லை. சாமானியர்களுக்கு அவை ஏதோ புராண புருஷர்களின் உருவங்கள் என்றுதான் தோன்றும், ஆனால் தத்துவ மறிந்த ஞானிகளுக்கு அவைகள் யாவும் ஆழ்ந்த கருத்துக்களின் உருவகம் என்றும், அவைகளில் எதை திரிகரண சுத்தியாய் வழிபட்டாலும் தெய்வ அருள்கிட்டும் என்பதும் புலப்படும்.

ஆலயத்துக்கு உள்ளே உலோகங்களாலாய, மிக அழகான விக்கிரகங்கள் பல உள. அவற்றுள் சில:— சிவதாண்டவ மூர்த்தி, ஸ்ரீநிவாஸன், நம்பிநாராயணன், ஹரிஹரர் முதலியன. இவை தவிர

ஏராளமான சிவலிங்கங்களும், சாளக்கிராமங்களும் இருக்கின்றன. இரும்பால் செய்யப்பட்ட சனி பகவானை எண்ணெய்ப் பாத்திரத்தில் மூழ்க வைத்து இருக்கிறார்கள். நடுக்கூடத்தின் வெளி எழுதக மூலைகளில் கல்லில் குடையப்பட்ட சங்கிலிக்கோர்வைகள் தொங்குகின்றன. இது விஜய நகர காலத்துச் சிற்பத்தைச் சேர்ந்தது.

பொதுவாக ஹிந்துக்கள் தமது ஆலயங்களை இறைவனின் பௌதிக உடலாகவே கருதுகின்றனர். சிறப்பாக இந்த வித்யா சங்கராலயம், ஸ்ரீ சக்ரமாகவும், சிவசக்திகளின் சம்மேளனமாகவும் கருதப்படுகின்றது. ஆகையால் சிவம், சக்தி முதல் பிருதிவி ஈறாகவுள்ள சகல தத்துவங்களை யும் இந்த ஆலயம் உருவகமாகக் காட்டுகின்றது. இந்தத் தத்துவங்கள் நிஷ்கள பிரம்மத்தில் ஆரோபிக்கப்படுகின்றன.

கீழ்வரிசையிலுள்ள விலங்குகள், பறவைகள், மனிதர்கள், சில்லறை தேவதைகள் யாவும் கனதத்துவங்களை சூசிப்பித்து, சுத்த பிரம்மத் திறுடைய மாயா லீலையாகின்ற பிரபஞ்சத்தின் பலதிறப்பட்ட உயிர்களை ஞாபகப்படுத்துகின்றன. இவற்றிற்குமேல் இருக்கும் தெய்வ உருவங் கள், இறைவனுடைய பல்வேறு நிலைகளை, அதாவது சிருஷ்டி கர்த்தா வாகவும், ஸ்திதி கர்த்தாவாகவும், ஸம்ஹார கர்த்தாவாகவும், அந்தர்யாமி யாகவும், ஞானத்தை நல்குபவராகவும், குருவாகவும் காட்டுவதால், சாதகனுடைய பலவகைப்பட்ட அதிகாரி பேதத்தை அநுசரித்து, வெவ்வேறு உருவங்களாக அமைக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு உருவமும் பிரம்மம் என்ற ஸங்கீதத்தின் ஒவ்வொரு ஸ்வரமாகக் கருதலாம்.

இந்த சகுண மூர்த்திகளை தரிசித்துவிட்டு சாதகன் இருதய குகை போன்ற அதிக வெளிச்சமில்லாத உட்கோயிலுக்குள் செல்கின்றான். அங்கு இருதயத்தில் நித்யவாஸம் செய்யும் பிரம்மத்தை சாக்ஷாத்கரிக் கின்றான். அது அருவுருவமான சிவலிங்கமாகக் காட்சியளிக்கின்றது. இந்தத் தத்துவ யாத்திரையில் முதலாவதாக மனஸ்ஸும் ஞானேந்திரிய பஞ்சகங்களும் சேர்ந்து ஆறு வாசல்களாக இருக்கின்றன. இவ்வாசல் களின் வழியாக உள்ளே சென்று ராசிமண்டபத்தையடைகிறான். அது காலதத்துவத்தைக்குறித்து நிற்கின்றது. காலதத்துவமாகிற ராசி மண்டபத்தையும் தாண்டினால் கர்ப்பகிருஹத்தில் அருவுருவ மூர்த்தியான

சிவலிங்கம் பரப்ரம்மத்தை உருவகமாகக் காட்டுகின்றது. வெளியி லிருக்கும் சகுணமூர்த்திகளை வழிபட்டு ஞானேந்திரியங்கள் மனஸ் என்று சொல்லும்படியான ஆறு வாசல்களையும் கடந்து ராசிமண்டபமான காலத்தையும் கடந்து நிற்குண பிரம்மத்தை அடைகிறான். அதாவது சகுணோபாஸனையிலிருந்தே நிற்குணோபாஸனைக்குச் செல்லவேண்டும் என்ற நியதி தெரிகின்றது.

மேலும் இவ்வாலயம் சைவம், சாக்தம், வைஷ்ணவம், ஸௌரம், காணபத்யம், கௌமாரம் என்ற ஷண்மதங்களின் ஒருமைப்பாட்டையும், இறைவனுடைய சகுண நிற்குண சமன்வயத்தையும், கர்மமார்க்கம், பக்திமார்க்கம், யோகமார்க்கம், ஞானமார்க்கம் என்ற சதுர்வித சாதனை களின் சமஷ்டியையும் ஸ்தூலமாக நின்று அறிவுறுத்துவதால் ஸ்ரீ சங்கரரின் சீரிய கொள்கைகளுக்கு ஓர் சான்றாய் இருக்கின்றது. விக்கிரக சில்ப ஆராய்ச்சியாளருக்கு இந்த ஆலயம் ஓர் கண்காட்சி சாலை யாகவும், சில்பங்களின் கருவூலமாகவும் திகழ்கின்றது.

## 3. ஸ்ரீ சங்கராலயம்

ஸ்ரீ சங்கரரின் திருவுருவங்கள் சிருங்கேரியிலும் வேறு இடங்களிலும் பல ஆலயங்களில் இருந்தாலும் அவையனைத்துக்கும் கேந்திரமாக விருப்பது சிருங்கேரி பழய மட சுற்றுலைக்குள், ஸ்ரீ சாரதாம்பாள் ஆலயத்துக்கு வடக்கேயிருக்கும் சங்கராலயத்தில் வீற்றிருக்கும் உலோகத்தாலாய ஸ்ரீ சங்கரத்திருவுருவமேயாகும். இங்கு ஸ்ரீ சங்கர பகவத்பாதாளுடைய விக்கிரகம் யோகாசனத்தில் அமர்ந்து வலதுகையால் சின்முத்திரை காட்டியும் இடது கையால் வரதமுத்திரை காட்டியும் அமைக்கப்பட்டிருக்கிறது

## 4. ஸ்ரீ மலஹாநிகரேச்வராலயம்.

சிருங்கேரி நகரத்தின் நடுமய்யத்தில், நூறு படிகள் ஏறி அடையக் கூடியதாய், ஓர் சிறு குன்றின்மேல் அமைந்திருக்கிறது இவ்வாலயம். நவரங்க மண்டபத்தின் நான்கு தூண்கள் நான்கு பக்கங்களிலும் மிக நேர்த்தியான சில்ப வேலைப்பாடமைந்தவை. அவற்றில் பத்து கரங் களோடு காட்சியளிக்கும் சந்திரனின் உருவம் பார்க்கத்தகுந்தது. ஏனைய

சில்ப உருவங்கள் ந்ருஸிம்ஹர், வீரபத்திரர், ஹநுமான், காளிய நர்த்தனர், துர்க்கை, இராமர், ஷண்முகர், வேணுகோபாலர் மற்றும் நிருத்த உருவங்கள். கூரையின் உட்புரத்தில் (லாகடத்தில்) ஓர் தாமரை மொட்டு சித்தரிக்கப்பட்டிருக்கிறது. விபாண்டக மஹரிஷி மறைந்த இடம் தான் மூலஸ்தானம், அதில் மலஹாநிகரேச்வரர் என்ற திருநாமமுடைய சிவலிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. ஜீவான்மாவின் மலங்கள் அல்லது அழுக்குகளை நாசம் செய்பவராதலால் அவருக்கு மலஹாநிகரேச்வரர் என்று திருநாமம். ஸ்ரீ சச்சிதானந்த பாரதீ சுவாமிகள் (1622-1663) ஸ்ரீ பவாநியை பிரதிஷ்டை செய்து, ஆலயத்திற்கு ரதோத்ஸவமும், தீபோத்ஸவமும் ஏற்பாடு செய்தார்கள். ஸ்ரீ சச்சிதானந்தபாரதீ ஸ்வாமிகள் II (1705-1741) மாக (மாசி மகம்) உத்ஸவத்தையும், கிருத்திகை உத்ஸவத்தையும் ஆரம்பித்து வைத்தார்கள். பத்னிகள் சகிதம் இருக்கும் பிந்து மாதவர் சந்நிதி பிராகாரத்தில் இருக்கிறது. ஸ்ரீ அபிநவ ந்ருஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகள் (1599-1622) ஓர் கல் தூணில் மஞ்சளால் ஓர் விநாயக உருவம் வரைந்து வழிபட்டார்கள். அந்த உருவம் காலக்கிரமத்தில் பருத்து கல்லிலேயே செதுக்கப்பட்டதுபோல் வெளியில் துருத்திக்கொண்டு வந்திருக்கிறது. அந்த இடத்தில் தூணைத் தட்டிப்பார்த்தால் உள்வெளி இருப்பதுபோல் சத்தம் கேட்கின்றது. தூணின் மற்ற பாகங்கள் முன்போன்றே கெட்டியாகவே உள்ளன. இது ஓர் அற்புதம் என்றுதான் சொல்லவேண்டும்.

இப்பொழுது இருக்கும் ஆலயம் விஜயநகர சாம்ராஜ்ய காலத்தின் முற்பகுதியில் முன்பிருந்த மரத்தாலய ஆலயத்தை அப்புறப்படுத்திவிட்டு நிர்மாணிக்கப்பட்டதாகக் கருதலாம். 1621ல் மடத்தின் சிஷ்யர்களின் ஒருவரான புட்டப்பய்யா என்பவரால் ஆலயத்தின் ஓர் பகுதி ஜீரணோத்தாரணம் செய்யப்பட்டதாகத் தெரிகின்றது. 1760ல் ஸ்ரீ சுப்ரமண்யேச்வரர் சந்நிதி கட்டப்பட்டது. இந்த ஆலயத்திலும் ஸ்ரீ சங்கராலயத்திலும் இப்போதைய மஹாஸந்நிதானமவர்களால் 1963ல் கும்பாபிஷேகம் நடத்திவைக்கப்பட்டது.

## 5. ஸ்ரீ ஜநார்தனராலயம்

ஸ்ரீ ஞானகன ஆசார்யாள் காலந்தில் இந்த ஆலயம் நிர்மாணிக்கப் பட்டிருக்கலாம். அவர்கள் 9, 10ம் நூற்றுண்டில் இருந்தவர்கள். இரண்டாவது ஹரிஹரர் காலத்து 1386ம் ஆண்டு சாஸனம் ஒன்று இந்த ஆலயத்துக்கு அளிக்கப்பட்ட தானங்களைக் குறிப்பிடுகின்றது. மஹா விஷ்ணுவின் ஜனர்த்தன அம்சம் ஓர் அரிய தத்துவத்தை உருவகப் படுத்துகின்றது. ஜனர்த்தனர் என்ற பதத்துக்கு சேவார்த்திகளின் அஞ்ஞான இருளைப்போக்கி அவர்களை இறைவனேடு ஐக்கியப்படுத்துவது என்று பொருள்.

இந்த ஆலயத்தின் பரிவார தேவதைகளான ஹநுமான், கருடன், ஸ்ரீ சங்கரர் இவர்களுக்கு சந்நிதிகள் உள்ளன. சங்கரருடைய திருவுருவம் அபயவரத முத்திரைகள் காட்டும் கரங்களுடையதாக அமைக்கப்பட்டிருக் கின்றது.

## 6. பூர்வாசார்யர்களின் அதிஷ்டானங்கள்.

அதிஷ்டானம் என்பதற்கு வாசஸ்தலம், இருக்கை என்பது வாச்சியார்த்தம். ஈண்டு ஆசார்யர்களின் சமாதிகளைக் குறித்து பிரயோகப் படுத்தப்படுகிறது. ஸ்ரீ சுரேச்வராசாரிய சுவாமிகளின் சமாதிக் கோயில் ஸ்ரீ சாரதாதேவி ஆலயத்தின் தெற்கு வாசலுக்கு அருகிலுள்ளது. ஸ்ரீ வித்யா சங்கராலயத்துக்கு மேற்கே சில அதிஷ்டானங்கள் உள. அவற்றில் மூன்று 1. ஸ்ரீ ஏழாம் ந்ருஸிம்ஹபாரதீ 2. அவருடைய குரு ஸ்ரீ அபிநவ சச்சிதானந்த பாரதீ 3. அவருடைய பரமகுரு ஸ்ரீ மூன்ரும் சச்சிதானந்த பாரதீ. இவர்களுடையது. ஏனையவை அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. (ஸ்ரீ முதலாம் அபிநவ சச்சிதானந்த பாரதியின் (1741-67) அதிஷ்டானமும், ஸ்ரீ ஆரும் ந்ருஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகளின் (1767-70) அதிஷ்டானமும் நாஸிக் க்ஷேத்ரத்தில் இருக் கின்றன). வேறு பல அதிஷ்டானங்கள் குடியிருப்பு வீடுகளின் முத்தங் களிலுள்ளன. இந்த வீட்டடி மனைகள் ஆதியில் அந்தந்த அதிஷ்டானத்து ஆராதனை நடத்திவர பிராம்மணர்களுக்கு தானம் வழங்கப்பட்டனவாக இருக்கலாம்.

துங்காநதியின் தெற்குக் கரையிலிருக்கும் ந்ருஸிம்ஹவனத்தில் ஸ்ரீ சச்சிதானந்த சிவ அபிநவ ந்ருஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகளின் சமாதிக் கோயில் இருக்கின்றது. இது மெருகேற்றப்பட்ட கருங்கல்லால் ஆயது. அதில் ஓர் சிவலிங்கத்தின் பின்புறம் ஸ்வாமிகளின் திருவுருவம், பளபள வென்று ஜொலிக்கும் பளிங்குக் கல்லில் உருவாக்கப்பட்டிருக்கிறது. இது 1916ல் ஸ்ரீ சந்த்ரசேகரபாரதீ ஸ்வாமிகளால் பிரதிஷ்டை செய்யப் பட்டது. இதற்கு அடுத்து ஸ்ரீ சந்த்ரசேகரபாரதீ ஸ்வாமிகளின் அதிஷ்டானமும் இருக்கின்றது. தற்காலம் அருளாட்சி நடத்தும் ஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த மகா சுவாமிகளால் கட்டப்பட்டு 1963ல் நடந்த கும்பாபிஷேகத்தில் பிரதிஷ்டையும் செய்யப்பட்டது. இங்கும் சிவலிங்க மும் ஸ்வாமிகளின் திருவுருவமும் இருக்கின்றன.

## 7. *சிருங்கேரியின் உள்ளும் புறம்புமுள்ள ஏனைய ஆலயங்கள்*

ஜனார்த்தனர் ஆலயத்துக்குப் பக்கத்தில் ஓர் சிறு ஆலயத்தில் சக்தி கணபதியும், வாகீச்வரியும் வெவ்வேறு சந்நிதிகளில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறார்கள். அதன் பக்கத்திலிருக்கும் மற்றொரு ஆலயம் சீதா, லக்ஷ்மண, ஹநுமத் சமேத ராமருடையது. ஸ்ரீ சங்கர பகவத் பாதாளின் சிறிய கொள்கைகளில் ஹரியும் சிவனும் ஒன்றே என்பது ஒன்று. அதனை வலியுறுத்தும் சங்கர நாராயணர் அல்லது ஹரிஹரர் ஆலயம் ஒன்றும் இருக்கின்றது. ஒரே சிலையில் இரண்டு உருவங்களும் அமைக்கப்பட்ட இந்தப் படிவத்தில் சிவபாகத்தில் திரிசூலப்படையும் அக்ஷமாலையும், விஷ்ணுபாகத்தில் சங்கு சக்ரமும் இருக்கின்றன. சிவ சின்னங்களாகிய பரசும் டமருகமும் விஷ்ணு சின்னங்களான அபயமும் சக்கரமும் இருக்கின்றன. சிவபாகத்தின் பக்கலில் பார்வதியும், விஷ்ணு பாகத்தின் பக்கலில் லக்ஷ்மியும் இருக்கின்றார்கள். பீடத்தில் நந்தியும் கருடனும் முறையே சித்தரிக்கப்பட்டிருக்கின்றனர். மைலாரருக்கு ஓர் சிறு சந்நிதியிருக்கிறது. அவர் டமருகம், சூலம், கட்கம், ஸ்தாலியோடு தனது பத்னி சகிதம் இருக்கின்றார். அவருக்குப் பக்கத்தில் துர்க்கை யிருக்கின்றாள்.

மல்லிகார்ஜுன ஆலயத்துக்குக் கிழக்கே ஓர் ஆலயம் உளது. அது 1962ல் ஹொன்னுன செட்டி என்பவரால் நிர்மாணம் பண்ணப்

பட்டது அதில் பிரதான மூர்த்தி விச்வேச்வரர். அதில் பைரவருக்கும் வீரபத்திரருக்கும் தனித்தனி சந்நிதிகள் உள. இந்த ஆலயத்தை ஹொன்னே ஆலயம் என்று கூறுகிறார்கள். இன்னொன்று நீலகண்டர் ஆலயம். இது அவதான ராஜகோபால பட்டர் என்பவரால் 1695ல் கட்டப்பட்டது. இதில் பார்வதீ தேவிக்குத் தனி சந்நிதி யுளது. ஸ்ரீ வித்யாரண்யரோடு கூடவே வந்ததாகக் கருதப்படுகின்ற ஓர் பிரம்ம ரக்ஷஸ்ஸுக்கு சந்நிதி ஒன்று இருக்கின்றது. அதற்கு மலையாள பிரம்மா என்ற பெயரிட்டு அழைக்கிறார்கள். அவர் கையில் கதாயுதம் இருக்கின்றது. சிருங்கேரியில் நடக்கும் ஒவ்வொரு விழாவுக்கும் முதலில் இந்த மலையாள பிரம்மாவுக்கு பூஜைபோடுவது வழக்கத்தில் இருந்து வருகின்றது. வித்யாரண்ய புரத்தில் லக்ஷ்மீநாராயண ஆலயமும், பஸ்சிமவாஹினியில் கோபிநாதர் ஆலயமும் உள.

## 8. *சிருங்கேரியின் ரக்ஷக தேவதைகள்*

ஆதி சங்கரர் சிருங்கேரி மடத்தை ஸ்தாபித்த காலத்தில், கால பைரவரைக் கிழக்கிலும், துர்க்கையைத் தெற்கிலும், ஹநுமானை மேற்கிலும், காளியை வடக்கிலும் காவல் தெய்வங்களாகப் பிரதிஷ்டை செய்தார். ஸ்ரீ சிருங்கேரியில் "ப்ளேக்" என்ற தொத்துநோய் பரவ இருந்தபோது ஸ்ரீ சச்சிதானந்த சிவ அபிநவ ந்ருஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகள் துர்க்கையைப் பிரார்த்தனை செய்தார். அதன்பின் அந்த தொத்துநோய் தலை காட்டியதே கிடையாது.

ஸ்ரீ சிருங்கேரியிலிருந்து ஒருமைல் தூரத்தில் துங்காநதி மேற்கு நோக்கித் திரும்பும் "பஸ்சிம வாஹினி" என்றழைக்கப்படும் திருப்பத்தில் இரண்டாவது ஹரிஹரரால் உருவாக்கப்பட்ட வித்யாரண்யபுரம் என்ற அக்கிரகாரம் இருக்கின்றது. அதன் ஒரு பகுதிக்கு வசிஷ்டாச்ரமம் என்று பெயர். அந்த இடத்தில் ஸ்ரீவித்யாதீர்த்தர் யோகத்தில் அமருவது வழக்கமாதலால் அது ஓர் புனித ஸ்தலமாகக் கருதப்படுகின்றது. அங்கு அவருக்கு ஓர் ஆலயமும் இருக்கின்றது. இதற்குப் பக்கத்தில் 1547ல் நரசிம்மபட்டர் என்பவரால் கட்டப்பட்ட கணபதி ஆலயமும், சிவப்ப நாயக்கரால் கட்டப்பட்ட சதாசிவர் ஆலயமும் இருக்கின்றன. தனிக்கோடு என்ற இடத்தில் சங்கரநாராயண மூர்த்தி வழிபடப் படுகிறார்.

ஸ்ரீ ஐந்தாவது ந்ருஸிம்ஹ பாரதீ சுவாமிகள் உருவாக்கிய சச்சிதானந்த புரம் என்ற கிராமத்தில் ஸ்ரீ அபிநவ ந்ருஸிம்ஹ பாரதீ சுவாமிகள் I. 1602ல் துங்கா நதிக்கரையிலிருந்த ஓர் பாறையின் மீது ஓர் சிவலிங்கம் பிரதிஷ்டை செய்தார்.

ஹலே சிருங்கேரி என்று சாதாரணமாய் அழைக்கப்பட்ட ஸிம்ஹ கிரியில் ஸ்ரீ வித்யாசங்கர தீர்த்தர் ஆக்ஞையின்பேரில் செதுக்கப்பட்ட சதுர்மூர்த்தி வித்யேச்வரர் என்ற உருவம் இன்றும் இருக்கின்றது. அது நான்கு பக்கங்களிலும் மாடங்கள் உள்ளது. கிழக்கு முகப்பிலிருக்கும் மாடத்தில் ஸ்ரீ வித்யா சங்கரதீர்த்த ஸ்வாமிகளும், அவருடைய இரு பக்கங்களில் அவருடைய சிஷ்யர்களான ஸ்ரீ பாரதீ கிருஷ்ணதீர்த்தரும், ஸ்ரீவித்யாரண்யரும் இருக்கின்றனர். இந்த மாடத்தின் மேல் பாகத்தில் லக்ஷ்மீ நரஸிம்ஹர் உருவம் இருக்கின்றது. அந்த உருவத்தின் இரு பக்கங்களிலும் ஸ்ரீதேவி, பூதேவி என்ற உபய நாச்சியார்களும் உருவாக்கப்பட்டிருக்கின்றனர் அவர்களோடு இரு பக்கங்களிலும சந்திர சூரியர்களும் கூட இருக்கின்றார்கள். தெற்கு மாடத்தில் பிரமாவும், அதனமேல பிரபாவளியில (மேல முகப்பு) தசாவதாரமூர்த்தி களும் உள்ளனர். மேற்கு மாடத்தில் பரவாசுதேவ நிலையில் மஹா விஷ்ணுவும், அம்மாடத்தின் பிரபாவளியில் திரும்பவும் தசாவதார மூர்த்தி களும் உள. மேற்கு மாடத்தில் பஞ்சமுகத்தோடுகூடிய சதாசிவ மூர்த்தியும், அம்மாடத்தின் பிரபாவளியில் அஷ்ட திக்பாலர்களும் இருக் கின்றனர். இவை யாவற்றிற்கும் மேலே ஓர் சிவலிங்கம் உருவாக்கப் பட்டிருக்கின்றது. இவை யாவும் ஓரே கல்லில் ஆனவை. பன்னிரண்டு ஆண்டுகள் நிலவறையில் யோகம் செய்து இந்த உருவமாக மாறுவதாகச் சொல்லியிருந்தார். இந்த வரலாறு முன்பே பிரஸ்தாபிக்கப்பட்டது. இந்த உருவம் சதுர்மூர்த்தி வித்யேச்வரர் என்ற பெயரால் மிக மகிமை உடைய தாகக் கருதப்படுகின்றது.

## 9. க்ஷமணக்கோட்டம்

இந்தக்கோட்டத்தில் ஸ்ரீ பார்சுவநாதர், ஸ்ரீ அனந்தநாதர், ஸ்ரீ சந்திர நாதர் என்பவர்களின் சிலா உருவங்கள் இருக்கின்றன. ஸ்ரீ பார்சுவ நாதர் உருவம் மிகப்பழையது. மற்ற இரண்டும் அதற்குப் பிற்

காலத்தவை. இரண்டாவது உருவம் 1583ல் தேவி செட்டி என்பவரின் குமாரர் தேவண்ண செட்டி என்பவராலும் மூன்ருவது உருவம் ஆதி செட்டி என்பவரின் புதல்வர் பொம்மார செட்டி என்பவராலும் ஸ்தாபிக்கப்பட்டவை. இந்த ஆலயத்தில் 1161ம் வருஷத்திய சிலா சாஸனம் ஒன்றுளது. இதுவே சிருங்கேரியின் எல்லேக்குள் முதலாவது பழைய சாஸனம். இந்த ஆலயத்துக்கு சுகநாசி, மூலஸ்தானம், நவரங்கமண்டபம் போன்ற பகுதிகளும் உள.

## 10. கிக்கா (Kigga)

கிக்கா என்பது கில்கா என்பதின் திரிபு. இதை மருகலு என்றும் கூறுவார்கள். இது துங்கா நதியின் உபநதியான நந்தினீ ஆற்றின் கரையிலுள்ளது. ரிஷ்ய சிருங்கர் திவ்ய தேஜஸ்ஸில் கலந்த இடத்தில் ஸ்ரீ சிருங்கேச்வராலயம் உள்ளது. இதனுடைய பழமை 7ம் நூற்ருண்டில் தோன்றிய ஓர் கல்வெட்டால் அறியக்கிடக்கின்றது இந்த ஆலயத்தில் எழுந்தருளியிருக்கும் மூர்த்திக்கு கில்காவின் பிரதான தெய்வம் என்ற பொருள்படும் " கில்கனேச்வரர் " என்றும் " கில்கனதேவர் " என்றும் பெயர்கள் உண்டு. மூலஸ்தானத்தில் இருக்கும் சிவலிங்க மூர்த்தி ஓர் ருத்ராக்ஷமணி போன்று அமைந்து அதன் உச்சியில் ஓர் கொம்பு இருப்பதுபோல காக்ஷியளிக்கின்றது. அவருடைய இடது பக்கத்தில் அவருடைய பத்னி சாந்தா தேவியின் உருவம் போன்ற தோற்றம் இருக்கிறது. பழைய சுலோகம் ஒன்றில்

நம: ஶாந்தா ஸமேதாய நந்தினீதீரவாஸிநே ।
ருத்ராக்ஷபூஷிதாங்காய ருஷ்யஶ்ருங்காய மங்களம் ॥

என்று கூறப்பட்டிருக்கின்றது. இந்த ஆலயத்தில் எழுந்தருளியிருக்கும் சிவலிங்க மூர்த்தியை யதோக்தமாய் வழிபட்டால் பன்னிரண்டு யோஜனை சுற்றளவுக்கு நல்ல மழை பொழிந்து பஞ்சமே தலைகாட்டாது என்ற ஒரு ஐதிஹ்யம் நிலவி வருகின்றது. இது ரோமபாதருடைய ராஜ்யத்தில் ரிஷ்ய சிருங்கருடைய பாதம் பட்ட மாத்திரத்தில் மழை பெய்து பஞ்சம் நிவர்த்திக்கப்பட்டது என்ற ராமாயண விருத்தாந்தத்தை நினைவூட்டுகின்றது.



நவரங்க மண்டபத்துக்கு மூன்று வாசல்கள் இருக்கின்றன. இம் மண்டபம் நான்கு தூண்கள் மீது கட்டப்பட்டது. ஒரு தூணில் மிக அழகு வாய்ந்த நாட்டியப் பெண்களின் உருவங்கள் ஒன்றோடொன்று பின்னி ஓர் பல்லக்குப்போல் அமைக்கப்பட்டு அதை மான்கள் சுமந்து வருவதுபோல் சித்தரிக்கப்பட்டிருக்கின்றது. இம்மாதிரியான வாகனத்தில் தான் ரிஷ்ய சிருங்கர் ரோம பாதருடைய ராஜ்யத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டார் என்றும் கருதப்படுகின்றது. சுக நாசியில் *வலம்புரி விநாயகரும் மஹிஷமர்த்தனியும் இருக்கிறார்கள்.

1678ல் பிரதிஷ்டை செய்யப்பட்ட உத்ஸவ மூர்த்தி ராணி சன்ன மாஜியின் உத்தியோகஸ்தர்களில் ஒருவரான குரு பஸவப்பா என்பவரால் செய்து அளிக்கப்பட்டது. கோயிலின் உள்புரம் சந்தார அரசர்களின் கல்வெட்டுகள் உள. 7-வது நூற்றாண்டில் ஹும்ச்சாவில் அரசாண்ட அலூரபனின் குமாரன் குணசாகரனுடைய கல்வெட்டு ஒன்றும், அதே வம்சத்தைச் சேர்ந்த பிருத்வி வல்லபன் என்பானுடைய 1090ம் வருஷத்திய கல்வெட்டு ஒன்றும் இருக்கின்றன.

## 11. பெங்களூர்-சங்கரமடாலயங்கள்

1907ம் ஆண்டில் ஸ்ரீ சச்சிதானந்த சிவ அபிநவ ந்ருஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகள் பங்களூரில் சங்கரமடத்துக்கு அஸ்திவாரக் கல் ஊன்றினார்கள் பின்னால் ஸம்ஸ்க்ருத மேல் படிப்புக்காக ஓர் ஸ்தாபனம் நிறுவி அதற்கு "பாரதீய கீர்வாண ப்ரௌட வித்யாபி வர்த்தனி" என்ற பெயர் சூட்டினார்கள். ஏழு வீடுகள் கொண்ட ஓர் அக்கிரகாரத்தை திவான் V. P. மாதவ ராவ் அதற்கு தானம் செய்தார். மடத்தைச் சுற்றியிருந்த காலி மனைகளில் இப்பொழுது குடியிருப்பு வீடுகள் கட்டப்பட்டிருக்கின்றன. பிரதான மடாலயம் மிக காம்பீர்யம் படைத்ததும், மிகக் கவர்ச்சிகரமானதுமாக அமைந்திருக்கின்றது. அதன்

---

*வலம்புரி விநாயகர் என்பது விநாயகரின் துதிக்கையின் நுனி வலது பக்கமாக வளைந்து இருக்கும் படிவம். இது முதலில் சாளுக்ய நாட்டில் தான் பிரபலமாக இருந்தது. 7-வது நூற்றாண்டுக்குப் பின்புதான் சோழ பாண்டிய நாடுகளுக்குக் கொண்டுவரப்பட்டது.

மத்தியில் இருக்கும் பிரசங்கக் கூடத்தில் ஓர் பெரிய சரஸ்வதிபடம் இருக்கின்றது. மடத்துக்கு முன்புறம் இரண்டு ஆலயங்கள் ஒன்றை ஒன்று பார்த்து இருக்கின்றன. அவைகள் ஸ்ரீ சாரதாலயமும், ஸ்ரீ சங்கராலயமுமாகும். இவற்றின் அமைப்பும், அமைதியும், கட்டடங் களின் புனிதத் தன்மையும் குறிப்பிடத் தகுந்தவை. இரண்டும் ஒரே மாதிரியாக எட்டு மூலைச் சதுரமாக இருக்கின்றன. இவற்றில் சங்கர ஆலயத்தின் உள் சுவர்களின் ஓர் பகுதி சித்திர வேலைப்பாடமைந்த ஜன்னல்கள் உள்ளதாக இருக்கின்றது. ஸ்ரீ சாரதாலயத்தின் சுவர்களில் மாத்ருகா தேவதைகளின் உருவங்கள் உள்ளன. ஸ்ரீ சங்கரருடைய திருவுருவம் பளிங்குக் கல்லாலும், ஸ்ரீ சாரதாதேவியின் திருவுருவம் உலோகத்தாலும் ஆனவை சங்கராலயம் 1907ல் ஸ்ரீ சச்சிதானந்த சிவ அபிநவ ந்ருஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகளாலும் ஸ்ரீ சாரதாலயம் 1939ல் ஸ்ரீ சந்த்ரசேகரபாரதீ சுவாமிகளாலும் பிரதிஷ்டை செய்யப்பட்டன. பழைய சங்கரமடம் சுல்டான் பேட்டை என்ற பகுதியில் இருக்கிறது.

## 12. மைசூர் அபிநவ சங்கராலயம்

மைசூரில் ஸ்ரீ சச்சிதானந்த சிவ அபிநவந்ருஸிம்ஹபாரதீ ஸ்வாமிகள் ஜனனமான இல்லத்தை மைசூர் சர்க்கார் ஆர்ஜித்து சிருங்கேரி சமஸ்தானத்துக்கு வழங்கியது. அதில் பிரசித்திபெற்ற ஆசார்யாளின் திருவுருவம் பளிங்குக்கல்லால் செய்யப்பட்டு 1924ல் ஸ்ரீசந்திரசேகரபாரதீ ஸ்வாமிகளால் பிரதிஷ்டை செய்யப்பட்டது. ஆசார்யாள் அதோடு ஓர் பாடசாலையையும் இணைத்தார்கள்.

## 13. காலடி

ஸ்ரீ சங்கர பகவத்பாதாளின் அவதாரஸ்தலமாக பல நூற்றுண்டு களாய் கௌரவிக்கப்பட்டு வந்த காலடி க்ஷேத்ரம் இயற்கைவளமும் வனப்பும் மிகுந்த ஓர் அழகிய இடத்தில் அமைந்திருக்கின்றது. தமிழ் மக்களால் பெரியாறு என்று அழைக்கப்பட்டதும், ஸ்தலவாசிகளால் சூர்ணு நதி என்றழைக்கப்பட்டதுயான பூர்ணு நதி வேனில் காலங்களில் நீர் சுருங்கி பரவலாக வளைந்தோடும் ஆருக இருப்பது மழைகாலங்களில் இரண்டு கரைகளிலும் பச்சை பசேல் என்று காட்சியளிக்கும் நிலங்களை

யும் குன்றுகளையும் மோதியடித்துக்கொண்டு பிரவஹிப்பது கண்கொளாக் காட்சியாகும்.

அதன் பிரதான ஸ்நானகட்டம் காலடியில் சங்கரர் தமது பூர்வாச்ரமத்தில் அவர் தாயாரோடு நீராடி ஜபதபங்கள் செய்த காரணத்தாலும், ஆங்கே ஓர் முதலை ஸ்ரீ சங்கரரின் காலைக் கவ்விக்கொள்ள அதே வியாஜமாய் அவர் சந்நியாஸம் பெற்ற இடமாதலாலும் அது ஓர் புனித தீர்த்தமாகவே இன்றும் கருதப்படுகின்றது. ஸ்நான கட்டத்தில் படிக்கட்டுகள் இருக்கின்றன. கரையில் ஓர் அசோகவிருக்ஷத்தினடியில் தான் ஸ்ரீ சங்கரரின் தாயாராய் இருக்கும் பாக்கியம் பெற்ற புனிதவதி யான ஆர்யாம்பாளின் சடலம் தகனம் செய்யப்பட்டது. காலடிக்குப் புத்துயிர் அளித்த ஸ்ரீ சச்சிதானந்த சிவ அபிநவ ந்ருஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகள் அம்மரத்தடியில் "பிருந்தாவனம்" என்று இப்பொழுது அழைக்கப்படுகின்ற துளசி மாடத்தை ஸ்தாபித்தார்கள். அதுவே அந்த இடத்தில் ஆர்யாம்பாளின் சடலம் தகனம் செய்யப்பட்டதின் அடையாள மாகவும் ஞாபகச்சின்னமாகவும் விளங்குகின்றது.

அதற்குப்பக்கத்தில் சக்தி கணபதி ஆலயம் ஸ்ரீசாரதா ஆலயத்தை பார்த்து அமைக்கப்பட்டிருக்கின்றது. ஸ்ரீ சாரதாலயம் மிக்க அழகு வாய்ந்தது. அதுபோலவே ஸ்ரீ சங்கராலயமும் அதற்கு மேற்கே மிக அழகாக அமைந்துள்ளது. இரண்டு ஆலயங்களும் நக்ஷத்திர வடிவில் அமைந்திருக்கின்றது. அதன் மேல் கோபுரம் அடிபெருத்து நுனி சிறுத்து கூர்ச்சாக இருக்கின்றது. ஸ்ரீ சாரதா தேவியின் ஆலயகோபுரம் அஷ்டபத்மமாகவும் ஸ்ரீ சங்கராலயம் ஷோடசதள பத்மமாகவும் அமைக்கப்பட்டிருக்கின்றது. ஸ்ரீ சாரதாலய விமானத்தின் அடிபாகத்தி லுள்ள மாடங்களில் மாஹேச்வரி, கௌமாரி, வைஷ்ணவீ, வாராஹி, மாஹேந்த்ரி, சாமுண்டா என்ற மாத்ருகா தேவதைகளின் படிவங்கள் இருக்கின்றன. பிரதான சந்நிதியில் இருக்கும் படிவம் ப்ராம்ஹியைக் குறிக்கும். இரண்டு மூல ஸ்தானங்களும் சற்று உயர்ந்ததான பீட தளத்தின் மீது கட்டப்பட்டுள்ளன. முன்புறம் இரண்டு பக்கங்களிலும் சரிவான கூறைகளுள்ள கூடங்கள் இருக்கின்றன.

ஸ்ரீ சாரதா தேவியின் திருவுருவமும், ஸ்ரீ சங்கரரின் திருவுருவமும் சிருங்கேரியிலிருக்கும் படிவங்களின் மாதிரியே அமைக்கப்பட்டுள்ளன.

அங்கு போலவே தரிசனத்துக்கு வரும் சேவார்த்திகளுக்கு அனுக்கிரகமும், மனசாந்தியும் அளித்து வருகிறார்கள். ஸ்ரீ சங்கரரின் விக்கிரகம் தெற்கு நோக்கி தக்ஷிணாமூர்த்தி சொரூபமாயும், ஸ்ரீ சாரதாம்பாளின் விக்கிரகம் தெற்கு நோக்கி தக்ஷிணாமூர்த்தி ஸ்வரூபிணியாகவும் திகழ்கின்றன. 1910ம் ஆண்டு பிப்ரவரி மாதம் ஸ்ரீ சச்சிதானந்த சிவ அபிநவ ந்ருஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகளால் இவ்விரண்டு ஆலயங்களுக்கும் பிரதிஷ்டா கும்பாபிஷேக வைபவங்கள் நடத்தப்பட்டன.

ஸ்ரீ சங்கராலயத்துக்கு வடமேற்குத் திசையில் முழுதும் மலையாளப் பாணியிலமைந்த கிருஷ்ணன் கோயில் உள்ளது. இதில் தான் ஆர்யாம்பாள் தனது நித்தியப்படி பூஜையைச் செய்வது வழக்கம். ஸ்ரீ சாரதாலயத்துக்கு வடகிழக்குத் திசையில் பிரதான மடம் ஆசார்யாள் அங்கு வரும்போது தங்குவதற்கு வசதியாய் அமைக்கப்பட்டிருக்கின்றது. அதில் ஓர் நூல் நிலையமும் உள்ளது. இந்த பிராசீன ஞாபகச் சின்னங்களுக்குப் பின் புறம் வேத வேதாந்த பாடசாலைகளின் அத்யக்ஷர்களும், வித்யார்த்திகளும், ஆலயத்தில் பூஜை நடத்துபவர்களும் நிர்வாகிகளும், தங்கும் அக்கிரகாரம் ஒன்று இருக்கின்றது. யாத்ரிகர்கள் தங்கும் விடுதி ஒன்றும் உளது. 1927ம் ஆண்டில் ஸ்ரீ சந்த்ரசேகர பாரதீசுவாமிகள் வேத வேதாந்த பாடசாலைகளை நிறுவினார்கள். தற்காலம் அருளாட்சி நடாத்தும் ஜகத்குரு ஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த சுவாமிகளின் ஆக்ஞையால் இன்னும் பல புதுக்கட்டடங்கள் உருவாகி வருகின்றன.

சங்கர ஜயந்தியும், நவராத்ரியும், சிவராத்ரியும்தான் இங்கு நடக்கும் பிரதான உத்ஸவங்கள். அவற்றிற்கு நாட்டின் பல்வேறு பாகங்களிலிருந்து ஆயிரக்கணக்கான சேவார்த்திகளும், பண்டிதர்களும், வித்வான்களும் வருகின்றனர். இருபத்தி ஐந்து ஏக்கர் பரப்புள்ள இந்த இடத்தைத் திருவாங்கூர் மஹாராஜா ராமவர்ம ஸ்ரீ மூலம் திருநாளின் சர்க்கார் ஆர்ஜித்து ஸ்ரீ சிருங்கேரி சமஸ்தானத்துக்கு வழங்கியது.

ஸ்ரீ சங்கரரோடும், அவருடைய பெற்றோரோடும் தொடர்புள்ளனவாகப் பரம்பரையாய்க் கருதப்பட்ட ஆலயங்களில் காலடியிலிருந்து ஒரு மைலுக்கு வடக்கேயுள்ள மாணிக்க மங்கலம் என்ற இடத்திலுள்ள

துர்க்காலயமும் வெள்ளிமான் துள்ளி என்ற ஊரிலுள்ள சிவாலயமும் குறிப்பிடத்தகுந்தன. ஸ்ரீ சங்கரரால் கனகதாரா ஸ்தோத்திரத்தின் மூலம் பொன்மாரி வருஷிக்கப்பட்டு அனுக்கிரகம் பெற்ற பிராம்மணியின் வம்சத்தார்கள் இன்றும் " சுவர்ணத்து மணைக்கால் " என்ற பெயரோடு இருந்து வருகின்றனர்.

காலடி க்ஷேத்திரத்தின் பழைமையும், புனிதத்தன்மையும் ஸ்ரீ இராம கிருஷ்ண மடத்தின் கவனத்தை ஈர்த்தன. அதன் விளைவாக அம் மடத்து சந்நியாசிகள் காலடியில் சமய, கலாச்சார, தர்ம ஸ்தாபனங்களை நிறுவி வருகின்றனர். இவர்கள் 1936ம் ஆண்டில் ஸ்ரீ சங்கரஜயந்தி உத்ஸவத்தை நடத்தி அந்நாளிலிருந்து இப்பணிகளில் ஈடுபட்டு வருகின்றனர்.

காலடி க்ஷேத்திரம் அங்கமாலி ரயில் நிலையத்திலிருந்து ஐந்துமைல் தூரத்திலும் ஆல்வாயிலிருந்து எட்டு மைல் தொலையிலும் திருச்சூரி லிருந்து முப்பதாவது மைலிலும் இருக்கின்றது.



## கும்பாபிஷேகத்துக்குப்பின் விஜய யாத்திரை

**( 1965 முடிய )**

**(பின் சேர்க்கை)**

சென்ற 9வது அத்தியாயத்தில் சிருங்கேரியில் நடந்த கும்பாபிஷேக விமர்சைகளை ஒருவாறு கூறினோம். அவ்வமயம் ஸ்ரீ சந்திரசேகரபாரதீ மஹாஸ்வாமிகளின் அதிஷ்டானத்தில் நித்யப்படி பூஜை நடத்துவதற்காக ஸ்ரீ மடம் சிஷ்யர்கள் சிலர் நஞ்சை நிலத்தை தமது பக்தி காணிக்கையாக சமர்ப்பித்தார்கள். கும்பாபிஷேக காரியங்கள் முடிந்து, வந்திருந்த லக்ஷக்கணக்கான பக்தகோடிகள் பிரியா விடைபெற்று அவரவர் தத்தம் ஊர்களுக்குப் புறப்பட்டுச் சென்றனர். மஹாசன்னிதானங்கள் கொஞ்சம்கூட அலுப்பு, சலிப்பு இல்லாமல் அனைவரையும் ஆசீர்வதித்துத் தமது இயல்பான புன்முறுவல்பூத்த திருமுக மண்டலத்துடன் விடை கொடுத்தனுப்பினார்கள்.

அதன்பின் 1963ம் ஆண்டு, மே மாதம், 29ம் தேதி சிருங்கேரியை விட்டுப் புறப்பட்டு பங்களூருக்கு விஜயம் செய்தார்கள். அங்கு ஜூன் மாதம் 3ம் தேதியன்று பங்களூர் சங்கர மடத்துக்கு அண்மையில் அமைக்கப்பட்ட ஸ்ரீ சந்திரசேகரபாரதீ மந்திரத்தைத் திறந்துவைத்து ஆசியுரை வழங்கினார்கள். ஸ்ரீ ஸச்சிதானந்த சிவாபிநவ ந்ருஸிம்ஹபாரதீ ஸ்வாமிகளால் ஸ்தாபிக்கப்பட்ட ஸ்ரீ பாரதீய கீர்வாண ப்ரௌட வித்யாபிவர்த்தனீ பாடசாலையின் ஸ்வர்ண விழா ( Golden Jubilee )வில் பங்கெடுத்துக் கொண்டார்கள்.

ஸ்ரீ ஸ்வாமிகள் பங்களூரில் இருக்கும் போது, மதுரை ஸ்ரீ மீனாக்ஷி கோவில் கும்பாபிஷேகக் கமிட்டியாரின் சார்பில் சில பிரதிநிதிகள் வந்து ஸ்வாமிகளை ஜூன்மாதம் நடைபெற இருக்கும் கும்பாபிஷேகத்துக்கு விஜயம் செய்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தனர். ஆசார்யாள் தாம் நேரில் வர இயலாமையை அறிவித்து கும்பாபிஷேகம் யாதொரு இடையூறுமின்றி நடைபெறும் என்று ஆசீர்வதித்து சொக்கலிங்கப் பெருமானுக்கும், அங்கயற்கண்ணிஅம்மைக்கும் சாத்துப்படி செய்யும்படி ஜரிகைப் பீதாம்பரமும் பட்டுப்புடவையும் கொடுத்தனுப்பினார்கள். பின்பு சிருங்கேரிக்கு எழுந்தருளினார்கள். மதுரையில் கும்பாபிஷேகம் நடை-

பெற்ற பின் கும்பாபிஷேகக் கமிட்டியார் தேவஸ்தான ஸ்தானிகர் ஸ்ரீ சுப்பாபட்டர் என்ற சிவாச்சாரியார் மூலமாக ப்ரஸாதமும் ஜரிகை சால்வை (பொன்னுடை) யும் அனுப்பினூர்கள். நமதாசாரியாளும் அதனை உவகையுடன் ஏற்றருளினூர்கள்.

1964 ஜனவரி 16உ முதல் பிப்ரவரி 20உ முடிய சிருங்கேரியில் ஸ்ரீசாரதாம்பாளுக்கு நடைபெற்ற கோடி நாமார்ச்சனு மஹோத்ஸவத்தைப் பற்றி 9-வது அத்யாயத்தில் குறிப்பிட்டிருக்கிரேம்.

விஜய யாத்ராரம்பம் :— ஜகத்குரு மஹா சன்னிதானங்கள் 1964 ஏப்ரல் 16ம் தேதியன்று சிருங்கேரியைவிட்டுப் புறப்பட்டு கிக்காவிலுள்ள ரிச்யச்ருங்கர் ஆலயத்தில் வழிபாடாற்றி, ஷிமோகாவில் சங்கர மடம் கட்டுவதற்கு ரூபாய் 2000 அன்பளிப்பாக அருளினூர்கள். பின்பு ஸ்ரீரங்கபட்டணம் வழியாக மைசூருக்கு விஜயம் செய்தார்கள். மைசூர் மஹாராஜா ஸ்வாமிகளுக்கு பாத பூஜை செய்து ஆசிபெற்ருர். மைசூரில் ஸ்ரீ அபிநவ சங்கராலயத்துக்கு அண்மையில், கலா அபிவிருத்தி நிலையம், கல்யாணமண்டபம் முதலியன கட்டுவதற்கு அஸ்திவாரக்கல் நாட்டினூர்கள். அதன்பின்பு கிருஷ்ணராஜநகரம் சென்றுவிட்டு மே மாதம் 1ம் தேதி பங்களூர் வந்து சேர்ந்தார்கள். அங்கு நகரமேயர், டிபுடிமேயர் உள்ளிட்ட நகர பிரமுகர் அனைவரும் கூடி அமோகமான வரவேற்பு அளித்து மகிழ்ந்தனர்.

துவாரகா பீடாதிபதி சந்திப்பு :— ஆதி சங்கரரால் மேற்கு திசைக்காக ஸ்தாபிக்கப்பட்ட "பச்சிமாம்னுய" த்வாரகா மடத்தின் பீடாதிபதி ஸ்ரீ ஜகத்குரு ஸ்வாமிகள் மே மாதம் 2ம் தேதி பங்களூருக்கு விஜயம் செய்தார்கள். பங்களூர் வாஸிகள் அன்னுருக்குத் தகுந்த மரியாதையுடன் வரவேற்பளித்து நகர்வலமாக அழைத்துவந்தார்கள். 3ம் தேதியன்று ஸ்ரீ துவாரகா பீடாதிபதியவர்கள் நமதாசார்யாள் இறங்கியிருந்த ஸ்ரீமடத்துக்கு எழுந்தருளினூர்கள். அவர்களை ஸ்ரீமடத்தின் வாசலிலேயே சிஷ்யர்கள் எல்லாரும் யதோக்தமாய் வரவேற்று ஸகல மரியாதைகளுடன் உள்ளே அழைத்துவந்தார்கள். இரண்டு ஜகத்குரு மஹா சன்னிதானங்களும் ஸ்ரீ சாரதாதேவியின் ஆலயத்தில் சந்தித்த காட்சி கண்கொள்ளாக் காட்சியாயிருந்தது. ஸ்ரீ சாரதாம்பிகையை தரிசித்துவிட்டு சங்கராலயம் சென்று ஸேவித்தார்கள். ஆசார்யாள்

இருவருக்கும் மஹா ஜனங்கள் வரவேற்புப் பத்திரங்கள் வாசித்தளித் தார்கள். பின்பு ஆசார்யாள் இருவரும் குழுமியிருந்த ஏராளமான பக்தகோடிகளுக்கு நல்லுபதேசமும் ஆசியும் வழங்கினுர்கள்.

தமிழ் நாட்டு கவர்னர் மைசூர் மஹாராஜா :— மைசூர் மஹாராஜா ஸ்ரீ ஸ்ரீ ஜயசாமராஜ ஒடயார் அவர்களை இந்திய அரசாங்கம் தமிழ் நாட்டு கவர்னராக நியமனம் செய்தது. அதை ஏற்றுக்கொள்வ தற்கு முன்பு மஹாஸ்வாமிகள் மைசூரில் இருக்கும் போதே பாத பூஜை செய்து ஆசி பெற்ருர். மே மாதம் 3ம் தேதி பதவி ஏற்றவுடன் 5ம் தேதி பங்களூருக்கு வந்து மஹா சந்நிதானங்களை தரிசித்து க்ருதார்த்த ரானுர். ஆதியில் ஹரிஹரர், புக்கர் என்ற விஜய நகர அரசர்களுக்கு ஸ்ரீ வித்யாரண்யர் எப்படியோ அப்படியே நமது மதிப்புக்குரிய கவர்னர் அவர்கள் நமது ஜகத்குரு மஹா சன்னிதானங்களை கௌரவித்து வரு கிருர். சமயம் வாய்த்த போதெல்லாம் ஜதத்குரு எங்கிருந்தாலும் சென்று தரிசிக்கிருர். சிறு கிராமங்கள் கூட விலக்கில்லை. மேல்மங்கலம், குற்ருலம் முதலிய இடங்களுக்குச் சென்று ஆசார்யாளை தரிசித்திருக் கிருர்.

விஜய யாத்திரை தொடர்ச்சி :—ஜகத்குரு மஹாசன்னிதானங்கள் பின்பு பங்களூரிலிருந்து சேலம் எழுந்தருளினுர்கள். அங்கு நகரசபையார் உள்பட சேலம் வாசிகள் அமோகமான வரவேற்பளித்தனர். 1964ம் வருஷத்திய ஸ்ரீ சங்கர ஜயந்தி மஹோத்ஸவத்தை சிறப்பாக ஸ்ரீ சங்கர பகவத்பாதாளின் ஜன்ம க்ஷேத்திரமான காலடியிலேயே நடத்தினுர்கள். நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் வந்த வித்வான்களும், பண்டிதர் களும் ஆகம சாஸ்த்ர விற்பன்னர்களும் அடங்கிய ஓர் வித்வத் ஸதஸ்ஸும் நடைபெற்றது. பல அரிய உபந்யாஸங்களும், ஸங்கீத கலா நிகழ்ச்சிகளும் நடந்தன. பல சிறுவர்களுக்கு தர்ம உபநயனம் செய்யப்பட்டது. வித்வான்களுக்கு நிறைய ஸம்பாவனைகள் வழங்கப் பட்டன. மே 16ம் தேதியன்று சங்கரர் சன்னிதிக்குப்பக்கம் சங்கரர் கல்வி டிரஸ்டின் சார்பில் கட்டவிருக்கும் ஸ்ரீ சங்கர மன்றத்துக்கு அஸ்திவாரக்கல் நாட்டினுர்கள். காலடியை விட்டுப் புறப்பட்டு கேரள நாட்டில் பல ஊர்களுக்கு விஜயம் செய்தார்கள். மே மாதம் 24ம் தேதியன்று சுவிட்ஜர்லண்ட் தூதர் ஸ்ரீ குத்தா மஹாசன்னிதானங்களை

வந்து தரிசித்தார். 25ம் தேதியன்று கொச்சி மஹாராஜா ஸ்ரீ ராமவர்ம பரிக்ஷித்து அவர்கள் ஏர்ணாகுளத்துக்கு வந்து குருமஹா சன்னிதானங்களை தரிசித்தார்கள்.

கேரள தேசயாத்திரையை முடிந்துக்கொண்டு கோயம்புத்தூர் எழுந்தருளினார்கள். 6-6-64 லிருந்து 6-7-64 முடிய கோவையில தங்கியிருந்தார்கள். அங்கு பல பிரமுகர்களும், மில் அதிபர்களும், ஜகத்குரு மஹா சன்னிதானங்களை தரிசித்துப் பாதபூஜை செய்து கிருதார்த்தர்களானார்கள். பொது மக்கள் ஆசார்யாளின் அருள் உபதேசங்களைக் கேட்டு மகிழ்ந்தனர். 7-7-64ல் கோவையை விட்டுப் புறப்பட்டு திருப்பூர், உடுமலைப்பேட்டை, கொளுஞ்சிவாடி, கரூர் முதலிய இடங்களிலுள்ள பக்தர்களையனுக்ரஹித்து விட்டு 13-7-64 தேதி மாலை திண்டுக்கல்லுக்கு விஜயம் செய்தார்கள். இந்நகர் வாசிகள் ஜகத்குரு மஹாஸ்வாமிகளுக்கு அளித்தவரவேற்பு பிரமாதமாக இருந்தது. திண்டுக்கல் சிருங்கேரி மடத்து வாசலில் ஆசார்யாள் வந்ததும் ரித்விக்குகள் வேதகோஷம் பண்ண, நாதஸ்வர இன்னிசை முழங்க ஜே! கோஷம் வானைபிளக்க பூர்ணகும்ப மரியாதையுடன் பக்தர்கள் ஜகத்குருவை வரவேற்றனர். அங்கிருந்து கால் நடையாகவே மேள வாத்யம் வேத கோஷத்தோடு தேர் மேற்குத்தெரு, சத்திரம் தெரு, புது அக்ரஹாரம் முதலிய தெருக்கள் வழியாக கன்னிவாடி ஜமீன் ஆபீஸுக்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள். அன்றும் மறுநாளும் அங்குதங்கி பூஜை நிகழ்த்தி அருளுபதேசம் செய்து விட்டு மாலை 6 மணிக்குப் பெரிய குளத்துச்குப் புறப்பட்டார்கள்.

பெரியகுளம் போகும் வழியில் வத்தலக்குண்டில் வரவேற்பு அளிக்கப்பட்டது. பெரியகுளத்திலிருந்து மேல்மங்கலம் சென்று விட்டு தமது விஜய யாத்திரையைத் தொடர்ந்து ஸ்ரீவில்லிபுத்தூர், ராஜபாளையம், சங்கரன்கோவில் வழியாகக் குற்றாலம் வந்து சேர்ந்தார்கள்.

நமது ஆசார்யாளுக்குக் குற்றாலம் மிகவும் பிடித்தமான இடம், இயற்கை அழகும், சீதோஷ்ண நிலையும், சந்தடி இல்லாத நிம்மதியான வாஸமும், எப்பக்கம் பார்த்தாலும் பச்சைபசேலென்று தெரியும் கழனிகளும், மரங்கள் அடர்ந்த குன்றுகளும், மேகங்கள் தவழும் மலைகளும்,

நீர்வீழ்ச்சிகளும் நிறைந்து மனதிற்கு நிம்மதியை அளிக்கும் இயற்கை அன்னையின் களியாட்டம்போன்று காட்சியளிக்கும் குற்றாலம் மஹா சன்னிதானங்கட்கு சிருங்கேரியை நினைவூட்டும்போலும்.

குற்றாலத்தில் 24—7—64ல் வியாஸபூஜை நடத்தினார்கள். வழக்கம்போல் மைசூர், திருவிதாங்கூர், நேபாளம், இந்தூர், குவாலியர் மஹாராஜாக்களின் காணிக்கைகளும் பர்த்வான் ராஜமாதாவின் காணிக்கையும் ஸமர்ப்பிக்கப்பட்டன. 4—8—64ம் தேதி சென்னை கவர்னராயிருக்கும் மைசூர் மஹாராஜா குற்றாலம் வந்து ஜகத்குருவை தரிசித்து ஆசிபெற்றார். வியாஜ பூஜையை ஒட்டி வழக்கமாக நடக்கும் கணபதி வித்வத்ஸதஸ் நடந்தது. 14—9—64 முதல் ஐந்துதினங்கள் சண்டீஹோமமும் பூர்ணாஹுதியும் நடந்தன. மைசூர் மஹாராஜாவும் திருவிதாங்கூர் மஹாராஜாவும் குடும்பசகிதம் வந்திருந்து தரிசித்தார்கள். திருவாங்கூர் மஹாராஜா தமது தலைநகருக்கு விஜயம் செய்ய வேண்டுமாயும், தமது அரண்மனையில் சண்டீயகமும் நடத்தியருள வேண்டுமென்றும் பிரார்த்தித்தார். மஹா சன்னிதானங்களும் இசைந்தருளினார்கள்.

இவ்வாண்டு நவராத்ரி மஹோத்ஸவம் கல்லிடைக்குறிச்சியில் வெகு விமரிசையாக நடந்தேறியது. தினந்தோறும் யாவருக்கும் ஸந்தர்ப்பணை கிராம மஹா ஜனங்களால் நடத்திவைத்தது குறிப்பிடத்தக்கது.

6-10-64 முதல் நவராத்ரி பூஜையும் ஜகத்குரு மஹாஸ்வாமிகளின் தர்பாரும் அதிவிமரிசையாக அமைந்தன. பிரபல நாதஸ்வர வித்வான்களும், சங்கீத வித்வான்களும் பங்கெடுத்துக்கொண்டனர். பல சமயச் சொற்பொழிவுகளும் நடைபெற்றன. ஊரே ஒரு புதுப்பொலிவுடன் துலங்கியது. 14-10-64ல் பூர்ணாஹுதி நடந்தது. 15ம் தேதி கல்லிடைக்குறிச்சியில் ஸ்ரீ சங்கர தர்மஸ்தாபனத்தாரால் புதிதாகக் கட்டப்பட்ட "ஸ்ரீ சாரதா தர்ம வைத்யசாலை"யை ஸ்ரீ ஜகத்குரு ஸ்வாமிகள் திறந்து வைத்தார்கள். 18ம்தேதி மணிமுத்தாறு அணைக்குச்சென்று பார்வையிட்டார்கள். 21ம்தேதி ஆழ்வார்குறிச்சியில் "பரமகல்யாணி" கல்லூரிக்கு விஜயம் செய்து மாணவர்களுக்கு ஓர் அரிய உபதேசம் செய்தார்கள். 22ம்தேதி காலையில் பாணதீர்த்தத்துக்குச் சென்று சுமார்

40 அடி உயரத்திலிருந்து நீர்வீழ்ச்சியாக ப்ரவஹிக்கும் தாமிரபர்ணியில் ஸ்நானம் செய்தார்கள். 24ம்தேதி நூற்றுக்கணக்கான பண்டிதர்கள் ஆஹிதாக்னிகள், வேதவிற்பன்னர்களுக்கு ஸம்பாவனை, ஸன்மானம் செய்து அரியதோர் உபந்யாஸம் செய்தார்கள். பின்பு அம்பாசமுத்ரம், வீரவநல்லூர், கோபாலசமுத்ரம் வழியாக 30—10—64ம்தேதி திருநெல் வேலிக்கு விஜயம் செய்தார்கள்.

திருநெல்வேலியில் மஹா சன்னிதானங்களின் முன்னிலையில் 3–11–64 வர்த்தந்தி மஹோத்ஸவத்தை ஸ்ரீ மடத்து சிஷ்யர்கள் நடத்தினார்கள். அன்று தீபாவளியும் கூட. மஹாருத்ரம் லக்ஷார்ச்சனை வேத பாராயணம் ஸந்தர்ப்பணம் முதலிய சகல வைபவங்களுடன் இந்த விழா மிகச்சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. ஸ்ரீ சங்கர ஸேவா ஸமிதி யாரால் தொகுக்கப்பட்ட "பக்தி ப்ரஸூநாநி" (Flowers of Devotion) என்ற வர்த்தந்தி மலர் ஸமர்ப்பிக்கப்பட்டது. திருநெல் வேலி சிஷ்யர்கள் 48 தங்கக்காசுகளைக் காணிக்கையாக ஸமர்பித்தார்கள் வர்த்தந்தி மஹோத்ஸவம் என்பது ஆசார்யாளின் பிறந்தநாள் விழா.

**திருவனந்தபுரம் விஜயம் :—** திருநெல்வேலியிலிருந்து புறப்பட்டு வைஷ்ணவ கேந்திரங்களான வானமாமலைக்கும், திருக்குறுங்குடிக்கும் ஆசார்யாள் எழுந்தருளி ஆங்காங்கு அமர்ந்துள்ள பீடாதிபதிகளான ஜியர் ஸ்வாமிகளால் நன்கு வரவேற்கப்பட்டு, தர்ம பிரசார விஷயமாய் உரையாடினார்கள். ஸ்ரீ வைஷ்ணவ மடாதிபதிகளும், சிருங்கேரி ஜகத் குருவும் சந்தித்தது ஓர் சரித்திர பிரசித்தி பெற்ற நிகழ்ச்சியாகும். நமது ஸநாதன ஹிந்து சமயத்தில் பல்வேறு பிரிவுகள் இருப்பது போலும், அவை ஒன்றுக்கொன்று முரண்பட்ட கொள்கைகளையுடையதாயும், அதனால் ஹிந்து சமுதாயமே பிளவுபட்டிருப்பதாயும் சில சுயநல வாதிகளும், மேடை பிரசங்கிகளும், பிறமதத்தினரும் பறை சாற்றும் கூற்றுக்கு இத்தகைய சந்திப்பு ஓர் தகுந்த பதிலை அளிப்பதாக அமைந்தது.

பின்பு திருவனந்தபுரத்துக்கு விஜயம் செய்தார்கள். ஆங்கு மஹாராஜா அவர்கள் பூர்ணகும்ப மரியாதையுடன் மிகவும் போற்றத் தகுந்த முறையில் வரவேற்பு அளித்தார். அரச குடும்பத்தினரின் பிரார்த்தனைக்குச் செவி சாய்த்து 26—11—64 முதல் 30—11—64

முடிய ஸ்ரீ ஜகத்குரு மஹா சன்னிதானங்களின் அனுக்ரஹத்துடன் லோக க்ஷேமார்த்தமாக அரண்மனையிலேயே சண்டீ மஹாயாகம் நடைபெற்றது. ஸ்ரீ சாரதா–சந்த்ரமௌளீச்வரர் பூஜையை தினந்தோறும் ஆசார்யாள் அரண்மனையில் நடத்தினார்கள் மஹாராஜாவும் குடும்பசகிதம் வந்து தரிசித்தார்கள். அரச குடும்பத்தினர் உள்பட அரண்மனையிலுள்ள யாவருக்கும் ஜகத்குரு அவர்கள் தீர்த்த பிரசாதம் வழங்கினார்கள். வித்வத் ஸதஸ்ஸும் நடைபெற்றது. திருவாங்கூரில் புதிதாகக் கட்ட இருக்கும் ஸ்ரீ சங்கர மடாலயத்துக்கு அஸ்திவாரக்கல் நாட்டினார்கள். மஹாராஜாவும் ராணியும், ஆசார்யாளுக்குப் பாதபூஜை செய்து க்ருதார்த்தரானார்கள்.

தென்காசி விஜயம் :— 9—12—64ம் தேதி மஹா சன்னிதானம் அவர்கள் திருவனந்தபுரத்தைவிட்டுப் புறப்பட்டு வர்க்கலை, கொல்லம், கொட்டாரக்கரை, புனலூர், கொளத்துப்புழா, ஆரியன்காவு முதலிய இடங்களைத் தமது திருவடி ஸ்பர்சத்தால் புனிதப்படுத்திவிட்டு தமிழ் நாட்டில் பிரவேசித்தார்கள். செங்கோட்டை, சாம்பவர்வடகரை, சுந்தரபாண்டியபுரம் முதலிய ஊர்களின் வழியாக 23—12—64 தேதி தென்காசி வந்து சேர்ந்தார்கள். அவ்வூரில் கோவில்கொண்டருளும் குலசேகரநாதஸ்வாமி ஆலயத்துக்கு விஜயம் செய்தபோது இலஞ்சி வள்ளல் ஸ்ரீ I. A. சிதம்பரம் பிள்ளை, தர்மகர்த்தாக்கள் ஸ்ரீ K. H. கிருஷ்ணஸ்வாமி அய்யர் (வக்கில்), ஸ்ரீ S. ராமநாத அய்யர் முதலியவர் களால் பூர்ணகும்ப மரியாதையுடன் வரவேற்கப்பட்டு கோவில் முழுவதையும் பார்வையிட்டு புராதனமான ஒற்றைக்கல்லாலான ஜன்னல் மற்றும் அபூர்வமான சில்பங்களையும் பார்வையிட்டு மகிழ்ந்தார்கள். பின்பு கால் நடையாக விநாயகர்கோவிலுக்கும் சென்று கிராமம் முழுவதையும் தமது திவ்யபாத ஸ்பர்சத்தால் புனிதமாக்கி அனுக்ரஹித் தார்கள். தென்காசியிலிருந்து அம்பாசமுத்ரம் விஜயம் செய்தார்கள். பின்பு 12—1—65ம் தேதி திருநெல்வேலிக்கு வந்தபோது நெல்லை ஸங்கீத ஸபாவில் சிருங்கேரி ஆசார்யாளுக்கு ஓர் பெரிய வரவேற்பு நடைபெற்றது. 14—1—65ல் ஸ்ரீவைகுண்டம் சென்றார்கள். அங்கு ஆசார்யாளை பூர்ணகும்ப மரியாதையுடன் வரவேற்று பிரத்யேகமாக அமைக்கப்பட்ட பந்தலுக்கு அழைத்துவந்தார்கள். நம்மாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பட்ட நவதிருப்பதிகளில் முதலாவதான இந்த

க்ஷேத்ரத்தின் ஆலயத்துக்குச் சென்று ஸ்ரீ வைகுண்டபதியை தரிசித்தார்கள். ஆலய மரியாதைகளுடன் வரவேற்கப்பட்டார்கள். ஸ்ரீ நரஸிம்ஹர் சன்னிதியில் ஏகாந்த தியானத்துடன் சிறிது நேரம் இருந்தார்கள். வேங்கடாசலபதி ஸன்னிதியிலுள்ள அற்புதமான சில்ப வேலைகளைக் கண்டு மகிழ்ந்தார்கள். பின்பு சிவன்கோவிலுக்கும் சென்று தரிசித்தார்கள்.

**திருச்செந்தூர் விஜயம்:—** ஜகத்குரு மஹா சன்னிதானங்கள் திருச்செந்தூர் முருகன் திருக்கோயிலுககு வந்ததும் தர்மகர்த்தா தலைவர் ஸ்ரீ **K. S. P.** ஷண்முகவேல் நாடாரும் டிரஸ்டி இலஞ்சி வள்ளல் **I. A.** சிதம்பரம் பிள்ளையும் நிர்வாக அதிகாரி ஸ்ரீ மஹாராஜன் அவர்களும் எல்லா ஆலய மரியாதைகளுடன் வரவேற்றனர். ஆதி சங்கர பகவத்பாதாள் ஸ்ரீ சுப்ரமண்ய புஜங்கம் பாடி வழி பட்ட ஸ்தலமல்லவா? பிறகு ஸ்வாமிகள் நாழிக்கிணற்றிலும் சமுத்திரத்திலும் யதோக்தமாய் ஸ்நாநம் செய்து விட்டு உள்ளே சென்று ஆலயத்தின் உள்ளே இருக்கும் போத்திகள் ஸ்நானம் செய்யும் கிணற்றிலும் ஸ்நானம் செய்து விட்டு சிருங்கேரி ஜகத்குருக்களுக்கு பரம்பரையாக ஏற்பட்ட வழக்கப்படி தமது திருக்கரங்களாலேயே மூலவருக்கும் ஷண்முகருக்கும் பூஜை தீபாராதனை செய்து வழி பட்டார்கள். தங்கக்காசு மாலை, விலையுயர்ந்த பட்டு வஸ்த்ரங்கள் சாத்தி ரூபாய் நாணயத்தாலேயே அஷ்டோத்தர சத நாம அர்ச்சனை செய்தார்கள். ஸ்ரீ மடத்துச் செலவில் மாமூல்படி ஸந்தர்பணையும், தைலகாப்பு உத்ஸவமும் நடந்தது. ஈசுவரபாகவதருக்கு பொன்னுடையும் வேத பாடசாலை மாணவர்களுக்கு வஸ்திரம் முதலியனவும் வழங்கினார்கள்.

பின்பு தூத்துக்குடி சென்றார்கள். அங்கும் அமோகமான வரவேற்பு, பாதபூஜைகள், ஸ்ரீ சாரதா சந்திரமௌளீச்வரர் பூஜை, உபந்யாஸம் முதலியன வழக்கப்படி நடந்தன. 21-1-65ம் தேதி யன்று சிருங்கேரி மடத்தின் கிளை மடம் கட்டுவதற்கு தமது திருக்கரத்தால் அஸ்திவாரக்கல் நாட்டினார்கள். அடுத்து 22-1-65ல் கிருஷ்ணபுரத்தில் "ஸ்ரீ வேம்பய்யர் சாஸ்வத தர்ம சாஸன ஆஸ்பத்திரியை" த்திறந்து வைத்து அநுக்ரஹித்தார்கள். பின்பு கோவில்பட்டி, எட்டயாபுரம் எழுந்தருளினார்கள். எட்டயபுரத்தில் மன்னர் தம் குடும்பத்துடன் ஆசார்யாளை வரவேற்று பூஜையை தரிசித்து ஆசி பெற்றார்.

இராமேச்வரம் :— 1965ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 1ந்தேதி தை அமாவாசையாயும் மஹோதய புண்யகாலமாகவும் அமைந்தது. அன்று ஜகத்குரு மஹாஸ்வாமிகள் நவபாஷாணத்தில் ஸ்நானம் பண்ணி விட்டு மண்டபத்திலிருந்து பிரத்யேகமான படகில் பாம்பன் வந்து சேர்ந்தார்கள். சிருங்கேரி ஆசார்யார்களுக்கு மண்டபத்திலிருந்து படகோட்டும் பரம்பரை பாத்தியத்தை ஓர் முஸ்லீம் (பரக்காயர்) குடும்பத்தார் தொன்றுதொட்டு அனுபவித்து வருகிறுர்கள் என்ற விவரம் இந்நூலில் முன்பே பிரஸ்தாபிக்கப்பட்டது ஞாபகம் இருக்கலாம். பாம்பன் வந்ததும் இராமநாதபுரம் ஜில்லா ரெவின்யூ அதிகாரியுடன் ஆலய நிர்வாக அதிகாரியும் பிரமுகர்களும் எதிர்கொண்டுவந்து பூர்ணகும்ப மரியாதைகளுடன் வரவேற்றனர்.

பிப்ரவரி 2ம்தேதி இராமேச்வரம் விஜயம் செய்தார்கள். 3ம்தேதி ஸர்வ தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து விட்டு சிருங்கேரி சங்கர மடத்தில் பூஜை செய்தார்கள். பின்பு ஆலயம் வந்ததும் கோவில் அதிகாரிகள் யாவரும் எல்லா ஆலய மரியாதைகளுடன் வரவேற்றனர். ஸ்ரீஇராமநாத ஸ்வாமி கோவிலில் சிருங்கேரி ஜகத்குருக்களுக்கு ஏற்பட்ட மாமூல் வழக்கப்படி தமது திருக்கரத்தாலேயே ஸ்ரீ இராமநாதருக்கு 1½ மணி நேரம் ருத்ராபிஷேகம் செய்து, 1008 ரூபாய்களால் ஸஹஸ்ரநாம அர்ச்சனையும் தீபாராதனையும் நடத்திவிட்டு ஸ்ரீ பர்வதவர்த்தனி அம்பாளுக்கும் இவ்வாறே பூஜை ஸஹஸ்ரநாமார்ச்சனையும் செய்து, அம்பாளுக்கும் ஸ்வாமிக்கும் ஜரிகைபட்டு வஸ்த்ரங்களால் அலங்காரமும் செய்தார்கள். அர்ச்சகர்களுக்கும் ஸம்பாவனை செய்தார்கள். டோலோத்ஸவ பூஜையும் செய்தார்கள். சமீபத்தில் ஏற்பட்ட புயலால் உண்டான அரிஷ்டங்கள் நிவர்த்திக்காக "உத்பாத சாந்தி" ஹோமம் நடத்த ஏற்பாடு செய்தார்கள். இராமநாதபுரம் ராஜாவும் ஏனைய தனிக பிரமுகர்களும் பண்டித சிரோமணிகளும், வித்வத் சிகாமணிகளும், ரித்விக்குகளும் கூடியிருந்து சிரத்தையுடன் நடத்தினர். ஸ்ரீ சாரதா ஸ்ரீ சந்த்ரமௌளீச்வரர் பூஜைக்குபின் மறுபடியும் ஆலயத்துக்கு வந்து பள்ளியறையில் சயன பூஜையும் நடத்தினுர்கள்.

4–2–65 வியாழக்கிழமையன்று ஜகத்குரு மஹா ஸ்வாமிகள் தமது பரிவாரங்களுடனும் நூற்றுக்கணக்கான ரித்விக்குகளுடனும் ஆயிரக்கணக்கான பக்த கோடிகளுடனும் ஸேதுவுக்குச் சென்று முகுந்தராயர்

சத்திரத்திலிருந்து சிறிது தூரத்தில் ரத்னாகரமும் மஹோததியும் சங்கமமாகும் இடத்தில் ஸ்நானம், அனுஷ்டானம், லிங்க பூஜைகள் செய்து தங்கத்தாலாகிய வில்லும் அம்பும் தானம் செய்தார்கள். மற்றும் பல விசேஷ தானங்களும் செய்தார்கள். அந்த இடத்தை யாவரும் புண்ய ஸ்நான கட்டமாகக் கருதும் படிக்கும் கடல் கொள்ளப்பட்ட தனுஷ்கோடிக்குப் பதிலாக இந்த குறிபிட்ட ஸ்தலத்திலேயே இனி மேல் யாத்ரிகர்கள் ஸ்நானம் ச்ராத்தம், தர்பணாதிகளைச் செய்யலாம் என்றும் பிரகடனம் செய்தார்கள். தத்க்ஷணமே கூட வந்த பலரும் மஹோததியில் இறங்கி ஸ்நானம் செய்ய ஆரம்பித்து விட்டார்கள். இந்த நிகழ்ச்சிக்கு ராஷ்ட்ரபதி ராதாகிருஷ்ணன், திருவிதாங்கூர் மஹாராஜா, டாக்டர் C. P. இராமசாமி அய்யர், K. M. முன்ஷி முதலிய பல பெரியார்கள் பிரார்த்தனைச் செய்திகள் அனுப்பியிருந்தார்கள். ஸ்ரீ ஜகத் குரு ஸ்வாமிகள் ஸேதுவுக்கு விஜயம் செய்து, ஸ்நான கட்டம் ஏற்படுத்திக்கொடுத்தது நமது பாரத பூமியிலுள்ள சகல ஆஸ்திகச் செல்வர்களுக்கும் ஆறுதலையளித்தது. இது ஒரு மஹத்தான சரித்திரபிரசித்தி பெறத்தகுந்த செயலல்லவா? ஆயிரத்துக்கு மேற்பட்ட ஏழைகளுக்கு உணவளிக்கப்பட்டது. கோடிநாமார்ச்சனை நடத்த 1001 ரூபாய் அளித்தார்கள். தமிழ் நாடு ஆக்டிங் கவர்னர் ஸ்ரீ P சந்த்ரா ரெட்டி அவர்கள் தமது குடும்பத்தோடு வந்து இராமேச்வரத்தில் மஹா சன்னிதானங்களை தரிசித்தார்கள்.

பழனியில் ஜகத்குரு :— 11—2—65 வியாழக்கிழமை காலை 9 மணிக்கு நமதாச்சார்யாள் பழனி அடிவாரம் அருள் ஜோதி வீதியில் புதிதாக நிர்மாணம் பண்ணப்பட்ட "M. N. ராமசாமி அய்யர் தர்மசாலா" என்ற சத்திரத்தை ஷி ராமசாமி அய்யரின் புதல்வர்களின் பிரார்த்தனைக்கு இணங்கி அங்கு வந்து தமது திருக்கரங்களால் சத்திரத்தின் துவாரத்திற்கும், பெயர்பொறித்த கற்சிலாசாஸனத்திற்கும் பூஜை நடத்தி உள்ளே சென்று தமது திருவடி ஸ்பர்சத்தால் தர்மசாலாவைப் புனிதமாக்கினார்கள்.

பிறகு மலைக்கோவிலுக்கு எழுந்தருளினார்கள். ஆலய வாசலில் அவர்களை ஆலய நிர்வாகஸ்தர்கள், ஸ்தானிகர்கள், மிராசுதார்கள்கூடி மேளம், வேதபாராயணம், பூர்ணகும்பம் முதலிய கோவில் மரியாதை

களுடன் வரவேற்றுக் கோவிலுக்குள் அழைத்துச்சென்றனர். முதலில் கணபதி உத்ஸவர், ஷண்முகர் இவர்கள் சன்னிதியில் தாமே பூஜை செய்துவிட்டு மூலஸ்தானத்திலுள்ள ஸ்ரீ பழனியாண்டவருக்கும் தாமே சகலவித அபிஷேகங்களும் நடத்தி புஷ்பங்களாலும் நாணயங்களாலும் அர்ச்சித்து தங்கமாங்காய் மாலை உயர்ந்த ஜரிகைப்பாடமைந்த பட்டு இவைகளால் அலங்கரித்து விபூதி பிரஸாதம் வழங்கினார்கள். ஏராள மான மக்கள் குழுமியிருந்து தரிசித்தனர். மறுநாள் 12ம்தேதியன்று தர்மசாலாவில் ஸ்ரீ பரமாசார்யாளின் அனுக்ரஹத்துடன் அதிருத்ரம் ஆரம்பிக்கப்பட்டு 11 நாட்கள் சிறப்பாக நடைபெற்றது.

15-2-65ல் வத்தராயிருப்புக்கு விஜயம் செய்தார்கள். வெகு நாட்களாக அங்கு மழையில்லாமல் ஜனங்கள் கஷ்டப்பட்டுக்கொண்டிருந் தனர். மஹாசன்னிதானங்கள் விஜயம் செய்ததும் மழை பெய்தது ஜனங்களுக்கு ஆச்சர்யத்தையும், ஆறுதலையும் அளித்தது. கலியுக ருச்யச்ருங்கர் என்று இன்றும் அவ்வூர் வாஸிகள் பேசிக்கொள்கின்றனர். 17ம் தேதி சுந்தரபாண்டியம் விஜயம் செய்தார்கள். வத்தராயிருப்புக்கு வருவதற்கு முன்னால் 15ம்தேதியன்று ஸ்ரீ வில்லிபுத்தூரில் புதிதாகக் கட்ட இருக்கும் ஸ்ரீ சங்கராலய கட்டடத்துக்கு அஸ்திவாரக்கல் நாட்டினார்கள். அப்படியே மடவார்விளாகம் சென்று ஸ்வாகதப் பத்திரங்களை அங்கீகரித்து கோவிலில் தரிசனம் செய்தார்கள்.

பின்பு மதுரைக்கு விஜயம் செய்து அங்கு சில நாட்கள் தாமதித்தார்கள். 5-3-65 அன்று சிவகங்கைக்கு விஜயம் செய்து சிருங்கேரி சங்கர மடத்தில் நான்கு சிஷ்யர்களுடன் கூடிய ஆதி சங்கரர் திருவுருவத்தை பிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகத்தைக் கண்டு களித்தார்கள். 13-3-65ம் தேதியன்று புரி கோவர்த்தன பீடாதிபதி சமீபத்தில் பட்டத்துக்கு வந்த ஸ்ரீ சங்கராசார்ய ஸ்ரீ நிரஞ்னதேவதீர்த்த மஹா ஸ்வாமிகள் மதுரைக்கு விஜயம் செய்தார்கள். 14ம் தேதி சிருங்கேரி ஜகத்குரு மஹா ஸ்வாமிகளை கோவர்த்தன ஸ்வாமிகள் சந்தித்து இரு ஸ்வாமிகளும் உரையாடி மகிழ்ந்தார்கள். அன்று மாலை 6½ மணிக்கு வேங்கடராமன் ரோட்டில் அமைக்கப்பட்ட அலங்காரப்பந்தலில் ஸ்ரீ சந்த்ரமௌளீச்வர பூஜா மண்டபத்தில் இரண்டு ஜகத்குருக்களும் பக்த கோடிகளுக்கு தரிசனம் அளித்தார்கள். புரி ஜகத்குரு ஸம்ஸ்க்ருதத்

தில் ஓர் சொற்பொழிவாற்றினர்கள். அதை சிருங்கேரி ஜகத்குரு ஸ்வாமிகள் தமிழில் மொழி பெயர்த்தார்கள். 16-3-65 மாலை மதுரை ஆடிவீதித் திருப்புகழ் மண்டபத்தில் இரண்டு ஆசார்யாளும் விஜயம் செய்து சொற்பொழிவாற்றினர்கள். 17—3—65ல் தல்லாக்குளத்தில் நடந்த சண்டிஹோமத்தின் இறுதி கட்டமான பூர்ணாஹுதியின்போது இருஸ்வாமிகளும் பிரஸன்னமாய் இருந்தார்கள். 19—3—65 அன்று சென்னை கவர்னர் மாக்ஷிமை தங்கிய மைசூர் மஹாராஜா மதுரை வந்து ஜகத்குரு மஹாசன்னிதானங்களை தரிசித்து தனியாக சம்பாஷித்து விசேஷ அனுக்ரஹத்தைப் பெற்றார். 20ம்தேதி தல்லாகுளம் விநாயகர் கோவில் மண்டலாபிஷேகத்தில் மஹாசன்னிதானம் கலந்து கொண்டார்கள். சேதுபதி ஹைஸ்கூலில் தமது குருநாதரான ஸ்ரீ சந்த்ர சேகரபாரதீ மஹாஸ்வாமிகளின் திருவுருவப்படத்தைத் திறந்துவைத்து சொற்பொழிவாற்றினர்கள். ஸ்ரீ வியாஸராயபுரத்தில் கல்யாண மஹால் கட்டுவதற்கு 5001 ருபாய்கள் அளித்து ஸ்ரீ முகமும் தந்து அனுக்ரஹம் செய்தார்கள். ஆசார்யாள் மதுரையிலிருந்து T. V. S. நகருக்கு விஜயம் செய்தார்கள்.

21-3-65 மாலை மதுரையிலிருந்து சிவகாசிக்கு எழுந்தருளினர்கள். ஆங்கு நகரபிரமுகர்கள் யாவரும் அமோகமான வரவேற்பளித்தனர். ஆலயதரிசனத்துக்குப்பின் ஸ்வாமிகள் அரிய உபதேச ப்ரவசனம் செய்தார்கள். 23-3-65 அன்று மதுரை ஜில்லா கூடலூருக்கு விஜயம் செய்து அன்றும் மறுநாளும் தங்கி அங்கிருந்தே காலடியை நோக்கி மேற்குதுடர்ச்சிமலை வழியாகப் புறப்பட்டார்கள். ஏப்ரல் மாதம் முழுவதும் இவ்வாறு பயணத்தில் கழிந்தது. மே மாதம் 1ம் தேதி காலடியில் காலடி வைத்தார்கள்.

**காலடியில் திரிவேணி ஸங்கமம்:—** ஆசார்யாளின் வருகையை முன்னிட்டு காலடியில் ஏற்கனவே சிஷ்யர்களும் பக்தர்களும் ஏராளமாகக் குழுமியிருந்தனர். ஏனெனில் இவ்வாண்டு சங்கர ஜயந்தியில் ஆதி சங்கர பகவத் பாதாளால் ஸ்தாபிக்கப்பட்ட நான்கு ஆம்னாய மடங்களில் தக்ஷிண, பஸ்சிம, பூர்வ, ஆம்னாய மடங்களான சிருங்கேரி, துவாரகை புரி ஆக மூன்று பீடாதிபதிகளும், கங்கை யமுனை சரஸ்வதி போன்றும் ப்ரம்மா விஷ்ணு ருத்ரன் போன்றும் சந்தித்து பக்த கோடிகளுக்கு

அனுக்ரஹ வர்ஷம் வர்ஷிக்கப் போகிறார்கள் அல்லவா? நமது சமய சரித்திரத்தில் இதற்கு முன் கண்டிராத நிகழ்ச்சியல்லவா? இந்த சந்தர்ப்பத்தில் காலடி சென்று தரிசிக்க வாய்ப்புப் பெற்ற ஆஸ்திகச் செல்வர்களின் பாக்யந்தான் என்னே!

2-5-65ம்தேதி ஸ்ரீ சங்கர ஜயந்தி மஹோத்ஸவம் யதோக்தமாய் துவக்கப்பட்டது. தினந்தோறும் ஆதிசங்கரர் ஆலயத்திலும் ஸ்ரீ சாரதாம்பாள் ஆலயத்திலும் விசேஷ பூஜைகளும், மஹாந்யாஸ ருத்ராபிஷேகமும், வேதபாராயணம், பரஸ்தானத்ரய பாஷ்ய பாராயணங்களும் நடந்தன. ஆசார்யாளின் அனுக்ரஹத்துடன் 2-5-65ல் சதசண்டி மஹாயக்ஞம் ஆரம்பிக்கப்பட்டு தினமும் ஸப்தசதி பாராயணமும் விசேஷ பூஜைகளும் நடைபெற்றன.

ஆதிசங்கர பகவத்பாதாள் திருவவதாரம் செய்த காலடி புண்ணிய க்ஷேத்ரத்தில் நடைபெறும் ஸ்ரீ சங்கர ஜயந்தி உத்ஸவத்தில் கலந்து கொள்வதற்காக பஸ்சிமாம்னய ஸ்ரீ துவாரகா பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ அபிநவ ஸச்சிதானந்ததீர்த்த ஸ்வாமிகளும், பூர்வாம்னய ஸ்ரீ பூரி ஜகந்நாத் பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ நிரஞ்ஜன தேவதீர்த்த ஸ்வாமிகளும் 4-5-65யன்று விமானமூலம் கொச்சிவந்து சேர்ந்தார்கள். விமான நிலயத்தில் ஏராளமான பக்தர்கள் கூடியிருந்து வேதபாராயணம், பூர்ண கும்ப மரியாதைகளுடன் வரவேற்றனர். பிறகு கொச்சியிலிருந்து, காலடிக்கு வந்ததும், அங்கும் அவர்களுக்கு விசேஷ வரவேற்பு அளிக்கப்பட்டது. இவ்வாறு தக்ஷிண-பஸ்சிம-பூர்வ ஆம்னய பீடாதிபதிகள் மூவர் சந்திப்பதைப் பார்க்கவும், சங்கர ஜயந்தி உத்ஸவத்தில் பங்கெடுத்துக்கொள்ளவும், சதசண்டி மஹாயக்ஞத்தைக் காணவும் இன்னும் ஏனைய நிகழ்ச்சிகளைக்கண்டு மகிழவும், கன்னடம், மஹாராஷ்ட்ரம், ஆந்த்ரம், தமிழ்நாடு, கேரளம் முதலிய பிரதேசங்களிலிருந்து லக்ஷக்கணக்கான பக்தர்கள் குழுமிவிட்டனர்.

5-5-65யன்று மூன்று ஆசார்யாளும் வேதபாராயணம், நாதஸ்வரங்களுடன் ஊர்வலமாகக் கோவிலுக்கு அழைத்துவரப்பட்டார்கள். ஸ்ரீ சாரதாம்பாளையும் ஸ்ரீ சங்கராசார்யாளையும் தரிசித்தனர், சிருங்கேரி ஜகத்குரு விசேஷ பூஜை நடத்தினார்கள். மூவரும் புஷ்பாஞ்ஜலி ஸமர்ப்

பித்த பின்பு அங்கிருந்து சண்டி யாகசாலைக்கு எழுந்தருளினர்கள். அதன்பின் ஆர்யாம்பாளின் ஸமாதியை தரிசித்தனர். காலடி ஸ்ரீமடத்தில் மூன்று ஆசார்யாளும் தனிமையில் அமர்ந்து ஒரு மணி நேரத்துக்குமேல் உரையாடிக்கொண்டிருந்தனர். அன்று மாலை இம்மும்மூர்த்திகளின் சன்னிதியில் அகில பாரத சங்கர ஸேவா ஸமிதியின் மஹாநாடு நடை பெற்று, சில முக்யமான தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. மஹா நாட்டு நிகழ்ச்சிகள் முடிந்ததும் அங்கேயே அன்றைய வித்வத்ஸதஸ்ஸும் கூடிற்று. இதில் பூர்வாம்னுய பீடாதிபதி பூரிஜகத்குரு வெகு உத்ஸாக யாகக் கலந்துகொண்டார்கள். பொதுவாக அன்றைய நிகழ்ச்சிகள் பக்தகோடிகளின் கண்களுக்கும் செவிகளுக்கும் நல்விருந்தாக இருந்த தோடு அத்யாத்ம விஷயத்தில் உள்ளத்துக்கும் அரியவிருந்தாய் அமைந் தன என்னலாம்.

உலகெங்கும் சாந்தி நிலவவும், முக்யமாய் நம் பாரத நாட்டுக்கு ஏற்பட்டுள்ள யுத்த பயம் விலகவும், நாட்டைப்பற்றி நலியச்செய்யும் துர்பிக்ஷங்கள் ஒழியவும் எங்கும் சுபிக்ஷம் நிலவவும் லோக க்ஷேமார்த்தம் நடந்து வரும் சண்டி யாகத்தில் 6ம் தேதியன்று மூன்று சன்னிதானங் களும் பிரஸன்னமாயிருக்க பூர்ணாஹுதி நடைபெற்றது. 7ம் தேதி காலடியில் நடந்த கேரள பிராமண மஹாநாட்டுக்கு சிருங்கேரி, துவாரகை புரி மூன்று சன்னிதானங்களும் விஜயம் செய்து ஆசி உரை வழங்கினர்கள்.

11—5—65 தேதி சிருங்கேரி ஜகத்குரு மஹா ஸ்வாமிகள் காலடியி லிருந்து புறப்பட்டு பரலி, கோவை வழியாக 14—5—65 அன்று சத்தியமங்கலம் வந்து சேர்ந்தார்கள். அங்கு சங்கர மடத்தில் மூன்று தினங்கள் தங்கினர்கள். 16ம் தேதியன்று குரு மஹா சன்னிதானங்களை நகர மாந்தர் ஊர்வலமாக அழைத்து வந்து மீனுக்ஷி சுந்தரேச்வரர் ஆலய கல்யாண மண்டபத்தில் வரவேற்புரை வாசித்தளித்தார்கள். ஜகத்குரு மக்களுக்கு அருளுரை வழங்கி அனுக்ரஹம் பண்ணினர்கள். பின்பு கோபிசெட்டிபாளையம் சென்று மாதுஸ்ரீ சுப்ப லெக்ஷிமி அம்மாளால் கட்டப்பட்ட T. S. உயர்தர ஆரம்ப பாடசாலை புதிய கட்டடத்தைத் திறந்துவைத்து அருளுரை நிகழ்த்தினர்கள். அங்கிருந்து ஈரோடு சென்று நான்கு நாள் தாமதித்தார்கள். அதற்குப்பின் பவானி மேட்டூர்

அணை தொளநல்லி, கொடுமுடி, கரூர், திருமாங்கலியூர், சோழவந்தான், தென்கரை, மன்னுடிமங்கலம், முள்ளிப்பள்ளம், மேலக்கால் முதலிய ஊர்களுக்கு விஜயம் செய்தார்கள். எங்கும் அமோகமான வரவேற்பு தான், எங்கும் புத்துணர்ச்சிதான். எங்கும் குதூஹலம்தான். எங்கும் நமதாசார்யாளின் புன் முருவல் பூத்த முகமண்டலத்திலிருந்து வர்ஷிக்கும் அம்ருதவசன உபதேசங்களைக்கேட்டு ஜனங்கள் அடைந்த உத்ஸாகத்தையும், மகிழ்ச்சியையும் எளிதில் கூற முடியாது.

5—6—65ம் தேதியன்று ஜகத்குரு ஸ்வாமிகள் மேலக்காலிலிருந்து கொடைக்கானலுக்கு விஜயம் செய்து பூர்ணகும்ப மரியாதைகளுடன் வரவேற்கப்பட்டு பெரியகுளம் ஸ்ரீ S. ஜயராமய்யர் பங்களாவில் தங்கி ஸ்ரீ சாரதா – சந்த்ரமௌளீச்வர பூஜை செய்தார்கள். 6ம் தேதி கொடைக்கானல் ஏரி முதலான இடங்களைப் பார்த்தார்கள். வானிலை ஆராய்ச்சி நிலையத்துக்கும் விஜயம் செய்தார்கள்.

மேல்மங்கலம் விஜயம் :— ஜூன் மாதம் 7ம் தேதி மாலை 3 மணிக்குக் கொடைக்கானல் மலையை விட்டுப் புறப்பட்டு இரவு 7–30 மணிக்கு மேல்மங்கலம் கிராமத்துக்கு வந்துசேர்ந்தார்கள். 10ம் தேதி முதல் 13ம் தேதி முடிய ஆஸ்திக மஹாஜன சபையின் 28வது ஆண்டு விழாவும், அகில பாரத சங்கர ஸேவா ஸமிதியின் ஆருவது வருஷ வித்வத் ஸம்மேளனமும், பிராஹ்மண இளைஞர் ஸத்ஸங்க இரண்டாவது வார்ஷிகோத்ஸவமும், பரமாசாரியாளின் முன்பு வெகுவிமரிசையாக நடை பெற்றன. ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் ஜகத்குரு பரமாசார்ய ஸ்வாமிகள் தொடக்க உரையும் முடிவுரையும் நிகழ்த்தினார்கள்.

11ம் தேதி காலை 10½ மணிக்கு மைசூர் மஹாராஜா ஸ்ரீ ஜயசாமராஜ ஒடயார் அவர்கள் கிராமத்துக்கு விஜயம் செய்தார்கள். அவர் தமிழ் நாட்டு கவர்னரும்கூட. இத்தகைய வைபவத்தை மேல்மங்கலம் கிராமம் இதற்குமுன் எப்பவுமே கண்டதில்லை. 10ம் தேதி ஸ்ரீ மடத்தில் தர்ம உபநயனங்கள் நடந்தன. 13ம் தேதி காலை கிராமத்திலுள்ள எல்லா ஆலயங்களுக்கும் ஆசார்யாள் விஜயம்செய்து ஸான்னித்யத்தை விசேஷ மாக்கி மஹாஜனங்களை அநுக்ரஹித்தார்கள். 15உ காலை 9 மணிக்கு கிராம மஹாஜனங்களுக்கு மந்த்ராக்ஷதை அளித்து சிருங்கேரி ஜகத்குரு மஹாஸந்நிதானம் குன்னவாரங்கோட்டைக்குப் புறப்பட்டார்கள்.

**குன்னவாரன்கோட்டையில் ஆசார்யாள்:—** ஸ்ரீ சிருங்கேரி ஜகத் குரு 25வது பட்டம் ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதீ மஹாஸ்வாமிகளின் அவதார ஸ்தலமான குன்னவாரங்கோட்டைக்கு 15—6—65 காலை 10 மணிக்கு நமதாசார்யாள் விஜயம் செய்தார்கள். இந்த கிராமம் ப்ரஸித்திபெற்ற வேகவதி என்ற வைகை நதியும், ஹரித்ரா நதி என்ற மஞ்சளாறும் சங்கமமாகும் இடத்தில் நீர்வளம் நிலவளம் நிறைந்து விளங்கும் ஓர் சிற்றூராக அமைந்துள்ளது.

இந்த கிராமத்துக்கு நமதாச்சார்யாள் 15-6-65ம் தேதி விஜயம் செய்த போது ஸ்வாமிகளே உணர்ச்சி வசப்பட்டு சொற்பொழி வாற்றினர்கள். "மைசூரில் உள்ள சிருங்கேரி எங்கே! மதுரையிலுள்ள குன்னவாரங்கோட்டை எங்கே! இந்த கிராமத்திலிருந்து ஒரு மஹான் 300 வருஷங்களுக்கு முன்னல் தனது அருமையான அனுஷ்டான மேன்மையாலும், வேதாத்யயனத் தேர்ச்சியாலும் சிருங்கேரி பீடாதிபதி யாக விளங்கினர் என்பதை நினைக்கும் போது மிக ஆச்சர்யமாகவே இருக்கிறது" என்று தமது அருள் உபதேசத்தை அன்று தொடங் கினர்கள். கிராமத்தின் ஆலயத்திற்குச் சென்று பூஜித்தார்கள். பின் உடுமலைப்பேட்டைக்கு விஜயயாத்திரை தொடங்கினர்கள்.

**நெரூர் கும்பாபிஷேகம்:—** நெரூர் ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மேந்த்ராளை அறியாதவர் யாரும் இருக்கமுடியாது. அவருடைய ஸாஹித்யங்கள் உயர்ந்தரக ஸங்கீதவித்வான்களால் கச்சேரிகளில் பாடப்பட்டுவருகின் றன. சிறுவயதிலேயே பூர்ண வைராக்யத்துடன் குடும்பத்திலிருந்து வெளியேறி, எல்லாவற்றையும் துறந்து, பரமசிவேந்த்ராளிடம் ஸந்யாஸம் பெற்று கிரமமாக ஆத்ம ஸாக்ஷாத்காரத்தையும் அடைந்து கடைசியில் உன்மத்தநிலையில் அவதூதராக பல இடங்களில் சஞ்சரித்துப் பல அற் புதங்களைச் செய்து நெரூரில் ஸமாதியாகிய மஹான் இவர். சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ ந்ருஸிம்மபாரதி ஸ்வாமிகள் தம் யாத்திரையின் போது இங்கு வந்து தரிசித்து ஸ்தோத்திரமும் செய்திருக்கிறர்கள். ஸ்ரீ சந்த்ர சேகர பாரதீ ஸ்வாமிகளும் இப்போதைய மஹா சன்னிதானங்களும் இங்கே விஜயம் செய்துள்ளார்கள். ஸமாதி கட்டடம் முன்னல் உள்ள கோவில முதலியன பழுதுபார்த்தும் புதிதாகக்கட்டப்பட்டும் இருந்தற்கு ஸ்ரீ சிருங்கேரி ஆசார்யாளே வந்து கும்பாபிஷேகம் நடத்தவேண்டும்

என்று மக்கள் யாவரும் ஏகோபித்துத் தீர்மானம் செய்து ஸ்வாமி சதாசிவானந்தரும் கமிட்டியாரும் பிரார்த்திக்க அவர்களும் வேண்டுகோளை அங்கீகரித்தருளினார்கள். அதன்படியே குரு மஹா சன்னிதானம் அவர்கள் நெரூரை நோக்கிப் புறப்பட்டார்கள். வழியில் புகளூருக்குச் சென்று வரவேற்புக்களை ஏற்றுக் கொண்டு நான்கு தினங்கள் தங்கி கிராமத்திலும் சர்க்கரை தொழிற்சாலையிலும் பாதபூஜைகளை அங்கீகரித்து உபந்யாசமும் செய்தார்கள். பிறகு கடம்பங்குறிச்சி, புலியூர் சென்று பின் ஆறு மைல் தூரமுள்ள நெரூருக்குப் பாத யாத்திரையாகவே எழுந்தருளினார்கள். 1–7–65ம் தேதி யன்று விதிப்படி கும்பாபிஷேகம் மிகச்சிறப்பாக நடைபெற்றது, பிரம்மேந்த்ராள் அதிஷ்டானத்தில் ஸ்ரீ ஜகத்குரு அவர்கள் தாமே பூஜை செய்து உபந்யாஸமும் நிகழ்த்தினார்கள். 8–7–65ல் முசிரி தாலுகா கொப்பமாபுரி ஸ்ரீ குங்குமாம்பிகை ஸமேத ஸ்ரீ ஸப்தரிஷீச்வரர் கோவிலுக்கு விஜயம் செய்து அங்கு கும்பாபிஷேகம் சிறப்பாக நடைபெறும்படி அனுக்ரஹித்தார்கள்.

ஸ்ரீ ஜகத்குரு மஹா சன்னிதானம் அவர்கள் 5–7–65 உ நெரூரை விட்டுப்புறப்பட்டு கிருஷ்ணராயபுரத்தில் சற்று தங்கி விட்டு கால் நடையாகவே மஹாதானபுரம் வந்தார்கள். அங்கு பக்தர்களை அனுக்ரஹித்து விட்டு 6–7–65 தேதி திருச்சி விஜயம் செய்து மலைவாசல் மாணிக்க விநாயகர் ஸன்னிதிக்கு எதிர்புறமுள்ள உத்ஸவ மூர்த்தி மண்டபத்தில் தங்கினார்கள். திருச்சி நகரசபையிலும், ஸ்ரீரங்கம் நகரசபையிலும் வரவேற்புப்பத்திரம் வாசித்தளிக்கப்பட்டது. 8–7–65 அன்று திருச்சி தாயுமானவர் ஆலயத்திருப்பணிக்குழுவின் பிரார்த்தனைக்குச் செவி சாய்த்து அங்கு விஜயம் செய்து தமது திருக்கரத்தாலேயே திருப்பணியை ஆரம்பித்து வைத்தார்கள். 11–7–65ம் தேதி சென்னை கவர்னர் திருச்சிக்கு வந்து ஆசார்யாளை தரிசித்தார்.

**சேலம் முகாம்:—** நமதாசாரியாள் 13–7–65யன்று சேலத்தில் உள்ள சிருங்கேரி மடத்தில் இவ்வருஷத்திய வியாச பூஜையும் சாதுர்மாஸ்ய ஸங்கல்பத்தையும் நடத்தினார்கள். 5–9-65ல் ஆரிய வைசிய சமூகத்தாரின் அழைப்பிற்கிணங்கி வாஸவிமஹால் விஜயம் செய்து திரும்பினார்கள்.

**சென்னையில் ஆசார்யாள் :—** அகில பாரத சங்கர ஸேவா ஸமிதியின் ஆதரவில் சென்னையில் ஸஹஸ்ர சண்டியாகத்தையும்,

அதிருத்ர மஹாயாகத்தையும் நடத்துவதாகத் தீர்மானித்து, சில பிரமுகர்கள் சேலத்துக்கு வந்து ஆசார்யாளை தரிசித்து "சென்னைக்கு விஜயம் செய்து நவராத்ரி மஹோத்ஸவத்தை நடத்துவதுடன் ஸஹஸ்ரசண்டி யாகத்தையும், அதிருத்ரத்தையும் சன்னிதானங்களே நேரில் இருந்து நடத்தி வைத்து அனுக்ரஹிக்க வேண்டும் என்று மிகுந்த பக்தியுடன் பிரார்த்தித்தார்கள். அவர்களுடைய பிரார்த்தனைக்கு இசைந்து ஸ்ரீ மஹா சன்னிதானம் அவர்கள் சென்னைக்குத்தாம் விஜயம் செய்வதாக அருளினார்கள். ஸ்ரீ மஹா சன்னிதானம் அவர்கள் அதன்படியே 12-9-65ல் சேலத்தை விட்டுப்புறப்பட்டு பாலக்ரோட், பங்களூர், கோலார், சித்தூர், ராணிப்பேட்டை வழியாக 20-9-65ம் தேதி மாலை சென்னைக்கு விஜயம் செய்து, தியாகராய நகர் சிருங்கேரி மடத்தில் சென்னை மக்கள் திரளாகக் கூடி பெரிய வரவேற்பு அளிக்க அதை ஏற்றுக்கொண்டார்கள்.

வரவேற்புக்கு பதில் அளிக்கையில் "நம் பாரத தேசம் வெற்றியடைய யாவரும் பிரார்த்திக்கும்படியாயும் சென்னையில் நடைபெற இருக்கும் இரண்டு மஹா யக்ஞங்களால் பகவானின் அருள் கிடைத்து அதன் மூலம் யுத்த பீதி விலகி சுபிக்ஷம் ஏற்படும் என்று அருளினார்கள்.

22-9-65ம் தேதி ராஜா அண்ணாமலை புரத்துக்கு விஜயம் செய்து ஸ்ரீவைத்யசுப்ரமணியய்யரின் மாளிகை "நவஸூஜா"வில் தங்கினார்கள்.

26-9-65 முதல் 4-10-65 வரை நவராத்ரி மஹோத்ஸவமும் சிறப்பாக நடந்தது. தினந்தோறும் விசேஷ பூஜைகளும், இரவில் தர்பாரும் நடைபெற்றது. தர்பாரில் ஸப்தசதீ பாராயணமும், சங்கீத நிகழ்ச்சிகளும் நடந்தன. 2 வயது முதல் 10 வயது வரை கன்னிகைகளுக்கும், ஸுவாஸினிகளுக்கும் பூஜை நடந்தது. 200 புடவைகளும் ரவிக்கைகளும் 200 பாவாடைகளும் அளிக்கப்பட்டன. அகில பாரத சங்கர ஸேவா ஸமிதியின் ஆதரவிலுள்ள சென்னை ஸ்ரீ சாரதாமண்டலி அங்கத்தினர்களான பெண்மணிகள் இதற்கு ஏற்பாடு செய்தார்கள். சென்னை நகர ஸுவாஸினிகள் பலர் சேர்ந்து ஒரு நாள் ஸமஷ்டி பிக்ஷை நடத்தினார்கள்.

லோக க்ஷேமார்த்தம் ஸ்ரீ ஜகத்குரு மஹா சன்னிதானங்களின் முன்னிலையில் 30-9-65 ல. முதல் 5 தினங்கள் ஸஹஸ்ரசண்டி யாகம்

நடைபெற்றது. இதற்காகவே புதிதாகத் தயாரிக்கப்பட்ட வெள்ளி ராஜராஜேச்வரி விக்ரஹத்துடனும், சண்டிகா தேவி விக்ரஹத்துடனும் "நவஸூஜா" விலிருந்து ஸ்ரீ ஜகத்குருவை ஊர்வலமாக யாகசாலைக்கு அழைத்து வந்தார்கள். ராஜா அண்ணுமலை புரத்தில் 5 ஏக்கர் நிலப் பரப்பில் இந்த யாகசாலை அமைக்கப்பட்டு விசேஷமாக அலங்கரிக்கப் பட்டிருந்தது. இதற்காக பாரத நாட்டின் பல பாகங்களிலிருந்தும் வர வழைக்கப்பட்டிருந்த மந்த்ரோபாஸனையில் மிகத்தேர்ச்சி பெற்ற 100 ருத்விக்குகள் யாகத்தை நடத்தினுர்கள்.

யாகசாலையின் நான்கு வாசல்களுக்கும் தெற்கு, மேற்கு, வடக்கு, கிழக்கு ஆம்னுய மடங்களான சிருங்கேரி, துவாரகை, பதரி, புரி, என்று பெயரிடப்பட்டிருந்தது. நான்கு நாட்களில் 100 ருத்விக்குகளும் சேர்ந்து 1000 ஆவிருத்தி ஸப்தசதீ பாராயணமும் அநேக மஹா மந்த்ர ஜபமும் செய்த பிறகு 4–10–65 அன்று ஸப்தசதீ மந்த்ரங்களால் 10 குண்டங்களில் சண்டீ ஹோமம் நடைபெற்றது. ஹோமம் முடிந்த பிறகு ஸ்ரீ ஜகத்குரு மஹாஸ்வாமிகள் ஸந்நிதியில் பட்டுப்புடவைகள், ரவிக்கைகள், வஸ்த்ரங்கள், திருமாங்கல்யம், தங்க வெள்ளி காசுகள், ரத்னங்கள், ஆபரணங்கள், தேங்காய், பழவர்கங்கள், (கூடை கூடையாக) மஞ்சள் குங்குமம், வாஸனை த்ரவ்யங்கள், முதலியவை பூர்ணுஹூதியில் அம்பாளுக்கு ஸமர்பிக்கப்பட்டன. அங்கு குழுமியிருந்த லக்ஷக்கணக்கான ஜனங்களும் பக்தி பரவசமாகி மெய்மறந்திருந்தனர். "யக்ஞம் என்பது பலர் சேர்ந்து நடத்துவது எல்லோரும் சேர்ந்து அம்பாளைப்பிரார்த்திப்பதாக இது அமைந்துள்ளது. மஹிஷாஸூரன் முதலிய துஷ்டர்களை அழித்து பராசக்தி உலகிற்கு சாந்தியைக் கொடுத்த கதையை வர்ணிப்பதுதான் தேவீ மாஹாத்ம்யம் என்பது. இந்த மந்த்ரங்களால் இங்கு நடத்திய யக்ஞத்தால் தேவியின் கிருபை உண்டாகி யுத்தம் மறைந்து எங்கும் சாந்தி நிலவும். இதை நடத்தியதன் மூலம் சென்னை மக்கள் தமக்கும், பாரத நாடு முழுவதற்கும் பேருதவி செய்துள்ளார்கள்" என்று ஸ்ரீ ஜகத்குரு மஹா ஸ்வாமிகள் திருவாய் மலர்ந்தருளினுர்கள். சென்னையில் நடந்த வைபவங்களில் ஸ்ரீ C. P. இராமசாமி அய்யர், ஸ்ரீ K. R. சுந்தரமய்யர், ஸ்ரீ T. L. வேங்கடராமய்யர், ஸ்ரீ V. வைத்யசுப்ரமண்யய்யர், ஸ்ரீ P. S. சுப்ரமணியய்யர் போன்ற

பிரமுகர்களுடையவும் சென்னை கவர்னர் (மைசூர் மஹாராஜா) அவர்களுடைய ஈடுபாடும், முயற்சியும் போற்றத்தக்கன.

இம்மாதிரியான ஸஹஸ்ரசண்டியாகம் சிருங்கேரியில் பலதடவை நடத்தியிருந்தாலும் வெளியூரில் நடப்பது இதுவே முதல்தடவையாகும். சதசண்டியாகம் நவராத்ரிதோறும் நடக்கும். ஆனால் ஸஹஸ்ரசண்டி யாகம் இம்மாதிரி நடந்தது இதுவே முதல்தடவை என்பதை மறுபடியும் கூறுவோம். இந்த மஹாயக்ஞத்தை நடத்திவைத்தவர்களும், தரிசித்த வர்களும், நடத்த ஏற்பாடுசெய்த பிரமுகர்களும் பூர்ணாஹுதி சமயத்தில் அடைந்த மனோநிலை வர்ணிக்க இயலாது. இத்தகைய மஹத்தான காரியம் நடைபெற முன்னின்று ஏற்பாடு செய்த கமிட்டி அங்கத்தினர் களும் உதவிபுரிந்த யாவரும் நமது நாட்டுக்கே அரிய சேவை செய்துள்ளார்கள்.

சென்னையில் நடைபெற்ற நவராத்ரி உத்ஸவம் 26-9-65ல் ஆரம்பித்து 5-10-65ல் முடிவடைந்தது. இந்த 9 தினங்களிலும் பகல் 12 மணிக்கும் இரவு 9 மணிக்கும் ஸ்ரீ மஹா சன்னிதானமே பூஜை நடத்தினர்கள். இரவு 9½ மணிக்கு தர்பார் நடைபெற்றது. தர்பாரின் விமர்சையைக்கூறுவது அவ்வளவு லகுவல்ல. கைலாயபதியே தர்பார் நடத்துகின்றாரோ? ஸ்ரீ வைகுண்டவாஸனே தர்பார் நடத்துகின்றாரோ? இந்திரன் தர்பாரோ? என்னென்று கூறுவது? மின் விளக்குகளால் அலங்காரம் செய்யபட்ட பந்தலும், பூஜா மேடையும், தர்பார் ஸிம்மாஸனமும் குழுமியிருந்த ஜனங்களின் உத்ஸாகமும் யாவற்றுக் கும் மேலாக ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு மஹா ஸ்வாமிகளின் தேஜஸ் நிரம்பிய முகமண்டலமும் அவர்களுடைய திருவாக்கும், வர்ணிக்க முடியாத வகையில் அமைந்திருந்தன. தர்பாரில் நடந்த கலா நிகழ்ச்சிகள் யாவரையும் மகிழ்வித்தன. இந்த கோலாகலமான மஹோத்ஸவம் 5-10-65ம் தேதி இரவு நவஸூஜாவிலிருந்து ஸ்ரீ சாரதாம்பிகையை புஷ்பப்பல்லக்கில் எழுந்தருளப்பண்ணி, ஸ்ரீ ஜகத்குரு மஹாஸ்வாமிகள் ஸ்ரீ சாரதா தேவியைப் பார்த்த வண்ணமே பினபுறமாக நடந்து செல்ல வேத கோஷம், பஜனை, குளிக்கரை பிச்சையப்பா நாதஸ்வரம், வாண வேடிக்கைகளுடன் பவனி மிகச்சிறப்பாக நடைபெற்று 10 மணிக்குத் திரும்பி வந்து முடிவடைந்தது. மஹா ஸன்னிதானம் அவர்கள்

எல்லோரையும் அனுக்ரஹித்தார்கள். ராஜா அண்ணாமலைபுரத்தில் ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு முன்னிலையில் 12உ அதிருத்ர மஹா யக்ஞம் ஆரம்பித்தது. யாகசாலை நவஸுஜானவை அடுத்து அமைக்கப்பட்டிருந்தது. 23உ பூர்ணாஹுதியுடன் முடிவுற்றது. 121 ரித்விக்குகள் இதில் கலந்துகொண்டனர். ஆரம்பத்தில் இதற்காகவே தயாரிக்கப்பட்ட ஸ்ரீ உமா மஹேச்வரர் வெள்ளி விக்ரஹத்தை ஸ்ரீ ஜகத்குரு முன் செல்ல மேளதாளங்களுடன் ஊர்வலமாக யாகசாலைக்குக் கொண்டு வந்து நடுவில் பிரதிஷ்டை செய்யப்பட்டது. மஹா ஸங்கல்பம், ருத்விக்வரணம் இவை ஆனபின் ஸ்ரீ ஜகத்குரு மஹாஸ்வாமிகள் துவக்க உரை நிகழ்த்தினார்கள். "மிகச்சிறந்த இந்த யாகம் தீமைகளை விலக்கி நன்மைகளைத் தரும் சக்தி வாய்ந்தது. ஆனால் செய்கிறவர்களுக்கு மிகுந்த சிரத்தை இருக்கவேண்டும். சரீரசுத்தி மனஸ் சுத்தி, பக்தி இவற்றுடன் இதில் ஈடுபடவேண்டும். ருத்விக்குகள் இதனை நன்கு உணர்ந்து செவ்வனே நடத்தவேண்டும். இதன் மூலம் நம் நாட்டின் தொல்லைகளெல்லாம் அகன்று எங்கும் அமைதி நிலவுவதுடன் ஸுபிக்ஷமும், பக்தி முதலிய நற்பண்புகளும் பெருகி உலகிற்கே வழி காட்டியாக பாரதம் என்றென்றும் விளங்கும்படி ஈச்வரன் அருள் புரியட்டும்"

அதிருத்ரயக்ஞத்துடன் கோடி அர்ச்சனைகளும் லக்ஷ்மீஹோமம் புருஷ ஸூக்த ஹோமம் முதலியவைகளும் நடந்தன. மத்தியில் நான்கு நாட்கள் ஸ்ரீ ஜகத்குருவின் திவ்ய ஸந்நிதியில் வித்வத் ஸதஸ்ஸும் நடைபெற்றது. ந்யாயம், வேதாந்தம், வியாகரணம், மீமாம்ஸா முதலான சாஸ்த்ரங்களில் தினமும் விவாதம் நடைபெற்றது. அநேக பிரபல வித்வான்கள் நாட்டின் பல பகுதிகளிலிருந்து வந்து இந்த ஸதஸ்ஸில் பங்கெடுத்துக்கொண்டனர்.

நமது ஆசார்யாளின் 49வது பிறந்த தின விழா (வர்த்தந்தி மஹோத்ஸவம்) 23—10—65உயன்று கொண்டாடப்பட்டது. பகலில் கணபதி ஹோமம், ஆயுஷ்யஹோமம், அதிருத்ர வஸோர்தாரை, பூர்ணாஹுதி ஸந்தர்ப்பணை முதலான வைபவங்கள் யதோக்தமாய் நடந்தேறின. அன்று மாலை ஸ்ரீ ஜகத்குரு மஹாஸ்வாமிகளுக்கு அஞ்ஜலி செலுத்துவதற்காக மேன்மைதங்கிய தமிழ்நாடு கவர்னர் ஸ்ரீ ஸ்ரீ ஜயசாம

ராஜ ஒடயார் மஹாராஜா அவர்களின் சீரிய தலைமையில் ஓர் பொதுக் கூட்டம் நடைபெற்றது. ஏராளமான பக்தர்களும் சிஷ்யர்களும் திரளாகக் குழுமியிருந்தனர். வேதகோஷத்துக்குப் பின் "பஞ்சதசீ" கட்டுரைப் போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்கும் ருத்ரம், சமகம், உபநிஷத் இவற்றில் தேர்ச்சிபெற்ற மாணவர்களுக்கும் பரிசுகள் வழங்கப்பட்டன.

ஸ்ரீ ஜகன்மாதாவுக்கு கனகாபிஷேகம் செய்யப்பெற்ற 49 பொற் காசுகளையும் 5000 ரூபாயையும் தற்காப்பு நிதிக்காக ஸ்ரீ ஜகத்குரு ஸ்வாமிகள் முதன்மந்திரி ஸ்ரீ பக்தவத்ஸலத்திடம் கொடுத்தார். அதோடு ஸஹஸ்ரசண்டீ அதிருத்ர மஹாயாகப் ப்ரஸாதங்களை போர்முனையிலிருக் கும் ஜவான்களுக்கு அளிப்பதற்காக முதன்மந்திரி பெற்றுக்கொண்டார். தலைவர் ஸ்ரீ ஸ்ரீ ஜயசாமராஜ ஒடயார் மஹாராஜா அவர்கள், ஸ்ரீ T. L. வெங்கடராமய்யர், ஸ்ரீ ராஜா. ஸர். முத்தையா செட்டியார் முதலியோர் ஸ்ரீ ஜகத்குருவின் திவ்ய மஹிமைகளைப்பற்றி சொற்பொழிவாற்றினர். சில புஸ்தகங்கள் வெளியிடப்பட்டன. ஸ்ரீ ஸஹஸ்ரசண்டீ, அதிருத்ர யக்ஞங்கள் நடந்த மிகப் புனிதமான ஸ்தலத்தில் பொதுமக்கள் உபயோ கத்துக்காக ஓர் பிரார்த்தனு மண்டபம் கட்டுவதற்காக இம்மனையை வழங்கியுள்ளதாக ஸ்ரீ வைத்யஸுப்ரமண்யய்யர் அறிவித்தார். கட்டடச் செலவுக்காக ஸ்ரீ ராஜா. ஸர். முத்தையா செட்டியார், ஸ்ரீ வைத்யஸுப்ர மண்ய அய்யர், ஸ்ரீ K. R. சுந்தரமய்யர் முதலானேர் 12,000 ரூபாய் அளித்தார்கள். இத்துடன் வர்த்தந்தி மஹோத்ஸவம் முடிவுற்றது.

27ம் தேதி நமதாசாரியாள் முன்னிலையில் கோடம்பாக்கத்தில் ஸ்ரீ K. R. சுந்தரராஜன் இஞ்ஜினீரிங் கலாசாலை மனையில் புதிய சாரதாம்பாள் கோயில் நிர்மாணம் பண்ணுவதற்கு சென்னை உயர் நீதிமன்ற பிரதம நீதிபதி ஸ்ரீ P. சந்த்ரா ரெட்டி அடிக்கல் நாட்டினர். ஸ்ரீ ஜகத்குரு ஆசார்யாள் ஆசீர்வதித்தார்கள்.

27—11—65 சனிக்கிழமை காலை 10-45க்கு தியாகராய நகர் ஸ்ரீ சிருங்கேரி மடத்திலிருந்து ஸ்ரீ ஜகத்குரு மஹா ஸ்வாமிகள் திருவல்லிக்கேணிக்கு விஜயம் செய்தார்கள். அங்கு நல்ல தம்பி தெருவில் அமைந்திருக்கும் ஸ்ரீ சுப்ரமண்ய அய்யர் கல்யாண மண்டபத்

தில் திருவல்லிக்கேணி ஆஸ்திகப்பிரமுகர்கள் மஹா ஸ்வாமிகளை பூர்ணகும்ப மரியாதையுடன் வரவேற்று உபசாரப்பத்திரங்கள் வாசித்தளித்தனர். 27, 28, 29. ஆகிய மூன்று தினங்கள் அங்கு ஸ்ரீ ஜகத்குரு தங்கி அருளினுர்கள். மூன்று நாட்களிலும் பாத பூஜையும், பிக்ஷாவந்தனமும் பல அன்பர்களால் மிகச் சிறப்பாக நடத்தப்பட்டன. திருவல்லிக்கேணி வாஸிகளான பல வைதிகர்கள் ஒன்று கூடி முதல் நாள் பிக்ஷாவந்தனம் நடத்தியது குறிப்பிடத்தக்கது. 29ம் தேதி பூஜைகுப்பின் தியாகராயநகருக்கு எழுந்தருளினுர்கள்.

சென்னை அண்ணுமலைபுரத்தில் பிரவசனமண்டபம் அமைப்பதற்கு 5—12—65 அன்று சென்னை கவர்னர் ஸ்ரீ ஸ்ரீ ஜயசாமராஜ ஒடயார் அடிக்கல் நாட்டினுர். நமதாச்சார்யாள் இவ்விழாவுக்கு விஜயம் செய்து ஆசி கூறி அனுக்ரஹித்தார்கள். இந்த மண்டபத்துக்கு "ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு பிரவசன மண்டபம்" என்று பெயர் சூட்டப்பட்டது. இந்த பிரவசன மண்டபத்தில் ஸ்ரீ விக்னேசுவரர், ஸ்ரீ சாரதாம்பாள், ஸ்ரீ சங்கரர் சன்னிதிகளும் இருக்கும்.

பிறகு காஞ்சியில் முகாம் செய்து அங்குள்ள முக்கிய தேவாலயங்களைத் தரிசித்துவிட்டு அரக்கோணம் சென்றுர்கள்.

## ஆந்திரப் பிரதேசத்தில் ஜகத்குரு விஜய யாத்திரை

சென்னை மாநகரைவிட்டு ஸ்ரீ ஜகத்குரு ஆசார்யாள் ஆந்திரத்தில் விஜய யாத்திரையை தொடங்கினுர்கள். டிஸம்பர் 17உ கடப்பையில் முகாம் பண்ணினுர்கள். டிசம்பர் 20உயில் புரோதத்தூருக்கு விஜயம் செய்த ஜகத்குரு மஹா ஸன்னிதானங்களுக்கு ஊர் மஹா ஜனங்கள் உற்சாகமாக வரவேற்பளித்தார்கள். தெலுங்கிலும் ஸம்ஸ்கிருதத்திலும் வரவேற்புப் பத்திரம் வாசித்தளிக்கப்பட்டன. ஸ்ரீ அகஸ்தீச்வர ஆலயத்தில் ஸ்ரீ ஜகத்குரு மஹாஸ்வாமிகள் 20உ இரவில் ஸ்ரீ சாரதா-சந்த்ர மௌளீசுவர பூஜை செய்தார்கள். ஏராளமான பக்தர்கள் தரிசித்துப் பரவசமடைந்தனர். 21—12—65 கர்நூல் ஜில்லாவிலுள்ள அல்லகட்டாவுக்குப் புறப்பட்டார்கள். அங்கு மக்கள் அமோகமான வரவேற்பு அளித்து மகிழ்ந்தார்கள்.

25—12—65 தேதியன்று கர்நூலுக்கு விஜயம் செய்தார்கள். அங்கு ஸ்ரீ ராமர் ஆலயத்தில் தங்கி இருந்து ஆயிரக்கணக்கான பக்தர்களை அனுகிரஹித்துவிட்டு அதோனிக்கு புறப்பட்டுச்சென்றார்கள்.

அதோனியில் கர்நூல் டிவிஷன் அறநிலய உதவி ஆணையாளரும் ஏனைய அதிகாரிகள், பிரமுகர்கள், வர்த்தகர்கள், பொதுமக்கள் ஒருங்கே திரண்டுவந்து பூரணகும்ப மரியாதையுடன் வரவேற்று வேத கோஷங்கள் முழங்கக் கல்யாண மண்டபம் வரை ஊர்வலமாக அழைத்து வந்தனர். மண்டபத்தில் குற்றாலம் ஸ்ரீ சித்தேச்வர பீடாதிபதிகள் ஸ்வாமிகளைச் சந்தித்தார். இருவரும் மேடையில் அமர்ந்திருந்தனர். வரவேற்புரைகள் வாசித்தளிக்கப்பட்டன. மனிதனாய் பிறந்தவன் செய்யவேண்டியது என்ன அதைச் செய்வதற்கு எந்த விதமான சாதனைகளைக் கைப்பற்ற வேண்டும், இறைவனிடம் பக்தி செலுத்தினால் சுலபமாய் மோட்சமடையலாம் என்ற முறையில் உபதேசம் செய்தார்கள். 27உ மாலை பிரபல சக்திக்ஷேத்திரமாகிய ஆலம்பூருக்கும், 28உ மாலை கத்வாலுக்கும், 29உ மாலை வனபரத்திக்கும் விஜயம் செய்துவிட்டு 30—12—65 ஜகத்குரு மஹாசன்னிதானம் அவர்கள் ஹைதராபாத்திற்கு விஜயம் செய்தார்கள்.

---